அனைத்திந்திய நூல் வரிசை

# விஷக்கன்னி

(மலையாள நாவல்)

எஸ். கே. பொற்றேக்காட்

தமிழாக்கம் :
குறிஞ்சிவேலன்



நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

ஊக்குவிப்பாளர் விற்பனையாளர்
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்,
41-பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை-600 098.

1991 ( சக 1913 )



ரூ. 28.00

Original Title : Visha Kanyaka (Malayalam)
Tamil Title : Vishakanni (Translated by Kurinjivelan)

வெளியீடு : டைரக்டர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா,
எ-5, கிரீன் பார்க், புது டில்லி 110 016.

# முன்னுரை

'இந்துலேகா', 'சாரதா' என்னும் சமூக நாவல்களின் படைப்பாளியான ஓ.சந்துமேனனும், 'மார்த்தாண்ட வர்மா', 'தர்மராஜா', 'ராமராஜ பஹதூர்' என்னும் சரித்திரம் நாவல்களின் படைப்பாளியான சி. வி. ராமன் பிள்ளையும்தான் மலையாள நாவல் இலக்கியத்தின் ஆரம்பகாலச் சிற்பிகளாவர். 1889-ல் இந்துலேகாவின் முதல் பதிப்பு வெளிவந்தது. அதைத் தொடர்ந்த சில பத்தாண்டுகளில் சந்துமேனனையும், சி. வி. யையும் பின்பற்றி யோ, போலியாகவோ எழுதிய சில எழுத்தாளர்கள்தான் நாவல் அரங்கில் உலவினார்கள் என்றாலும் வித்தியாசமான, புதுமை யான ஓர் உருவம் நாவலுக்கு உண்டென்று மலையாளிகளுக்குப் புரிய வைத்தது. அதற்கடுத்த தலைமுறையைச் சேர்ந்து சில நாவலாசிரியர்கள்தான்.

இந்த இரண்டாம் தலைமுறையின் முன்னணியில் நிற்பவர்கள் பி. கேசவ்தேவ், தகழி சிவசங்கரப் பிள்ளை, வைக்கம் முகம்மது பஷீர், எஸ். கே. பொற்றேக்காட், உரூபு (பி. ஸி. குட்டிக் கிருஷ்ணன்) ஆகியோர் சொந்தமான தனித்துவரும், பிரத்தியேக மான வாழ்க்கை நோக்கும், இலக்கிய நடையும் உள்ளவர்களாகத் தமது படைப்புகளின் மூலம் அறிமுகமானவர்கள், இவர்கள்.

முதல் உலகப்போரும் அக்டோபர் புரட்சியும் உலகை ஆட்டிக் கொண்டிருந்த இந்த நூற்றாண்டின் இருபதுகள், பழைய நம்பிக்கைகளின் வீழ்ச்சிக்கும், புதிய எதிர்பார்ப்புகளின் வளர்ச்சிக்கும் சாட்சியமாக விளங்கிய காலகட்டம். அப்போது, திலகரும், காந்திஜியும் மற்ற தேசியத் தலைவர்களும் சேர்ந்து பற்ற வைத்ததால், பிரகாசித்த சுதந்திர உணர்வும், மார்க்ஸின் தத்துவங்களும் கேரளத்திலுள்ள அறிவுஜீவிகளின் சிந்தனை யுலகில் மாற்றங்களை உண்டாக்கின. புதியதொரு நுண்ணறிவின் சிவந்த மொட்டுகள் அவர்களுடைய கதைகளிடையே தோன்றி

அவற்றுக்கு மெருகூட்டின. சுதந்திர தாகம், வியக்கத்தக்க புதுமையான ஓர் உலகத்தைப் பற்றிய கனவு, ஏழைகளின் வாழ்க்கைப் போராட்டம் பற்றிய பிரக்ஞை, சமூக அநீதிகளுக் கெதிரான சீற்றம் அகியவை இவர்களுடைய கதைகளில் காணப்படும் பொதுவான அம்சங்கள். இந்தப் பொதுத்தன்மை களிடையே சில முக்கிய வேறுபாடுகளும் இவர்களுடைய கதைகளில் உண்டு.

இந்தக் குழுவைச் சேர்ந்த எஸ். கே. பொற்றேக்காட் கதாசிரியரும் நாவலாசிரியரும் மட்டுமல்லாமல், கவிஞரும் பயணக் கட்டுரையாளருமாவார். எதை எழுதினாலும் திறம்பட எழுதும் இவர் ஆஸ்திரேலியா தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் பயணம் செய்துள்ள ஓர் உண்மையான ஆராய்ச்சியாளர். மனித வாழ்வின் பலவகை விசித்திரங்களிடையே, தேச, மொழி, மதப் பிரிவுகளுக்கு இடையே தன்னலமற்ற சாதாரண மனிதனை இவர் இந்த ஆராய்ச்சிகளுக்கிடையில் கண்டுபிடித்துள்ளார். இதனைப் பயணக் கட்டுரைகளின் வாயிலாகக் காட்டியுமுள்ளார். மலையாள மொழியின் பயண இலக்கியத்தை வளப்படுத்தியுள்ளவர்களில் இவர் மிக முக்கியமானவர்.

இடையறாத பயணங்களினால் உலகின் பலவகைப்பட்ட மக்களுடனும், பலவகைப்பட்ட கலாசாரங்களுடனும் அவரால் தொடர்பு கொள்ள முடிந்ததென்றால் ஒரு படைப்பாளியென்ற முறையில் அவருடைய வேர்கள் தம் சொந்த மண்ணிலேயே நிலைத்துள்ளன. திரு. பொற்றேக்காட்டின் மிகப்பெரிய நாவலான 'ஒரு தேசத்தின் கதை' இதன் நிரூபணமாக விளங்குகிறது. 'நாடன் பிரேமம்', 'பிரேம சிட்சை', 'கரும்பு' என்னும் சிறு நாவல்கள் கற்பனைப் பாடல்களைப் போல் அழகும் கவர்ச்சியும் கொண் டவை. 'மூடுபடம்' பெரிய கேன்வாசில் எழுதப்பட்ட நாவல். கேரள மண்ணிலிருந்து பம்பாய்க்குச் சென்ற, ஏழ்மையும் எளிமையுமான சில மனிதர்கள், வகுப்புக் கலவரம் தூண்டிய பெரும் துன்பத்தில் மூழ்கிப் போகும் ஆழ்ந்த துக்கக் கதை இதிலுள்ளது. முன்னமேயே சுட்டிக் காட்டிய ஒரு தேசத்தின் கதை' வேர்களுக்கான தேடலாகும். தம்முடைய வாழ்வின் பெரும்பகுதியை அவர் எந்தெந்த நகரங்களில் கழித்தாரோ, அந் நகரங்களின் உண்மை முகங்களையும், பொய் முகங்களையும் 'ஒரு தெருவின் கதை' என்னும் மற்றொரு நீண்ட நாவலில் இவர் சித்திரித்துள்ளார். கிராமீய வாழ்க்கையின் நேர்மையும் கபடமற்ற தன்மையும்,

நகரத்தின் இயந்திரத் தன்மையும் கபடமும், அயல்நாட்டுப் பெரும் நகரங்களுடைய வாழ்க்கை முரண்பாடுகளும், ஆரவாரங்களும் கலந்திருக்கும் திரு. பொற்றேக்காட்டின் நாவல்களுக்கிடையே '**விஷக்கன்னி**' இயல்பிலும் சற்றே வித்தியாசமானது.

சுதந்திரம் அடைவதற்கு முன்பு, கேரளம் மூன்று ஆட்சிப் பகுதிகளைக் கொண்டது. திருவிதாங்கூர், கொச்சி என்னும் இரு நாடுகளும், சென்னை மாகாணத்தின் பிரிவாக மலபார் மாவட்டமும் இருந்தது. சுதந்திரத்துக்கு முந்தைய ஆண்டுகளில் திருவிதாங்கூர் பகுதியைச் சேர்ந்த, பாவப்பட்ட சில கிறிஸ்துவ விவசாயிகள் தங்களிடமிருந்த சொற்ப உடைமைகளை விற்று, மூட்டைக்கட்டிக் கொண்டு வடக்கு. பிரதேசமான மலபாரிலுள்ள வயநாடன் மலைப் பிரதேசத்துக்குக் குடியேறத் தொடங்கினார்கள். அங்கே, மனிதக் காலசுவடுகள் பதியாத செழிப்பான பள்ளத்தாக்குகள் அவர்களுடைய யாக பூமியாயிற்று. கன்னித் தன்மை மாறாத மண்ணை உழுது, அதை மேலும் கீழும் மடித்து விட்டால், புதிய செழிப்பையும் செல்வத்தையும் பெற்று விடலாமென்ற எதிர்பார்ப்பு, அவர்களை அந்த அவசர முடிவுக்குத் தூண்டிற்று. பருவக் காலங்கள் அறிந்து, தேசம் விட்டு தேசம் செல்லும் பறவைகளைப்போல், கூட்டங்கூட்டமாக இந்தப் பாவப்பட்ட விவசாயக் குடும்பங்கள் ஒழுங்கான வரிசையில், ஒருவர்பின் ஒருவராக நடந்து சென்று சேர்ந்தார்கள். ஓர் அர்த்தத்தில் பார்த்தோமானால், 'சொந்த இடத்தைத்' தேடிச் செல்லும் பயணமாக அது இருந்தது. ஆமாம், வயநாடு அவர்களுடைய 'சொந்த இடமாகத்' (பொய்க்காத பூமியாக) தான் அமைந்துவிட்டது.

கொடுங்குளிரும், மலேரியாவும், காட்டு மிருகங்களும் ஒன்று சேர்ந்து வியூகம் அமைத்து அவர்களை எதிர்த்தன. அவர்கள் அந்தச் சவாலை ஏற்றுக் கொண்டு, மலையை வெட்டி, சமனப் படுத்தி, அதைப் பல அடுக்குகளாக்கி, மரவள்ளிக் கிழங்குமுதல் வாசனைத் திரவியங்கள் வரை பயிர் செய்யும் மகத்தான யாகத்தினுள் புகுந்தார்கள். ஆனால், பலரும் அந்த யாகத்திலேயே எரிந்து சாம்பலாகிவிட்டார்கள். தோகை விரித்தாடும் மயில்களைப்போல மூங்கில் காடுகள் விசில் ஓசையுடன் காற்றில் அசைந்து ஆடுகின்ற. இரவு நேரங்களில் மின்மினிகள் பறந்து திரிந்து கூடுகின்ற அந்த மனோகரமான மலைக்காட்டுச் சரிவுகளில், இயற்கையின் தயாளத்தையும் கொடூரத்தையும் அவர்கள் ஒருசேரக்

கண்டார்கள். மனிதன் இயற்கையுடன் நடத்திய கூட்டுவாழ்க் கையில், அது அவனுக்குத் தந்த போதையையும் துன்பத்தையும் இந்த நாவலில் திரு. பொற்றேக்காட் காவிய மணங்கமழும், தெளிவான நடையில் அளித்துள்ளார்.

இன்பக் கவர்ச்சியுடன் கண் சிமிட்டி அழைக்கவும், ஆபத்தான முத்தத்தை அர்ப்பணிக்கவும் செய்யும் ஒரு விஷக்கன்னிதான் அந்தக் காடும், அந்தக் கன்னி நிலமும். இந்த விஷயத்தில் அந்த கன்னியுடன் போட்டியிடுகின்ற ஒரு கதாபாத்திரம் இந்நாவலில் உண்டு; பெயர் மாதவி. அந்த மண்ணில் லயித்த ஒரு குண இயல்பை இத்தக் கதாபாத்திரங்களின் வழியாக உருவாக்கியிள்ளார் நாவலா சிரியர். விஷக்கன்னியின் பெருமூச்சுப்பட்டு வீழ்ந்தவர்களும் விழாமல் நின்றவர்களுமாக கதாபாத்திரங்களின் ஒரு நீண்ட வரிசை நம் முன்னால் கடந்து செல்கின்றது. அவ்வாறு, 'சொந்த இடத்தைத்' தேடிப் போனவர்களின் இதிகாசம்தான் இந்த நாவல். ஒரு புவிப் பாகத்தின் வரலாற்றுக் கதையுமாகும் இது. திரு. பொற்றேகாட் நாவலுக்கு ஒரு கவிதை வடிவ அழகை அளித்துள்ளார். ஒரு பெருங்கடலுக்குச் சிறிது தூரத்தில் நின்று, அதனுடைய கம்பீர ஓசையைக் கேட்பதுபோல், ஜீவிதப் பெரும் பிரளயத்தின் சங்கீதம் இதில் முழங்குவதை நாம் கேட்கலாம்.

திரு. பொற்றேக்காட்டின் கதை முடிவில்லாத கவிதையாகும். "மொழி பெயர்ப்பில் தடுமாற்றங் கொள்வது எதுவோ அதுதான் கவிதை" என்று நாம் சொல்வதுண்டு. அதில் திரு. பொற்றேக் காட் தன் மொழியின் வழியே தெளிவாக்கியுள்ள சங்கீதம் மொழி மாற்றத்தில் சோர்ந்து போகலாம். ஆனால், இதில் ஒரு 'சாதாரண மனிதனின்' சித்திரமும் உண்டு. எந்த மொழியாக இருந்தாலும், இந்தச் சித்திரத்தின் ஒளி நஷ்டமடையாது என்று நாம் சமாதானமடையலாம்.

பல்கலைக் கழகம், - ஓ. என். வி. குரூப்.
திருவனந்தபுரம், 1.12.80.

# விஷக்கன்னி

## 1

மத்திய திருவிதாங்கூரில் ஒரு மூலையிலுள்ள ஒரு மலைச் சரிவுக்கும், விசாலமானதொரு வயலுக்கும் நெளிந்து செல்லும் காட்டுப் பாதையின் திருப்பத்தில் ஒரு மாட்டுவண்டி, குலுங்கிக் குலுங்கி வருகின்ற சப்தம் கேட்கத் தொடங்கியது. சிறிது நேரம் கழிந்ததும் அந்த வண்டி வயலில் முகப்பில் நேரிடையாகக் காணத் தொடங்கியது.

அந்த வண்டி நிறைய வீட்டுச் சாமான்கள் இருந்தன. பெட்டி, படுக்கை, செம்பு பாத்திரங்கள், சீனாச்சட்டி, தகர விளக்கு, தாழம்பாழ், கோழிக்கூண்டு, கிணற்று ராட்டினம், கயிறு, சல்லடை, தட்டி போன்றவற்றுடன் வேண்டிய அளவுக்கு வேலி கட்டும் சாமான்களும் அந்தக் கட்டை வண்டியின் மேல்கூரை முட்டும் அளவிற்குத் திணித்து வைக்கப்பட்டிருந்தன.

வண்டியின் பின்னால் மக்கள் கூட்டம் ஒன்றும் வந்து கொண்டிருந்தது. குழந்தைகளை மார்பில் அணைத்துக்கொண் டிருந்த தாய்மார்களும், குடுகுடு கிழவர்களும், தத்தித் தத்திப் பாய்கின்ற சிறுவர்களும், வயதுவந்த இளம் பெண்களும், படை வீரர்களைப் போன்று 'மார்ச்' செய்து வருகின்ற சுறுசுறுப்புள்ள இளைஞர்களும் கலந்த ஒரு விசித்திரக் கூட்டம் அது. அவர்களில் ஒவ்வொருவருத்தருடைய இடுப்பிலும் ஒவ்வொரு மூட்டையும் இருந்தது. அவர்களின் தலைவனென்று ஊகிக்கக்கூடிய ஒரு நடுத்தர வயதானவன்-கருப்புக் கோட்டும், கோட்டின்மேல் ஒரு சரிகை வேட்டியும், பச்சைக் கண்ணாடியும் அணிந்த ஒரு குள்ளன்-வண்டியில் அடிப்பலகையைத் தொட்டுக்கொண்டு இடையிடையே வண்டிக்குள்ளே எட்டிப்பார்த்து வண்டியுடனேயே வந்தான்.

"பாச்சுப்புள்ள, வண்டி கொஞ்சம் சாஞ்சிருக்கு போலிருக்கே? லக்கேஜ் கீழே உருண்டுடப் போவுது. ஜாக்கிரதையாப் பாத்துக்க."

"நீங்க சும்மா இருங்க வர்க்கி சார். இங்க பாச்சுப் புள்ளயில்ல இருக்கேன். நெறய புதுக்கொடங்கள ஏத்திக்கினு பத்து மைல் தூரங்கூட போயிருக்கேன். ஒரு ஒத்தக் கொடங்கூட ஒராய்ஞ்சது இல்ல. அப்படியிருக்கம்போது இந்த ஒடஞ்ச மரச் சாமானுங்க தானா...." வண்டியின் தப்பைக் கழியில் கால் மடக்கி உட்கார்ந்து, வெற்றிலையில் சுண்ணாம்பு தடவிக்கொண்டிருந்த வண்டிக்காரன் பாச்சுப்புள்ள சிரித்துக்கொண்டே உரக்கச் சொன்னான்.

அந்த வண்டியும் ஜனங்களும் செரியானின் மரக்கடையின் அருகில் வந்து சேர்ந்தனர். செரியான், கடையின் இரவாணத்தைப் பிடித்துக்கொண்டு ரோட்டைக் குனிந்து பார்த்தான்.

"முண்டக்காயம் வர்க்கியண்ணனும் அவுரு கூட்டத்தரும் வராங்க. ஒன்னோட மாமியும் உண்டுடி" என்று செரியான் தம் மனைவியை அழைத்துச் சொன்னான்.

செரியானின் மனைவி மரியம் வீட்டில் உள்ளே கிழங்குத் தோலை உரித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். செரியான் சொன்னதைக் கேட்டதும் அவள் கத்தியைக் கீழே வைத்துவிட்டு, தன் கைக்குழந்தையை இடுப்பில் தூக்கிக்கொண்டு முற்றத்தில் இறங்கி நின்றாள்.

"கவுறு இருக்கா?" என்று செரியானைப் பார்த்து வர்க்கி கேட்டான்.

"இல்லியே" என்று செரியான் அலட்சியமாகப் பதிலளித்தான்.

"பதினோரு ஆம்பிள; எட்டு பொம்பள; ஆறு கொழந்த எல்லாரும் சேர்ந்து இருவத்தைஞ்சி பேரு" என்று செரியனுடைய மகன் ஜான், அந்தக் கூட்டத்தின் அங்கத்தினர்களைக் கணக்கெடுத்து முடித்தான்.

கூட்டத்திலிருந்து மரியத்தின் மாமி மார்த்தா முன்னால் வந்து, "மரியம், நாங்க போய்வரட்டுமா?" என்று கூறியபோது அவளுடைய விடை பெற்ற குரலில் விசனம் நிறைந்திருந்தது.

"நீங்க மலவாருக்கு போனப் பின்னால் எங்கள மறந்துடுவீங்களா மாமி?" என்று மரியம் தாழ்ந்த குரலில் கேட்டாள்.

"மறக்கமாட்டோம் கொழந்த. கர்த்தரின் கருணையால நாங்க அங்க நல்ல நெலைய அடைஞ்சா, நீயும் செரியானும் மலவாருக்கு வரணும், தெரிஞ்சிதா?"

"அதெல்லாம் முடியாது மாமி, அவுருக்கு மலபாருன்னு கேட்டாலே கோவம் வந்துரும். அவுரு தம்பி ஒருத்தன் மலவாருக்குப் போயி அங்கியே சொரம் கண்டு செத்துட்டானாம். அதுக்குப் பின்னால மலவாருன்னு கேட்டாலே கோவம் வந்துடும். எங்க மண்ணு இங்கியேதான் கெடக்கு மாமி."

"எல்லாம் கடவுளோட எண்ணம்போல நடக்கும் கொழந்த. அவங்கெல்லாம் முன்னால போயிட்டாங்க. நான் வரட்டுமா."

"கொஞ்சம் நில்லுங்க மாமி" என்று கூறிய மரியம், கடையினுள்ளே ஓடி ஒரு சிறிய இலைப் பொட்டலத்தை எடுத்துக் கொண்டு திரும்பி வந்து அதை மார்த்தாவின் கையில் கொடுத்தாள்.

மார்த்தா, புன்னகைத்தவாறு பொட்டலத்தைப் பெற்று மடியில் வைத்துக் கொண்டாள். சர்க்கரைதான். பிறகு அவள் செரியானிடம் விடைபெற்று, குழந்தையின் கையில் ஒரு பணத்தைக்* கொடுத்துக் குழந்தையை ஆசீர்வதித்துவிட்டுக் கூட்டத்தோடு சேருவதற்கு வேகவேகமாக நடக்கத் தொடங்கினாள்.

உச்சி வெயிலின் தகிப்பில் அந்த வயல்கரையின் வழியாக நிழல்போல் நகரும் வண்டியும் மக்கள் கூட்டமும் தன் கண்ணிலிருந்து மறையும் வரையில் மரியம் பார்த்துக்கொண்டே நின்றாள்.

அவர்கள் நிரந்தரமாக அந்த ஊரையும், தங்கள் தங்கள் குடும்பத்தையும் விட்டுவிட்டுப் போகின்றார்கள். இனந்தெரியாத பூமிக்காச் செல்லும் மிகப்பெரிய பயணம். அவர்களை இனிமேல் என்றைக்காவது பார்க்க முடியுமோ? அல்லது அவர்கள் மலபாரின் மலை மூலைகளில் தான், மூடிப்போவார்களோ?

மரியத்தின் சாரப்பார்வை, நம்பிக்கையற்ற ஓர் இருண்ட புகையாகப் பரிணமித்தது. இனந்தெரியாத ஓர் இரக்கமும் அனுதாபமும் அவள் இதயத்தைக் கனக்க வைத்தன. அப்போதைக்கு, அவள் அழவில்லை என்று மட்டும் சொல்லாம்.

## 2

ஒரு கூட்டத்தைத் தொடர்ந்து மற்றொரு கூட்டம்.

பொட்டக்காயம் வர்க்கீஸின் தலைமையில், மலபாருக்குப் போகும் கூட்டத்தைச் சேர்ந்தவன் மத்தாயி.

---

* பணம் - பழைய திருவிதாங்கூர் நாணயம்..

தன்னுடைய பொருட்களையெல்லாம் விற்ற வகையில், மத்தாயிக்கு எண்ணூற்று எழுபது பிரிட்டிஷ் ரூபாய்கள் கையில் கிடைத்திருந்தன. ஐந்து பெட்டிகள் நிறையச் சாமான்களையும், நான்கு பிள்ளைகளையும் மட்டும் விற்காமல் மீதியாக நிறுத்தியிருந்தான். அவைகளுடன் நான்கு கூட்டாளிகளையும் சேர்த்துக்கொண்டு அவன் புறப்பட்டு விட்டான். பரஸ்பர உறவை இழந்துவிட்ட கம்பிகளையும், நைந்து பிய்ந்துபோன துணியையும் உடைய குடையை தேங்காய்நார்க் கயிற்றால் சேர்த்துக்கட்டி கக்கத்தில் இடுக்கிக்கொண்டு, கண்ணாடி உடைந்து பல் விரித்துக் காட்டுகின்ற ஒரு பழைய கம்பிலாந்தரைக் கையில் தூக்கிக் கொண்டு மத்தாயி சோர்ந்த முகத்துடன் படியிறங்கினான். அவன் பின்னால் நாய்க்குட்டிகளைப் போல் அவனுடைய பிள்ளை களும் தொடர்ந்தார்கள். பிறந்து வளர்ந்த மண்ணோடும் நட்டு வளர்த்த மரங்களோடும், தண்ணீர் வார்த்துப் பாதுகாத்த செடிகளோடும், கட்டி முடிக்கப்பட்ட குடிசையோடும், கிராமிய முறையில் இணங்கியும் பிணங்கியும் வாழ்ந்து கொண்டிருந்த விவசாயிகளான அக்கம் பக்கத்தார்களோடும் மௌனமாக விடை பெற்று, திரும்பிப் பார்க்காமலேயே அவன் அவசரஅவசரமாக நடந்தான்.

வழிச்செலவிற்கும் மற்றதுக்குமாகக் கொஞ்சம் பணத்தை மடித்துணியில் முடிந்து வைத்திருந்தான். ஆறு நூறு ரூபாய் நோட்டுகளை, ஒரு சிறிய டைரியில் அடக்கம் செய்து கோட்டின் அடிப்பையில் பத்திரமாகப் பாதுகாத்து வைத்துக் கொண்டு, கம்பீரமான நம்பிக்கைகளை மனதில் அணைத்தவாறு சென்று கொண்டிருந்தான். ஆறு நூறு ரூபாய்! மலபாரின் நானூறு ஏக்கர் நிலங்கள் தன்னுடைய டைரியினுள் கிடக்கின்றன. பொன் விளையும் நானூறு ஏக்கர் நிலங்கள். அதனை அனுபவிக்க அவனுடைய மனைவி அன்னம்மைக்குக் கொடுத்து வைக்கவில்லை. அவள், அம்மை நோயால் இறந்து எட்டு மாதங்கள் முடிந்து விட்டன. மலபாருக்குப் போக அவளும் அதிக ஆசையுடன் இருந்தாள். கர்த்தர் அவளைச் சொர்க்கத்துக்கே அழைத்துக் கொண்டு போய்விட்டார்...

மத்தாயியும் அவனுடைய பிள்ளைகளும் மாத்தனுடைய வீட்டின் படிக்கட்டை அடைந்தார்கள்.

மாத்தனும், மாத்தனுடைய மனைவி மரியமும், அவர்களின் இரண்டு குழந்தைகளும் படிக்கட்டில் தயாராக நின்று

கொண்டிருந்தார்கள். அவர்களும் மலபாருக்குச் செல்லத்தான் நின்று கொண்டிருந்தார்கள். மாத்தன் கையில் முன்னூறு ரூபாய் இருந்தது. மரியாவின் கையிலும் கொஞ்சம் பணம் உண்டென்று மாத்தனுக்குத் தெரியும். எவ்வளவு உண்டென்று கேட்கத்தான் மாத்தனுக்கு தைரியம் போதாது. மாத்தனின் தலையில் இரண்டு பெரிய ஜாதிக்காய் பெட்டிகளும், கையில் ஒரு கட்டு மரவள்ளிக் கிழங்கின் குச்சிகளும் காணப்பட்டன. மரியம், தன் தலையில் ஒன்றின் மீது ஒன்றாக மூன்று பெட்டிகளையும் எல்லாவற்றிற்கும் மேலே ஒரு தேங்காய்த் துருவியையும் சுமந்து நின்று கொண்டிருந்தாள். அவர்களுடைய ஒன்பது வயதான மகள் மேரிக் குட்டி, ஒன்றரை வயதான தன்னுடைய சகோதரன் ஜானியை இடுப்பில் வைத்துக் கொண்டு, இடதுகையில் ஒரு பாக்குப்பாளைப் பொட்டலத்தையும் தூக்கிப் பிடித்து நின்று கொண்டிருந்தாள்.

"மாத்தண்ணே எல்லாம் தயாரா?" என்று மத்தாயி கேட்டான். மாத்தன் மரியத்தின் முகத்தை விழித்து நோக்கினான்.

"எல்லாம் தயார்தான். அம்மியையும், கோழிக்கூண்டையும்தான் எடுத்துக்க முடியல. மலவாருல அம்மி வாங்க முடியுமா மத்தாயண்ணே?" என்று மரியம் பதில் கூறினாள். .

"ஆகா, நல்ல அருமையான கருங்கல்லு கெடைக்கும்."

மாத்தனும் மரியமும் மேரிக்குட்டியும் மத்தாயியின் அருகில் வந்தார்கள். அவர்கள் ஒன்றாகச் சேர்ந்து, வர்க்கீஸின் இருப் பிடத்தை லட்சியமாக்கி நடக்கத் தொடங்கினார்கள்.

வர்க்கீஸும், ஒன்பது கூட்டாளிகளும், மாத்தனையும் மத்தாயி யையும் எதிர்பார்த்து வீட்டில் உட்கார்ந்து கொண்டிருந்தார்கள்.

வர்க்கீஸ், கோட்டின் கீழ்ப்பையிலிருந்து சங்கலியுடன் சேர்த்திருந்த வாட்சை (கடிகாரத்தை) உருவி எடுத்து நேரத்தைப் பார்த்தான்.

"மணி பதினொன்றரை ஆவுது. ஒன்னர மணிக்கு பஸ் மெயின் ரோடுக்கு வந்துடும். வேகமா நடந்தாதான் முடியும். சீக்கிரம் கௌம்புங்க."

அவ்வாறு, பத்தொன்பது பேர்களடங்கிய அந்தக் கூட்டம், வேகமாக நகரத் தொடங்கியது.

சுள்ளிக் காடுகளும் பர்றைத் துண்டங்களும் கலந்துள்ள குன்றின் பக்கவாட்டில் நெளிந்து செல்லும் பாதை, அந்தக் கூட்டத்தினால் நிறைந்தது. சாதாரணமாக, உயிரற்றுக் கிடக்கும் அந்தக் கிராமப் பாதை, அவர்களுடைய பேச்சுக்களால் கலகலப்புப் பெற்றது.

சிறிது நேரம் சென்றதும் எல்லோரும் மௌனமாக, காணப் பட்டார்கள். யாருக்கும் ஒன்றும் பேசுவதற்கு விஷயங்களில்லை. மூட்டை முடிச்சுக்களைத் தூக்கிக்கொண்டு, அவர்கள் அமைதியாக நடந்து கொண்டிருந்தார்கள். ஆனால் அந்த மௌனத்தில் இனிய எதிர்பார்ப்புகள் கதிராகி முற்றி நின்றிருந்தன. அவர்கள் தாங்கள் குடியேறப்போகும், வெகு தூரத்திலுள்ள அந்த மலபாரைப் பற்றிய கற்பனைகளில் ஆழ்ந்திருந்தார்கள். அவர்களுடைய மடித்துணிக்குள் நோட்டுக் கட்டுக்கள் கிடந்தன. அவர்களுடைய பூர்வீக மனைகளையும், நிலங்களையும், வசித்த இடங்களையும் புதிய பணக்காரர்களுக்கு விற்றதற்குக் கிடைத்த பிரதிபலன் களாக, கண்ணுக்குத் தெரியாத அழகும் செழிப்பும் உள்ள மலபாரின் மலையோரங்கள், அவர்களுக்கு வரவேற்பு நல்கக் காத்துக் கொண்டிருக்கின்றன. அங்கே மகச்சார்பான சண்டை யில்லை. சமூகச் சங்கடங்கள் இல்லை. அரசியல் துஷ்பிரபுத்துவத்தின் செருப்பு நக்கிப் (தாளம் போடுபவர்கள்) பெரியோர்களின் முன்னால் ஐம்புலன்களையும் அடக்கி, பயத் துடன் நாட்களைக் கழிக்க வேண்டாம். இயற்கையுடன் ஒன்றி சுதந்திரத்துடன் வாழலாம்... அநுபவிக்கலாம்... சம்பாதிக்கலாம்.... ஈடு இணையற்ற நிலையை நிலைநிறுத்தலாம்.

மிகப் பழக்கமுள்ள குன்றின் சரிவுகளையும், வயல்கரைகளையும், தோட்ட எல்லைகளையும் பின்னுக்குத் தள்ளிக்கொண்டு, அந்த, குடிபெயரும் கூட்டம் போகும் வழியில், அங்கங்கே தனித்து நிற்கும் குடிசைகளிலிருந்து வெளியே வந்து பார்த்த விவசாயிகளில் சிலர், பொறாமையுடனும் மற்றவர்கள் அன்புடனும் அவர்களுக்கு அது நல்லதொரு பயணமாக ஆக வேண்டுமென்று வாழ்த்தினார்கள்.

மலபாரின் கிராமப் புறங்களும் இதேபோலக் குன்றும் வயலும் கலந்து கிடக்குமோ? அங்கேயுள்ள மொழி நமக்குப் புரியுமோ? மலையாளம்தானே அங்கேயும் பேசுவார்கள்? பெருச்சாளிகளும், போலீஸ்காரர்களும், அங்கேயும் உபத்திரவங்கள் கொடுப்பார் களோ? எதுவானாலும் ஒரு விஷயம் மட்டும் உண்மை; முதலாளிகளின் தொந்தரவு அங்கே இருக்காது, என்றெல்லாம் அந்த ஏழைகள் நினைத்தார்கள்.

"வர்க்கீஸண்ணே நீங்கள்ளாம் விட்டுட்டுப் போனா எனக்கு வேற கதியில்ல. நானும் மலவாருக்கு வரட்டுமா?"

வர்க்கீஸ் இருபக்கமும் பார்த்தான். யாரையும் காணவில்லை. பாதைக்கருகே தாழ்த்தி நிறுத்தப்பட்டிருந்த ஒரு மாட்டு

வண்டியின் கூட்டுக் குள்ளிருந்து ஒரு கூர்மையான முகம் வெளியே நீண்டது. புன்னகைத்தவாறு வெளியே ஊர்ந்து வரும் வரீது குஞ்ஞைக் கண்ட வர்க்கீஸ் நகைச்சுவையாக, "யாருடாது, வரீது குஞ்ஞா? நீ மலவாருக்கு வந்தா என்னடா புண்ணியம்?" என்று கேட்டான்.

"அங்க நெலங்கள் சும்மா கெடக்குன்னு கேள்விப்பட்டேனே?"

"அங்க போனாத்தானேடா முண்டமே. ஒனக்கு வழிச்செலவுக்கு ஒண்ணும் வேணாமா? ஒன் கைல காசிருக்காடா?"

"ரெண்டு நாளா முழுப்பட்டினிண்ணே. பரமுப்புள்ளத் தோட்டத்திலேந்து யாரோ தேங்கா திருடிட்டுப் போயிட்டாங்க. போலீஸ்காரன் என்னப் புடிச்சிட்டுப் போயி இடி இடின்னு இடிச்சான். இனிமே இந்தக் கரையிலேந்து எங்கியாச்சும் தேங்கா காணாமப்போனா இடி என் முதுவுலதான்னு ஒரு தாக்கீதும் கொடுத்திருக்கான். அதனால இங்க எப்பிடி வாழமுடியும்? என்னையும் ஒன்னோடோ கூட்டிக்கிட்டுப்போண்ணே.. வழிச் செலவுக்கு ஏதாச்சும் கடங்கொடுத்தா மலவாருக்குப் போனதும் வேலை செஞ்சி கொடுத்துடறேன்."

வர்க்கீஸ், ஒரு சிகரெட்டைப்பற்ற வைத்து புகைவிட்டுக் கொண்டு நின்றான். அவன் கூட்டாளிகள் வெயிலில் சோர்ந்து விட்டதால் களைப்பைப் போக்கிக்கொள்ள ஒரு மரத்தின் கீழே சென்று நின்றார்கள். வரீதுகுஞ்ஞு வண்டிக்குள்ளிருந்து தரையில் குதித்து அடக்கமாகத் தலையைச் சொரிந்துகொண்டு, வர்க்கீஸின் முன்னால் கூச்சத்துடன் நெளிந்து நின்றான்.

"வழிச்செலவுக்கு இருவது பிரிட்டீஷ் ரூவாயாவும். எத வெச்சுடா ஒனக்குக் கடங்கொடுக்க முடியும்?" என்று வாய் வழியா கவும் மூக்கு வழியாகவும் புகைப்படலத்தைப் பரப்பிக்கொண்டு வர்க்கீஸ் கேட்டான்.

"இந்த வரீதுகுஞ்ஞோட ஒடம்பு இல்லியா, அண்ணே? மாரால இடிச்சாலே பாறை ஒடயக்கூடிய ஒடம்பாச்சே இது. சாப்பிட ஏதாச்சும் கெடைச்சா போதும். எந்த வேலையாயிருந்தாலும் செய்யலாம்ணே இங்கக் கெடந்தா வாழவும் முடியாது, சாவவும் முடியாது."

வரீதுகுஞ்ஞின் மேல் வர்க்கீஸுக்குச் சிறிது அனுதாபம் தோன்றத் தொடங்கியது. வரீதுக்குஞ்ஞ் நம்பிக்கைக்கு உரியவன் தான் என்று வர்க்கீஸ்க்குத் தெரியும். வரீதும் வேலை எதுவும் இல்லாமல் கஷ்டப்படுகிறான். ஆனால், இருபது ரூபாய் ஒதுக்க

வேண்டுமே? கடைசியில், தன்னுடைய புதிய நிலங்களில் வேலை செய்வதற்கு வரீதுகுஞ்ஞை அதிகமாக உபயோகித்துக் கொள்ள லாம் என்ற நம்பிக்கையுடன் வர்க்கீஸ் சொன்னான்:

"நீ மலவாருக்குப் போன பின்னால் மத்தவங்க, வாலப் பிடிச்சுக்கினு போயிடுவியோ என்னமோ?"

"இந்த வரீதுகுஞ்ஞா? ஒங்கள விட்டுட்டுப் போவ முடியு மாண்ணே? அந்த மாதிரி சந்தேகம் ஒங்களுக்குத் தோண என்ன காரணம்ணே?"

"காரணமொன்னுமில்ல. மலவாருல பல புது மொதலாளிகளப் பார்க்கலாம். வேலக்கி நெறையக் கூலி தரேன்னு சொல்லித் திருப்பிக்கிட்டு போவலாம்..."

"அதுக்கு இந்த வரீதுகுஞ்ஞ் கெடைக்கமாட்டான்னே."

"அப்படின்னா சரி, நீ சீக்கிரமாப் போயி ஒன்னோட சாமான்கள எடுத்துகிட்டு பஸ்ஸு நிக்கிற எடத்துக்கு வா."

வரீதுகுஞ்ஞு, தான் நின்ற இடத்திலிருந்து ஒரு துள்ளு துள்ளினான். அவன் தன் பயணத்திற்கு ஒன்றும் பெரிதாகத் தயார் செய்ய வேண்டியதில்லை. தலையில் கட்டியிருந்த துண்டை அவிழ்த்துக் கையில் பிடித்துக் கொண்டான். அணிந்திருந்த துண்டை அவிழ்த்துத் தலையில் கட்டிக் கொண்டான். முதலில் அவிழ்ந்த துண்டை இடுப்பில் சுற்றி அதை மடக்கிக் கட்டிக் கொண்டான். காதுச்சந்திலிருந்து ஒரு பீடித்துண்டைத் தேடி எடுத்தான். பின்பு, ஏதோ புனராலோசனையுடன் அதை அங்கேயே "ஸ்தாபித்து" விட்டு வர்க்கீஸினுடைய சிகரெட் துண்டைக் கேட்டு வாங்கிப் புகைத்துக்கொண்டு வரீதுகுஞ்ஞு மலபாருக்குப் புறப்பட்டு விட்டான்!

அவன் மத்தாயினுடைய பிள்ளைகளின் தலையிலிருந்த பெட்டி களை வாங்கித் தன் தலையில் ஸ்தாபித்துக் கொண்டான். மத்தாயினுடைய கக்கத்திலிருந்து துணிக்குடையை வாங்கிப் பெட்டிகளின் மீது வைத்து விலங்கைப் போல் வளைத்துப் பிடித்துக் கொண்டான்.

அவர்கள் நகரத் தொடங்கினார்கள்.

"தென்னந்தோப்பு ஏலிக்குட்டி... அவள்

எண்பத்தெட்டோலை எண்ணிக்கட்டி...."

வரீதுகுஞ்ஞின் பாட்டு அந்தக் குறுங்காடுகளில் முழங்கியது. சிறுவர்கள் அந்தப் பாட்டுக்குப் பின்பாட்டு பாடினார்கள். .

உச்சிவெயில் சாயத் தொடங்கியபோது, அவர்கள் பரந்த சம வெளியை அடைந்தார்கள். முன்னாடியே சென்ற வர்க்கியும் அவன் கூட்டமும் அங்கே தங்கியிருந்தார்கள். அவர்களுடைய ஸ்பெஷல் பஸ் இன்னும் வந்து சேரவில்லை.

மூன்று மணியானபோது ஒரு கரி ஆவி பஸ்ஸின் உருக்குலைந்த உருவம் இருமியும் புகைந்தும் அங்கே மெதுவாக வந்து சேர்ந்தது.

வர்க்கீஸ் கண்டக்டரின் அருகில் சென்று என்னவோ முணுமுணுத்தான். ரகசியத் தர்க்கங்களும், வேண்டாமென்ற தலை குலுக்கலும், ஆலோசனைகளும், அங்க சேஷ்டைகளும் மற்றவைகளும் அவர்கள் இருவருக்குள்ளும் நடந்தன. கடைசியில் கண்டக்டரின் தலை சம்மதத்துக்கு அறிகுறியாக ஆடத் தொடங்கியது. வர்க்கீஸ் புன்னகைத்தவாறு அவனுடைய கூட்டாளிகளின் அருகில் சென்று சாமான்களைச் சரிசெய்துவைக்க உத்திரவு கொடுத்தான்.

வர்க்கீஸ் தன் கூட்டாளிகளின் சாமான்களை பஸ்ஸில் மேல் கூரைக்கு ஏற்றத் தொடங்கியதோடு, வர்க்கீஸின் கூட்டத்தாரும் தங்கள் பெட்டி சாமான்களை ஏற்றத் தொடங்கினார்கள். அப்போது, வர்க்கி அவர்களை எட்டித் தடுத்தான். கண்டக்டர் நகர்ந்து வந்து வர்க்கியிடம் விலகி நிற்கச் சொன்னான்.

"எங்களையும் எங்க லக்கேஜையும் மட்டும்தான் ஏத்தணும்" என்று கூறினான் வர்க்கி.

"பஸ்ஸுல யாரையெல்லாம் ஏத்தலாம்னு தீர்மனிக்கறது நான்தான்" என்றான் கண்டக்டர்.

"அத ஒத்துக்க முடியாது" என்றான் வர்க்கி.

"அப்படின்னா வேற பஸ்ஸபபாத்துக்க. இதில ஒங்களை ஏத்த எனக்கு இஷ்டமில்ல." என்று கண்டக்டர் கண்டிப்பான பதிலைக் கொடுத்தான்.

வர்க்கி குழம்பிப்போனான். ஆட்சேபிப்பதால் புண்ணிய மில்லை. அந்த பஸ் கிடைக்கவில்லையென்றால் அவர்கள் இரண்டு நாட்கள் இங்கேயே தங்க வேண்டியதாகிவிடும். அத்துடன் ஐம்பது ரூபாயாவது செலவாகும்.

கடைசியில் தோல்வியை வர்க்கி ஒத்துக்கொண்டான். கண்டக்டருடைய முப்பாட்டனுக்கு முப்பாட்டன் வரையுள்ளவர்களை யெல்லாம் சபித்தவாறு சாமான்களை ஏற்றத் தொடங்கினான்.

அவ்வாறு அந்த நாற்பத்து நான்கு பயணிகளும், இருபது குடும்பங்களின் ஜங்கம சொத்துக்களும் அந்தச் சிறிய பஸ்ஸில்

திணிக்கப்பட்டன. பஸ் காச நோய்க்காரனைப் போல் சிறிது துப்பிக்கொண்டே முன்னாடி முன்னுரை

'இந்துலேகா', 'சாரதா' என்னும் சமூக நாவல்களின்

## 3

மலபாரின் கிழக்கு மலைகளின் அடிவாரத்தில் தொத்திக் கொண்டு நிற்கும் ஒரு சிறிய கிராமம்.

முடிவற்றுக் கிடக்கின்ற குறுங்காடுகளுக்கும், கரைகட்டி இருக்கின்ற வயல்களுக்கும் இடையில், அங்கங்கே தனித்தனியாகக் கூரைக்குடிசைகள் நின்றன. மலைவாழைகளுக்கிடையிலும், மூங்கில் காடுகளுக்கிடையிலுமான மறைவில், அந்தப் புல்வேய்ந்த குடிசைகள் எல்லாம் எடுப்பாக எழும்பி நிற்கின்றன.

கிராமத்தின் தென்கோடியில் நான்கு பக்கமும் குன்றுகளால் சூழப்பட்ட ஒரு பிரதேசத்தைக் காணலாம். அது ஒரு மேடான இடம். அங்கே ஓலை வேய்ந்த பழையதொரு மாளிகை வீடு தலை நிமிர்ந்து நின்றது. அந்தப் பிரதேசத்தின் மிகப்பெரிய பணக்கார ரான ஆலத்தும்காட்டில் குஞ்ஞம்பு குறுப்பின் குடும்பம்தான் அது.

சுண்ணாம்பு பூசாத சுவர்களும், வர்ணம் அடிக்காத ஜன்னல்களும் கொண்ட அந்த நாலுகட்டு வீட்டின் முன்பக்கத்தில் விஸ்தீர்ணமாகக் கிடக்கின்ற முற்றமும், முற்றத்தைச் சுற்றி ஓர் ஆள் உயரத்தில் மண் மதில்களும் காணலாம். தென்புறத்தில் ஒரு களம். கீழ்ப்பக்கத்தில் மண் மதிலைப் பிளந்துகொண்டு ஒரு சிறிய படிக்கட்டும் இருந்தது.

நாலுகட்டில் தெற்கேயும் கிழக்கேயும் உள்ள வராண்டாவை மறைத்துக் கொண்டு அரைச் சுவர்களும், சுவர்களுக்குமேல் சாய்வுப் படிகளும் கட்டப்பட்டிருந்தன. தென் பக்கத்து வராண் டாவின் நடுவில் ஒரு பெரிய தீக்குண்டமும், அந்த அக்னிக் குண்டத்தின் உச்சியில் பிரம்புக்கட்டுகள் சேகரித்து வைத்த புகைபடிந்த ஒரு முனையையும் காணலாம்.

தென்பக்கத்து வராண்டாவில் சாய்வு மனைமேல் அமர்ந்து கொண்டு வெற்றிலை போட்டுக் கொண்டிருந்த குஞ்ஞம்புக் குறுப்பின் அருகே சில பழைய தஸ்தாவேஜுகளைத் திருப்பியும் மடித்தும் பார்த்துக்கொண்டு காரியஸ்தன் குஞ்ஞப்ப நம்பியார் குனிந்து நின்று கொண்டிருந்தார்.

"பழைய மொறையில குத்தக நிச்சயிச்சி இனிமே நெலங்கள எழுதிக் கொடுக்கக்கூடாது." என்று தஸ்தாவேஜுகளைப்

பார்த்துக் கொண்டிருக்கும் போதே சொன்ன காரியஸ்தன், "காலம் மாறிக்கிட்டு வருது. அந்த *அண்ணாச்சிங்களும் தெனந்தோறும் கூட்டங் கூட்டமாக வந்து சேர்ந்துகிட்டு இருக்காங்க. அவுங்க கையில் நெறையப் பணமும் இருக்கு. என்ன வெல கொடுத்தாச்சும் நெலங்கள வாங்கத் தயாராத்தான் அவுங்க வராங்க. நாம மட்டும் ஏன் எரக்கம் காட்டணும் ?"

முதலாளி பூசணிப்பூ மொட்டின் உருவில் இருந்த. ஒரு மண்ணாலான எச்சில் துப்பும் பாத்திரத்தை எடுத்து, ஒரு விகாரமான சப்தத்தை எழுப்பி வெற்றிலை எச்சிலை அதில் துப்பிவிட்டு, பாத்திரத்தைக் கீழே வைத்து காரியஸ்தனைக் கூர்ந்து பார்த்தார்.

"நீ சொல்லறதும் சரிதான் குஞ்ஞப்பா. வெலயக் கூட்டணும் தான். எவ்வளவு கூட்டலாம்?" என்று கேட்டார்.

"ஏக்கருக்கு அஞ்சு ரூவான்னுதான். இதுவரைக்கும் வாங்கி வந்திருக்கோம். அத பத்து ரூவாயாக்கணும்."

"அது ரொம்ப அதிகமாத் தெரியுதே? ஏழு ரூவான்னு வாங்கனாப் போதாது. இல்லன்னா அவுங்க மத்த மொதலாளிங்க நெலங்களத் தேடிக்கிட்டு போயிடப் போறாங்க."

"பத்து ரூவான்னுதான் வாங்கணும். அவுங்க வேற எங்கியாச்சும் போனா என்ன? நாம கொஞ்சம் காத்துக்கிட்டு இருந்தாப் போதும். மலை நெலங்களுக்கும் ஒரு கணக்குண்டு. இந்தக் கூட்டத்தார் கணக்கில்லாம வந்து சேர்ராங்களே." "இந்த" அண்ணாச்சிகள் சுத்தமில்லாதவங்க போலிருக்கே. அவுங்க இந்த ஊரையே நாறடிச்சுடுவாங்கன்னு தோணுது குஞ்ஞப்பா."

"அதனால நமக்கென்னா நஷ்டம்? அவுங்க எப்படியாச்சும் வாழ்ந்திட்டுப் போவட்டுமே. இருண்டு கெடக்குற காடுகள வெட்டி வெளிச்சமாக்கி வெவசாய எடங்களா மாற்ற அவுங்கத்தான் நமக்கு வேணும். அவுங்க காட்டுப் பயிறு செய்யறதுல ரொம்பக் கை தேந்தவங்க. இந்த ஊருல நாலு பேரு செய்யற வேலய அவன் ஒருத்தனே செஞ்சுடுவான்."

"இவுங்கள திருவிதாங்கூர்லேந்து நாடு கடத்திட்டதா ராமு குறுப்பு சொன்னான்... சரிதானா?"

"அது என்னமோ தெரியலியே, இவங்கள்ள நெறயப்பேரு போக்கிரிங்கன்னுதான் கேள்விப்பட்டேன்."

---

* அண்ணாச்சி-திருவிதாங்கூர் கிறிஸ்துவர்களை மலபார் மக்கள் சேட்டன் (அண்ணாச்சி) என்னும் அடைமொழியில் கேலியாக அழைப்பார்கள்.

"அதான் குஞ்ஞுப்பா நானும் சொல்றேன். இவுங்களுக்கு உள்ள நொழைய எடம் கொடுத்தா, இந்த எடத்தையே புடிச்சுடுவாங் கன்னு தெரியுது. அதோட இவுங்ககிட்ட பேச்சு வார்த்தைகூட வச்சுக்க முடியாதுன்னும் தோணுது. கடைசில இவுங்க இந்த ஊரையே புடிச்சுடுவாங்க போலிருக்கு. நாமதான் ஊரைவிட்டு ஓட வேண்டியதா இருக்கும். திருதாங்கூர்லேந்து வந்த அந்த மனுஷன்ல, அவன் பேரு என்ன? என்னவோ ஒரு பிள்ள. அவன் இவுங்க திருவிதாங்கூரில் செஞ்ச துரோகங்களைப் பத்திச் சொன் னானே? அங்கத்திய சில இந்துக்கள் கூட்டத்தோடு கூட்டமா மதம் மாத்தவும், மற்றதுக்கும் இவுங்க முயற்சி எடுத்துக்கிட்டாங் களாம். அந்த மாதிரி அவுங்க இங்கியும் தொடங்கிட்டா என்ன செய்யறது? நம்மக் கோயில்கள இவுங்க அசுத்தமாக்கிட்டா என்ன செய்யறது? நம்ம பணியரயும், மலையரயும் மத்தவங்களையும் இவுங்க ஏதாச்சும் சொல்லி கெடுத்துக் கழுத்துல சிலுவயக் கட்டிட்டா என்ன செய்யறது? அதயெல்லாம் ஆலோசிக்கும் போது பயமாத்தான் இருக்கு. இல்ல?"

குஞ்ஞுப்ப நம்பியார் பதிலொன்றும் சொல்லவில்லை. அவன் தேடிக் கொண்டிருந்த பத்திரத்தைக் கண்டுபிடித்த ஆவேசத்தில் மற்ற விஷயங்களையெல்லாம் மறந்துவிட்டான்.

"புளியோடன் மல பத்திரம் இதோ இருக்கு. இதில புளியோடன் நெலத்தப் பத்தி ஒண்ணும் சொல்லலன்னாலும் பேரனாலேயே அந்த நெலம் மலையோடச் சேந்ததுதான்னு வருதே? காரநாட்டு நம்பியாருக்கும் அந்த நெலத்துக்கும் ஒரு சொந்தமுமில்ல. அது குளியாம் பாறக்குன்றோடு சேந்ததுமில்ல."

"காரநாட்டு நம்பியாரு அந்த நெலத்தச் சுத்தி வேலி கட்டியிருக்கறதாத்தானே நீ சொன்னே குஞ்ஞுப்பா?"

"ஆமாம், அது ஆள் பலத்தால செஞ்சிருக்காங்க. காரநாட்டு நம்பியார் மேல, அவரோட அநியாயங்களைப் பத்தி கோர்ட்டில் கேஸ் போடணும்?"

"அநியாயம்" என்ற வார்த்தையைக் கேட்டவுடன் முதலாளியின் முகம் ஆவேசமாக மாறியது. கேஸ் ஜெயித்தாலும் சரி, தோற் றாலும் சரி, கோர்ட்டில் தன் பக்கத்தில் சில அநியாயங்கள் நடந்து கொண்டிருக்கின்றன என்று சொல்வதில் முதலாளிக்குப் பலத்த நம்பிக்கை உண்டு. வழக்குகளைப் போட்டு ஜெயிப்பதில், காரியஸ்தனின் கெட்டிக்காரத்தனம் முழுமையாக உள்ளது என்று,

மனப்பூர்வமாக நம்பிக் கொண்டிருக்கும் ஒரு பழைய தலைமுறையைச் சேர்ந்தவர் குஞ்ஞம்புக் குறுப்பு.

"அப்படின்னா, நாளக்கே கேஸ ஃபைல் பண்ணிடு குஞ்ஞப்பா. கார நாட்டு நம்பியாருக்கு ஒரு பாடம் புகட்டணும்" என்று முதலாளி உறுதியாகச் சொன்னார்.

"அடடா, ஏஜண்டு கொச்சுவரீதண்ணன் வராரு" என்று குஞ்ஞப்ப நம்பியார் படிகளைச் சுட்டிக் காண்பித்தார்.

கருத்து தடித்த வழுக்கைத் தலையுடன் கூடிய ஒரு குட்டை மனிதன், முற்றத்தைக் கடந்து வராண்டாவை அடைந்தான்.

"ஒக்காரு, கொச்சுவரீது" என்று முதலாளி நாற்காலியைச் சுட்டிக் காண்பித்துவிட்டு, "புதுக்கூட்டம் ஏதாச்சும் வந்திருக்கா?" என்று கேட்டார்.

"பதினஞ்சு பேரு வந்திருக்காங்க" என்று கொச்சுவரீது புன்னகைத்தவாறு சொன்னான்.

"அப்படின்னா அதுல நமக்குக் கொஞ்சம் பேர புடிச்சுடறியா?" என்று முதலாளி புதிய கிரகத்தைக் கண்டுபிடித்த வானவெளி விஞ்ஞானியின் மகிழ்ச்சியுடன் குலுங்கிச் சிரித்தார்.

"தாங்க நெனச்சிக்கிட்டு இருக்கிற மாதிரி ஒண்ணுமில்ல எஜமான். எல்லாரும் ஏழைங்கதான். ஒவ்வோர்த்தன் கிட்டேயும் இருநூறு, முன்னூறு ரூவாதான் இருக்கும்."

"அப்படின்னா, எல்லாம் சேத்து மூவாயிரம் ரூவா வரைக்கும் எனக்குக் கெடைக்குமா?"

பேச்சுவார்த்தை அதே ரீதியில் நீளாமல் அவர்கள் விஷயத்திற்கு வந்தார்கள். குஞ்ஞப்ப நம்பியாரும் இடையில் புகுந்து ஓரிரு அபிப்பிராயங்கள் சொன்னார்.

ஏக்கருக்கு ஏழு ரூபாய் வீதம் 350 ஏக்கர் நிலங்கள் வரீதுக்கு எழுதிக் கொடுக்கப்பட்டது. பத்திரத்தில் ஏக்கருக்கு பத்து ரூபாய் வீதம் காண்பிக்கப்பட்டது. அதனால் கொச்சுவரீது அந்த இடைத் தரகில் மட்டும் 1000 ரூபாயை ஒரே மூச்சில் அடித்துக்கொண்டான். குஞ்ஞப்பா நம்பியாருக்கு 100 ரூபாயை அவன் கையில் அழுத்தினான். 150 ரூபாய் வரையில் தனது கட்சிக்காரர்களிடமிருந்து மரியாதை விலையாக கமிஷன் பெற்றுக் கொண்டான்.

கொச்சுவரீது அதுபோல் ஒரு நில ஏஜண்டாக வாழ்ந்து கொண்டிருந்தான். இடையிடையே அவன் திருவிதாங்கூருக்குச் செல்வான். அங்கே, மலபாரின் குணநலன்களைப் பற்றியும், செல்வச் செழிப்பைப் பற்றியும் கொட்டி அளந்து கொண்டும், சில

ஏழைகளை ஏமாற்றி அவர்களை அழைத்துக்கொண்டும் திரும்புவான். அவர்களை மலபாரின் மலைநிலங்களிலும் கடனிலும் மூழ்கடித்து. அதிலிருந்து அவர்கள் விடுபடா வண்ணம் செய்து விட்டு. புதிய இரைகளைத் தேடிக்கொண்டு அவன் மீண்டும் திருவிதாங்கூருக்குப் பயணம் செல்வான்.

குஞ்ஞும். குறுப்பும். குஞ்ஞப்ப நம்பியாரும் கொச்சுவரீதை விடாமல் பிடித்துக்கொண்டிருந்தனர். கொஞ்சங்கூட கொத்திச் சரிப்படுத்த முடியாமல் கிடக்கும் காடுகள், அனாவசியமாகப் பணமாக மாறித் தன் கையில் வருவதைக் காணும் முதலாளியின் கண்கள் மகிழ்ச்சியால் பிரகாசித்தன. அத்துடன் காரியஸ்தன் குஞ்ஞப்ப நம்பியாரின் சொந்த வருமானங்களும் கூடின. கொச்சுவரீது ஒரு சிறிய குபேரனாக மாறினான். அவன் ஆசை காட்டி அழைத்துக் கொண்டு வந்த ஏழை கிறிஸ்தவக் குடும்பங்கள் மலை மண்ணுடன் போரிட்டு. விதியை நொந்து கொண்டு பாழடைந்த குடிசைகளில் தஞ்சம் புகுந்த கொண்டிருந்தன.

## 4

வர்க்கியும். அவன் கூட்டமும் தலைச்சேரியிலிருந்து ஒரு ஸ்பெஷல் லாரியில் ஏறி. அந்த மலைப்பிரதேசத்துக்கு வந்து இறங்கினார்கள். அவர்கள் லாரியிலிருந்து இறங்கியவுடனே ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

சிகரெட் பெட்டியிலிருந்து எடுத்த ஈயப்பேப்பரில் மடித்து வைத்திருந்த ஐந்தாறு செப்புக் காசுகளைக் குலுக்கியவாறு. ஒரு குறும்புக்காரச் சிறுவன் வர்க்கியின் அருகில் வந்து. "மொதலாளி! சிலுவை வேணுமா? நாலணாவுக்கு அஞ்சு தரேன்" என்று கேட்டான்.

அங்கே குழுமியிருந்தவர்களெல்லாம் உரக்கச் சிரித்தார்கள்.

"டேய் செத்த மாட்டுக்கறி வியாபாரம் தொடங்குடா. அதான் நல்லது" என்று மற்றொருவன் அபிப்பிராயப்பட்டான்.

வர்க்கிக்குக் கோபம் கொப்பளித்தது. தான் இங்கே வந்து சேர்ந்தவுடன் இவ்வூர்க்காரன்களிடமிருந்து கிடைத்த இந்த நிந்தனையான வரவேற்புக்குத் தகுந்த பதில் கேள்வி கேட்காமல் போனால் கோபம் தணியாது என்று வர்க்கி சபதம் செய்தான். "இவனுங்களுக்கு ஒரு நல்ல பாடத்த கத்துத்தரேன்."

அதுபோன்று. ஓர் அக்கிரமக்காரனின் கரிசனத்தோடுதான் வர்க்கி மலபார் மலைநிலத்தின் மண்ணில் விழுந்தான்.

மாலை நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. சாமான்களையும், ஆட்களையும் கீழே இறக்கி விட்டுவிட்டு லாரி திரும்பிப் போய்விட்டது. வர்க்கியும் கூட்டமும் பாதையோரத்தில் திகைத்து நின்றார்கள்.

வர்க்கியின் தூரத்து உறவுக்காரன் வரீது. மலபாரில் அவன் ஏற்கனவே குடியேறி விட்டவன். தானும் தன்னுடைய கூட்டமும் மலபாருக்குப் புறப்படுவதாகவும், மெயின்ரோடில் தங்களை எதிர்பார்த்துக்கொண்டிருக்க வேண்டுமென்றும், வர்க்கி, தான் புறப்படுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்பே வரீதுக்குக் கடிதம் எழுதித் தெரிவித்திருந்தான். ஆனால் வரீதையோ அவனுடைய ஆளையோ அங்கே எங்கும் காணவில்லை. அந்த இடத்திற்கு அருகே டீக்கடை வியாபாரம் செய்யும் ஒரு முஸ்லிமிடம் கேட்டபோது, வரீதைப்பற்றிய சில செய்திகள் தெரிந்தன. வரீதின் மனைவி மலேரியா காய்ச்சல் கண்டு இறந்துவிட்டாள் என்றும், வரீது அங்கேயிருந்து ஒன்பது மைல் தூரத்தில் உள்ள ஒரு மலையோரத்துக்குத் தன்னுடைய இருப்பிடத்தை மாற்றிக் கொண்டான் என்றும் கேள்விப்பட்டபோது, வர்க்கியின் மனம் இடிந்து போய்விட்டது.

அவர்கள் பெட்டி படுக்கைகளைத் தங்கள் முன்னால் குவித்து வைத்துவிட்டு, இனிமேல் என்ன செய்வது என்று ஆலோசனை செய்தார்கள்.

எல்லாருக்குமே இப்படியப்படியாகப் பயணக்களைப்பு ஏற்பட்டிருந்தது. இனிமேல் ஓர் அடிகூட நகர முடியாது என்கின்ற மட்டில் அவர்கள் களைப்படைந்திருந்தார்கள். இனந்தெரியாத வனப்பிரதேசமும், பயங்கரமான தனிமையும் உள்ள இடத்தில் அந்தப் புதிய அகதிகள் குழம்பிப்போய் நின்றார்கள்.

ஆகாயம் அந்திநேர உடையைக் கழற்றியது. புதர்களுக்கிடையே பதுங்கியிருந்த இருள் மெல்ல மெல்லப் படரத் தொடங்கியது.

வெள்ளை அரைக்கால் சட்டையும் காக்கி மேல் சட்டையும் அணிந்த ஓர் இளைஞன் புன்னகைத்தவாறு வர்க்கியின் முன்னால் வந்து, "வரீதண்ணன் இங்கேந்து ஒன்பது மைல் தூரத்தில் வசிக்கிறாரு. அதனால் இன்னிக்கு ராத்திரி என் குடிசையிலேயே தங்குங்க. நான் தனியாத்தான் இருக்கேன். நாளைக்குக் காலைல வரீதண்ணன்கிட்ட நானே ஒங்களைக் கூட்டிக்கிட்டுபோயிவுடறேன்" என்று கூறினான்.

வர்க்கி அந்த இளைஞனின் முகத்தைக் கூர்ந்து பார்த்தான். நல்ல பிரகாசமுள்ள நீண்ட முகம். நல்ல கட்டுமஸ்தான சதைப்பிடிப்போடு கூடிய நெடிய உடல். அவன் பேசியதை வைத்து அவனும் திருவிதாங்கூர்க்காரன்தான் என்று வர்க்கி புரிந்து கொண்டான்.

"ஒனக்கு சொந்த ஊரு எது?" என்று கேட்டான் வர்க்கி.

"குமுளிக்குப் பக்கம். ஓங்க சொந்த ஊரு எது சார்?"

"ஆங், நாங்க முண்டக்காயம். அப்ப, நீ இங்கே தனியாத்தான் இருக்கியா?"

"ஆமாம் எங்களுக்கு இங்க கொஞ்சம் நெலம் இருக்கு. இங்க உள்ள வெவசாயத்த நான்தான் பாத்துக்கிறேன். என் சித்தப்பா நாலு மைலு தூரத்தில் மலப்பயிரு இட்டுக்கிட்டு இருக்காரு... அவுங்களயெல்லாம் கூப்பிடுங்க சார். நாம இப்படியே போவலாம்."

அவர்களுக்கு அந்த நேரத்தில் வந்த அழைப்பு பெரியதொரு அநுக்கிரகமாகத்தான் தோன்றியது. அவர்கள் அந்த இளைஞரின் பின்னால் தட்டுமுட்டு சாமான்களையும் எடுத்துக்கொண்டு நடந்தார்கள்.

"ஒம் பேரென்ன?" என்று வர்க்கி இளைஞனிடம் கேட்டான்.

"அந்தோணி."

"ஒனக்கு எத்தன வயசு அந்தோணி?"

"பதினேழு."

அந்தோணி கூச்சம் கலந்த ஒரு புன்னகையை உதிர்த்துக் கொண்டு தலைகுனிந்து நடந்தான்.

"ஒன்னோட குடிசைக்கு ரொம்ப தூரம் போவணுமா?" என்று வர்க்கி கேட்டான்.

"இல்ல, அதோ முன்னால் தெரியுதே ஒரு குன்று, அத ஏறி இறங்கினா, எங்க குடிசைக்கு முன்னால் இருக்குற தோப்புத் தெரியும்."

அந்த மலைப்பிரதேசம் முழுவதையும் இருள் மூடிவிட்டிருந்தது. இருளில் தட்டுத் தடுமாறிக் கொண்டு அவர்கள் அந்தக் காட்டுப் பாதையில் ஏறினார்கள்.

"இங்கே புலி கிலி உண்டா?" என்று சிறிது பயத்துடனேயே வர்க்கி கேட்டான்.

"அப்படியிப்படி காணும். அதனால் நீங்க பயப்படவேணாஞ் சார். அது ஒன்னும் ஒபத்திரவம் செய்யாது."

கூடவந்த ஆண்களையும் வயதுவந்த இளம் பெண்களையும் வயது முதிர்ந்த தாய்மார்களையும், சிறுவர்களையும் சிறு குழந்தைகளையும் ஒன்று சேர்த்து நடுவில் விட்டுவிட்டு, வர்க்கி தன்னுடைய டார்ச் லைட்டை மின்ன வைத்தான். கையில் பெரிய தொரு கட்டாரிக்கத்தியை நிமிர்த்திப்பிடித்து எல்லாருக்கும் பின்னால் நடந்தான். அவர்களை அழைத்துக்கொண்டு அவர் களுக்கு முன்னால் அந்தோணி சென்றான்.

அரைமணி நேரம் நடந்த பின், அவர்கள் அந்தோணியினுடைய குடிசை முற்றத்தை அடைந்தார்கள்.

அந்தோணி உள்ளே சென்று விளக்கைக் கொளுத்தினான். அவர்கள், குடிசையின் வராண்டாவில் ஏறி, பெட்டி மூட்டைகளை யெல்லாம் இறக்கி வைத்துவிட்டு, பாயை விரித்து தலைமாடு கால்மாடாகப் படுத்தார்கள்.

அந்தோணி அந்தக் குடிசையின் மேற்குப் பக்கத் தாழ்வாரத்தை அடைந்து, ஒரு பெரிய சொம்பில் தண்ணீரை நிரப்பி அடுப்பில் வைத்து தீ மூட்டத் தொடங்கினான்.

"அங்க என்ன செய்யற அந்தோணி?" என்று படுத்த இடத்தி லிருந்தே தலையைத் தூக்கி உரக்கக் கேட்டான் வர்க்கி.

".... கொஞ்சங் கஞ்சி காச்சப்போறேன்."

"ஒனக்கு மட்டும் செஞ்சுக்கோ அந்தோணி. எங்களுக்கு வேணாம்!"

"பரவாயில்ல. நீங்க ரொம்ப தூரம் பயணம் செஞ்சி ரொம்பக் களைச்சுப் போயிருக்கீங்களே?"

"களைப்பாயிருந்தாலும் பசி எடுக்கல அந்தோணி. நாங்க தலைச்சோலை உள்ள ஒரு ஓட்டல்ல சாப்பாடு வாங்கி சாப்டுட்டு தான் லாரில ஏறினோம்."

"ஒங்களுக்கு வேண்டாதிருக்கலாம். கூட வந்த சிறிசுங்க இருக்கே? அதுங்களுக்கு ராத்திரில கொஞ்சங் கஞ்சியாச்சும் கொடுக்காம இருக்கக்கூடாது. அப்புறம், நீங்களும் என் குடிசைல ராப்பட்டினி கெடக்க என் மனசு சம்மதிக்கல. இங்க அரிசியும் வெறவும் நெறய இருக்கு. சோறாக்கற வேலை மட்டுந்தானே... அதுக்கென்ன?" என்று அந்தோணி அடுப்போடு அக்னிப் பரீட்சை செய்து கொண்டு சொன்னான்.

"அப்படின்னா, ஒனக்குத் தனியா செய்யக் கஷ்டமாயிருக்கும். ஆனிக்குட்டி, நீ போய் அந்தோணிக்கு ஏதாச்சும் ஒதவி செய்யேன்."

பெண்கள் படுத்திருந்த பாயிலிருந்து ஓர் இளம் பெண்ணின் உருவம் மெல்ல எழுந்தது. சுமார் பதினான்கு வயதான ஒரு பருவ மங்கை. அவள் எழுந்து, அவிழ்ந்து கிடந்த தன் தலைமுடியைக் கட்டிக்கொண்டு, மயங்கிய விழிகளுடன் கூடிய மங்கிய புன்னகையோடு மெதுவாக அந்தோணியின் அருகே நகர்ந்து வந்து, தான் செய்யவேண்டிய வேலையின் உத்திரவிற்காக, காத்து, ஒரு குழம்பிய நிலையில் நின்று கொண்டிருந்தாள்.

அந்தோணி அவளை உற்றுப்பார்த்தான். அவளுடைய உதடுகளுக்கிடையே ஒரு முல்லைப் பூமாலை தெளிந்து வந்தது. அவள் கீழே பார்த்துக் கொண்டு, "நான் கஞ்சிக் காய்ச்சறேன்" என்று கூறினாள்.

அந்தோணியை அங்கிருந்து எழுந்து கொள்ளச் சொல்வதற்கான ஒரு விண்ணப்பமாக அந்த வாக்கியம் அமைந்தது. அந்தோணிக்கு அனுதாபம் தோன்றியது. அவள், பயணத்தினால் நன்றாகக் களைத்திருந்தாள். அவள் மூலம் அப்போது வேலை வாங்க அவன் மனம் அனுமதிக்கவில்லை. அவளுடைய "சர்வீஸை" நிராகரிக்கவும் தோன்றவில்லை. ஒன்றும் சொல்ல நாக்கு எழும்பவில்லை. அவன் அடுப்பில் அருகிலிருந்து விலகினான்.

ஆனிக்குட்டி, மீண்டும் முகத்தை உயர்த்தி மலர்ந்த விழிகளால் அந்தோணியின் முகத்தை நோக்கினாள். மறுபடியும் அந்த முல்லைப்பூமாலை ஒன்றை வெளியிட்டு, மெல்ல அடுப்பிற்கு முன்னால் கால்களை மடக்கி அமர்ந்து தலை குனிந்து அடுப்பை ஊதத் தொடங்கினாள்.

ஆனிக்குட்டியின் மலர்ந்த விழிகளில் பயணக்களைப்பு உறைந்து கிடந்ததோடு, ஓர் இரக்கமோ அல்லது உதவியற்ற தன்மையோ, ஏதோ ஒன்று நிழல்தட்டியிருந்தது. ஒரு மான் குட்டியின் முகபாவத்தைப் போல் அவள் முகமும் இருந்தது. அவளுடைய சுருண்ட தலைமுடி தூசு படிந்து நிறம் மாறியும் அலங்கோலப்பட்டும் கிடந்தது. குட்டையான மயிர்கள் காற்றில் அலைந்து, நெற்றியிலும் கன்னங்களின் மேல் பரப்பிலும் இடையிடையே உருண்டு கொண்டிருந்தன. அடுப்பில் வேகமாகப் பற்றுகின்ற நெருப்பில் பொன்போன்ற பிரகாசத்தில், அவளுடைய இடது கன்னத்தில் உதடுகளுக்கு அருகில் சிறு வட்ட வடிவில் ஒரு மச்சம் தெளிந்து காண ஆரம்பித்தது.

அந்தோணி அவள் அருகில் நின்று கொண்டே அவைகளையெல்லாம் பார்த்தான். பின், அந்த யுவதியை அதுபோல்

பார்த்துக்கொண்டு நின்றதில் தான் குற்றம் செய்து விட்டோமோ என எண்ணி அவன் பச்சாதாபப்படவும் செய்தான்.

சிறிதுநேரம் சென்றதும் அந்தோணி அடுக்களையின் அருகிலிருந்து கொஞ்சம் மரவள்ளிக்கிழங்கு எடுத்துக் கீழே போட்டு, தோலை உரிக்கத் தொடங்கினான்.

"கரண்டியில்லியா" என்று ஆனிக்குட்டி திரும்பி அந்தோணியிடம் கேட்டாள்.

"அதோ அங்க.. ஆங்... மூங்கில் கழி தொங்கிக்கிட்டு இருக்குதே அதுக்குப் பின்னால உள்ள தட்டியில சொருகி வைச்சிருக்கும் பாரு."

ஆனிக்குட்டி தரையில் கையை ஊன்றி எழுந்து தட்டியில் சொருகி வைத்திருந்த கரண்டியை உருவி எடுத்து அடுப்பின் மேடையில் வைத்தாள்.

"அரிசி எங்க வச்சிருக்கீங்க?" என்று அவள் மீண்டும் கேட்டாள்.

"அந்த சொம்புல அளந்து வெச்சிருக்கேன்."

அரிசியுள்ள சொம்பைக் கையில் எடுத்துக்கொண்டு அவள் அரிசி கழுவுவதற்காக வெளியே சென்றாள்.

அரிசியைக் கழுவி அடுப்பிலுள்ள பாத்திரத்தில் போட்டுவிட்டு, அவள் மீண்டும் முன்பு போலவே முகத்தைக் குனிந்து உட்கார்ந்து கொண்டாள்.

மரவள்ளிக் கிழங்கை நறுக்கிக் கொண்டிருக்கும் போதே அந்தோணியின் மனதில் பல புதிய சிந்தனைகள் கடந்து போய்க்கொண்டிருந்தன. ஆனிக்குட்டியை அந்தோணி, அன்று நடந்து வந்து கொண்டிருக்கும்போதுதான் பார்த்தான். ஒரே ஊர்க்காரர்கள்; ஒரே சமூகத்தவர்கள்; ஒரே காட்டு மண்ணில் பிறந்தவர்கள்; ஆனால் அவர்கள் சந்தித்துக் கொள்வது அவர்கட் பிறந்த மண்ணிலிருந்து இருநூறு மைல்கள் தூரத்திலுள்ள மற்றொறு மலைப்பிரதேசத்தில் வைத்து, அதுவும் குடும்பத் தலைவன், குடும்பத் தலைவியாக வேஷம் போட்டு நடிக்க கூடிய் ஒரு காட்சியில்...

வர்க்கியும் அவன் கூட்டாளிகளும் நல்ல உறக்கத்தில் மூழ்கி இருந்தார்கள். அந்த இரண்டு இளம் இதயங்கள் மட்டும் விழித்திருந்து வேலையைப் பரிமாறிக்கொண்டிருந்தன. இருவருக்குள்ளும் பலதைப் பற்றித் தெரிந்து கொள்ளவும் பேசிக் கொள் ளவும் ஆசை உண்டு. ஆனால் இருவரும் ஒன்றும் உரையாடவில்லை.

அந்த அமைதியில் அடுப்பின் அக்னி மட்டும் ஒரே சீரான ஹூங்காரத்துடன் ஜொலித்துக்கொண்டிருந்தது.

"வர்க்கி சார் ஒன் அப்பாவா?" வெகுநேர அமைதிக்குப் பின் அந்தோணி அவளிடம் ஒரு கேள்வியைக் கேட்டான்.

"இல்ல" என்று அவள் கீழே பார்த்தவாறு தலையைக் குலுக்கிவிட்டு, "எனக்கு அப்பாம்மா யாருமில்ல. அவரோட தூரத்து சொந்தக்காரி நான்" என்று பதில் கூறினாள்.

"எனக்கும் அப்பாம்மா யாருமில்லை. என்னோட சித்தப்பா தான் என்னை வளர்த்தது" என்று அந்தோணி இரக்கத்துடன் சொன்னான்.

ஆனிக்குட்டி தன் கருவிழிகளை மலரச்செய்து அந்தோணியின் முகத்தை இரக்கத்துடன் பார்த்தாள்.

அந்தோணியும் அவளை ஏறிட்டுப் பார்த்துவிட்டு, "சித்தப்பா என்னை இங்கே தனியா விட்டுட்டு, அவரு அங்க தனியா வசிக்கிறாரு" என்று கூறினான்.

"அப்ப இந்தக் காட்டுப்பிரதேசத்தில் தனியாவா வசிக்கிறீங்க?"

"தனியா இல்ல. கர்த்தரும் எங்கூடவே இருக்காரு."

"ஐயோ!" முழுமையான ஓர் அநுதாபப் பிரகடனம் ஆனிக்குட்டியின் உதடுகளிலிருந்து அடர்ந்து விழுந்தது.

அந்த ஓர் அநாதைப் பிறவிகளும் இவ்வாறு பரஸ்பரம் தங்களுடைய உதவியற்ற தன்மையை நிரூபித்தவண்ணம் இரண்டு மணி நேரத்தைக் கழித்தார்கள்.

கஞ்சியும் மரவள்ளிக்கிழங்கும் வெந்து தயாரானதும் அந்தோணி வர்க்கியையும் அவனுடைய கூட்டத்தாரையும் தட்டி எழுப்பினான்.

அவர்கள் வராண்டாவில் அமர்ந்து கஞ்சியையும் அதற்கான வேகவைத்திருந்த கிழங்கின் தொட்டுக்கையையும் சாப்பிட்டுக் கொண்டிருக்கும்போதே, முன்பக்கத்தில் தூரத்திலுள்ள ஒரு குன்றின் சரிவில் தெரிந்த வெளிச்சத்தைச் சுட்டிக் காண்பித்து, "அங்க தங்கியிருக்கிறது நம்ம ஜனங்களா?" என்று கேட்டான் வர்க்கி.

"இல்ல இங்க உள்ள ஒரு மொதலாளியோட காரியஸ்தன், கிருஷ்ணநம்பியாரோட வூடுதான் அங்க தெரியுது" என்று அந்தோணி சொன்னான்.

மறுநாள் விடியற்காலையில் எல்லோரையும் எழுப்பிவிட்டு பயணத்தைத் தொடர வர்க்கி உத்திரவிட்டான். அவர்கள் பெட்டிகளையும், மூட்டைகளையம் தலையில் தூக்கி வைத்துக் கொண்டு வரீதின் இருப்பிடத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். அந்தோணி வழிகாட்டியாக நடந்தான்.

அந்தக் குன்றுப் பிரதேசங்கள் உதய வெளிச்சத்தில் குளித்துக் கொண்டு நின்றன. காய்கறித் தோட்டம் புதிய விவசாயத்தினால் அங்கங்கே பச்சைக்கம்பளத்தை விரித்திருந்தது. அந்தக் குன்றின் உச்சியில் மட்டும் சில புதர்களும் மூங்கில் காடுகளும் வெட்டப் படாமல் இருந்தன. அவை அந்தக் குன்றுக்கு ஒரு தலையலங் காரத்தைப் போன்று மலர்ச்சியாக இருந்தன. அது வர்ணம் பூசப்பட்ட ஒரு சீனா ஜாடியில் ஒரு பூச்செண்டைச் சொருகி வைத்திருப்பது போன்று தோன்றிற்று. அந்த ஜாடியில் வயிறு பாகத்தில் ஒரு மச்சம் விழுந்தது போல் அந்தோணியின் சிறிய குடிசையும் தூரத்தில் தெரிந்தது.

"இவையெல்லாம் ஒன்னோட விவசாயம்தானா, அந்தோணி?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் வர்க்கி.

"ஆமாம்" என்று விநயத்துடன் ஒரு புன்னகை செய்து கீழே பார்த்துக்கொண்டே சொன்ன அந்தோணி, "எல்லாம் கர்த்தரோட கருணைதான். எல்லாம் சேந்து முப்பது ஏக்கரு இருக்கு. சுமாரா பதினைந்து ஏக்கர் எடத்தில வெவசாயம் நடக்குது" என்று கூறினான்.

அத்தனையும் சொன்ன அந்தோணி எதேச்சையாகத் திரும்பி பார்த்தபோது, ஆனிக்குட்டியின் கருவிழிகளுக்கு நேரே அவன் பார்வை சென்று விழுந்தது.

பத்து மணிக்கு அவர்கள் வரீதின் இருப்பிடத்தை அடைந்தார்கள்.

குடிசை வராண்டாவில் போட்டிருந்த ஒரு கயிற்றுக் கட்டிலி லிருந்து இளைத்துக் குலுங்கிக் கொண்டு, தாடியும் மீசையும் வளர்ந்த விகாரமான ஒரு முகம் அவர்களை எதிர்நோக்கியது.

பாவம், வரீது. அவன் மலேரியா காய்ச்சல் கண்டு ஒரேடியாகப் படுக்கையில் விழுந்து பத்து நாட்கள் கழிந்துவிட்டன. மஞ்சள் பூத்த கண்களைத் திறந்து பெருமுச்சுடன், தன்னை நோக்கித் தன் கையாலேயே சுட்டிக்காட்டி, "பாத்தீங்களா என நெலமைய?" என்று கேட்ட வரீது, பின்பு பத்து விரல்களையும் உயர்த்தி

விரித்துக்காட்டி, "இத்தனை நாளாய்ட்டது நான் படுக்கையில படுத்து..." என்று சொன்னான்.

## 5

வரீதின் நிலங்கள் ஆனைக்கயம் ஔசேப்பு என்னும் மற்றொரு திருவிதாங்கூர் கிறிஸ்துவனைச் சேர்ந்த நிலங்களுக்குட்பட்டதாகும். ஔசேப்பு, ஏராளமான மலை நிலங்களை எழுதி வாங்கி கவனித்து வந்தான். அவற்றில் ஒரு பாகத்தை பெரிய பணக்காரர்களல்லாத, புதிதாகக் குடியேறுபவர்களில் சிலருக்குப் பங்கிட்டுக் கொடுக்க ஒதுக்கியும் வைத்திருந்தான். நிலம் மட்டுமில்லாமல், விவசாயத்திற்கு முதலீடு செய்யவும் ஔசேப்பு உதவிகள் செய்து கொண்டிருந்தான்.

ஔசேப்பின் குடும்பம் மீனச்சல் தாலூக்காவில் இருந்து வந்தது. 1940-ல் தான் ஔசேப்பின் குடும்பமும் அங்கே வந்து தங்கள் இருப்பிடத்தை ஏற்படுத்திக் கொண்டார்கள். திருவிதாங்கூருடன் இருந்த எல்லா உறவுகளையும் அறுத்துக்கொண்டு, தங்கள் சம்பாத்தியத்தை எல்லாம் மலபாரின் மலையோரங்களில் பத்திரப்படுத்தியிருக்கின்றார்கள்.

1938 முதல் திருவிதாங்கூரில் கிறிஸ்துவ பிரபுத்துவத்தையும், அவர்களுடைய செல்வச் செழிப்பையும் நொறுக்கி அடக்குவதற்காக எழும்பிய அதிகார பூர்வமான ரகசிய ஆலோசனைகளின் எதிரொலிகள் ஔசேப்பினுடைய கிராமத்தையும் பயப்பட வைத்துவிட்டன. தங்கள் எதிர்காலத்தைப் பற்றி அந்தக் கிறிஸ்துவக் குடும்பங்களுக்கு பல பய உணர்ச்சிகளையும் உண்டாக்கி விட்டன. நாட்டில் பல குழப்பங்களும் புகைந்து கொண்டிருந்தன; பல கட்டுக்கதைகளும் விளம்பரப் படுத்தப் பட்டுக்கொண்டிருந்தன. அவர்களின் வங்கிகள் காகிதப்பெட்டிகளைப்போல் அந்தச் சூறாவளியில் இடிந்து விழுந்தன. அவர்களுடைய செல்வீக நிலவரம் தடுமாறிவிட்டது. தலைவர்கள் ஜெயிலுக்குச் சென்றார்கள். வாழ்வு நாசமாயிற்று. ஆர்ப்பாட்டத்தினால் எவ்விதப் பலனும் கிடைக்கவில்லை. காரணம், மதப் பாதுகாப்பு என்ற நியாயத்தின் மறைவில், ஆட்சியின் அதிகார வர்க்கங்கள் அந்தக் காட்டு மிராண்டித் தனத்திற்கான குடி கெடுக்கும் வேலைக்குத் துணைநின்று உதவிக்கொண்டிருந்தன.

அந்தச் சூழ்நிலையில், அந்தக் கெட்ட குடிப் பகையின் புகை மூட்டத்தில் வாழ்க்கையைத் தொடர்ந்து நடத்துவது என்பது சந்தேகமான போது, அவர்களில் சிலர் மலபாரின் மக்கள் நடமாட்டமில்லாத வனப்பிரதேசத்தில் தஞ்சம் புகுந்தார்கள். அவர்களுக்கு அங்கே லாபகரமான முறையில் நிலங்களும் கிடைத்தன. எதிரில் நிற்கும் ஆபத்திலிருந்து, கண்ணுக்குப் புலப் படாத ஒரு பாக்கியத்திற்குத் தாங்கள் துள்ளி விழுந்துள்ளதாக கண நேரத்தில் அவர்களுக்குப் புரிந்து விட்டது.

வடக்கே சென்ற அகதிகள் குபேரர்களாக மாறிய கதை, மேலும் சிலரை அங்கே பாய்ந்தோடச் செய்தது. தங்கள் நிலங்களையும் வீட்டு மனைகளையும் கிடைத்த விலைக்கு விற்றுவிட்டு, கொஞ்சம் வெள்ளி நாணயங்களுடன், அவர்கள் கூட்டங்கூட்டமாக வடக்கு நோக்கி மூட்டை கட்டத் தொடங்கினார்கள். அந்தக் கூட்டத்தில் வந்து சேர்ந்தவன்தான் ஔசேப்பு.

முடிவற்றுக் கிடந்த குறுங்காடுகள், ஔசேப்பில் இடைவிடா முயற்சியினால் முதல்தர எஸ்டேட்டுகளாக மாறின. தன்னுடைய எஸ்டேட்டின் நடுவில் அழகான ஒரு பங்களாவையும் அவன் கட்டினான். மனைவியும் இரண்டு குழந்தைகளுமாக அவன் சுகமாக வாழ்ந்து வருகிறான்.

வரீதின் விண்ணப்பத்தை அனுசரித்து வர்க்கி, ஔசேப்பிடம் சென்று தன் நிலையைப் பற்றித் தெளிவுப்படுத்தினான்.

தன்னிடம் உள்ள நிலங்களில், சும்மா கிடக்கும் சில ஏக்கர் நிலங்களை வர்க்கிக்குக் கொடுக்கலாம் என்று ஔசேப்பு சொன்னான். வர்க்கிக்கு அது விருப்பமில்லை. அவனிடம் 6000 ரூபாய்கள் இருந்தன. புதிய நிலங்கள் சொந்தமாக எழுதிக் கொள்ளக் கிடைத்தால் நல்லது என்றும், அதற்கு ஔசேப்பு ஏற்பாடு செய்து கொடுக்கவேண்டும் என்று சொன்னான். அதுதான் வர்க்கியின் விண்ணப்பம்.

"நான் அதப்பத்தி யோசிக்கிறேன்" என்று கூறிய ஔசேப்பு, "ராமக்கிடாவுக்கு ஆளனுப்பிக் கூப்பிட்டுக் கேட்டுப் பாக்கறேன். பாலங்கோட்டு மொதலாளிக்கிட்ட கொஞ்சம் அதிகமாவே மலைங்க இருக்குன்னு கேள்விப்பட்டேன்" என்று பதில் சொன்னான்.

"அதெல்லாம் சரியாவக் கொஞ்சக் காலமாவது ஆவுமே. அது வரைக்கும் நாங்க தங்கறதுக்கு ஒரு எடம் பார்த்துக் கொடுக்கணும்" என்று வர்க்கி விண்ணப்பித்துக் கொண்டான்.

"ஆதுக்கொண்ணும் செரமமில்ல. மேலக்குன்னு சரிவுல கொஞ்சம் குடிசைங்க காலியா இருக்கு. நீங்க வேணுமானா அங்க தங்கிக்கலாம்!"

அதன்படி, வர்க்கியும் அவன் குடும்பமும் மேற்குக் குன்றின் மூங்கில் குடிசைகளில் ஒன்றைக் கைவசம் செய்து தங்க ஆரம்பித்தார்கள்.

வர்க்கியின் கூட்டத்தில் வந்த சாக்கோ, ஔசேப்பிற்குச் சொந்த மான ஐம்பது ஏக்கர் நிலத்தை எடுத்துக்கொண்டு விவசாயத்தை ஆரம்பித்தான். அந்தக் கூட்டத்தின் மற்றோர் அங்கமாக இருந்த மத்தாயியும், நூறு ஏக்கர் நிலத்தை எடுத்துக்கொண்டு வேலை செய்ய ஆரம்பித்தான். மீதி பேர்கள் வர்க்கியைச் சுற்றிக்கொண்டு நின்றார்கள்.

## 6

வர்க்கியும் அவன் கூட்டமும் வந்து சேர்ந்த மறு நாள்தான், வர்க்கீஸும் அவன் கூட்டமும் அந்த மலை நாட்டிற்குள் பிரவேசித்தார்கள். ஔசேப்பின் எஸ்டேட்டிலிருந்து இரண்டு மைல்கள் தூரத்திலுள்ள ஒரு மலைச்சரிவுக்கு அவர்கள் சென்றார்கள். அங்கே ஜானியின் ஆட்கள் அவர்களை வரவேற்கக் காத்துக்கொண்டு நின்றிருந்தார்கள்.

தன் சொந்த ஊரிலேயே ஒரு சிறு குபேரனாக இருந்தவன் ஜான். தன் ஊரிலிருந்த கொஞ்ச சொத்துக்களை விற்று, ஒரு லட்சம் ரூபாயை எடுத்துக்கொண்டு அவன் மலபாருக்கு வந்தான். 500 ஏக்கர் நிலங்களை அவன் சொந்தமாக எழுதிவாங்கி வைத்திருந்தான். ஒரு கோடிரூபாய் செலவு செய்தாலும், தன்னுடைய புதிய நிலங்கள் முழுவதையும் வெட்டி மராமத்து செய்து, விவசாயம் செய்ய சாத்தியமில்லை என்று கண்டு கொண்டபோது, அவன் தன் ஊரிலிருந்த ஒவ்வொரு ஏழைக் குடும்பத்தாரையும் வரவழைத்து, தான் வாங்கிய இடங்களை கொஞ்சங்கொஞ்சமாகப் பங்கு பிரித்துக் கொடுக்கத் தொடங்கி னான். வர்க்கீஸின் கூட்டமும் அவ்வாறு வரவழைத்ததால் வந்து சேர்ந்தவர்கள்தான்.

ஜான், ஒரு மலையுச்சியில் விசாலமானதொரு பங்களாவைக் கட்டிக்கொண்டு வசித்து வருகிறான். அவன் திருமணமாகாதவன். தொம்மன் என்னும் பெயருடைய ஒரு வேலைக்காரச் சிறுவனும்,

காரியஸ்தன் அந்தஸ்தில் ஈப்பன் என்றோர் இளைஞனும் அவனுடன் இருந்தார்கள். அவர்கள் இல்லாமல் சில நிரந்தர விருந்தாளிகளையும் அங்கே எப்போதும் காணலாம். மலங்குழி வர்க்கீஸும் அப்படிப்பட்ட நிரந்தர விருந்தாளிகளில் ஒருவன்தான். ஆறாயிரம் ரூபாயுடன் வர்க்கீஸ் மலபாருக்கு வந்தான். சொந்த மாக ஓர் எஸ்டேட்டைத் துவங்க முயற்சி செய்தான். பாலின் பெரியப்பா மனைவியின் மாமியினுடைய மகன்தான் வர்க்கீஸ். இருவரும் ஒரே பள்ளியில் படித்தவர்கள். அவ்வாறுள்ள உறவு களை அனுசரித்து ஜான், வர்க்கீஸுக்கு உதவிகள் செய்வதாக ஏற்றுக்கொண்டு அவனைத் தன்னுடைய பங்களாவிலேயே தங்க வைத்துள்ளான்.

வர்க்கீஸினுடைய கும்பலில் வந்தவர்களுக்கெல்லாம், ஜான் தன் நிலங்களைப் பங்கிட்டுக் கொடுத்தான்.

குளியன் பாறைக்குன்றின் மேற்குச் சரிவுமுதல், அந்த எல்லையில் இருபக்கக் கரைகளும் சேருகின்ற கூர்மையான முனை வரை, கோணல் மாணலாகக் கிடக்கும் சுமார் முப்பத்தைந்து ஏக்கர் நிலங்களை மாத்தனும் மத்தாயியும் பங்கிட்டுக்கொண் டார்கள். மேற்குப் பகுதி மத்தாயிக்கும், கிழக்குப்பகுதி மாத்த னுக்கும் கிடைத்தன.

மத்தாயி தன்னுடைய பங்கில் வேலியடைத்து, அங்கே பலமானதொரு விவசாயத்தைத் தொடங்கத் திட்டம் போட் டான். அங்கேயிருந்து, தெற்கே ஒன்றரை மைல் தூரத்தில் உள்ள கொஞ்ச நிலத்தைச் சொந்தமாக எழுதி வாங்கி, மாத்தாயியும் அவனுடைய குடும்பமும் அங்கே குடியிருக்க உறுதி செய்து கொண்டார்கள்.

தங்களுக்குக் கிடைத்த இடத்தில் மாத்தனும் அவனுடைய குடும்பமும் வாழ்க்கையை ஆரம்பித்தார்கள். மூன்றே நாள்களில் அவர்கள் அங்கே ஒரு மூங்கில் குடிசையைக் கட்டி முடித்துவிட்டு, ஜானினுடைய பங்களாவில் வைத்துவிட்டு வந்திருந்த தங்களு டைய கட்டு மூட்டைகளையும், வீட்டுச் சாமான்களையும் தங்கள் வீட்டிற்கு எடுத்துச் சென்றார்கள்.

அந்தப் பசுங்காட்டின் ஒரு பக்கத்தில், சிறகை விரித்து உட்கார்த்திருக்கும் காட்டுக்கழுகைப் போல், மாத்தனுடைய புதிய மூங்கில் குடிசை காணப்பட்டது. அந்தக் குடிசைச் சிறகினுள்ளே இருந்துதான் அவர்களின் புதிய வாழ்க்கையும் விரியப்போகிறது. சுற்றிலும் முதிர்ந்து நிற்கும் படர்ந்த காடுகளை ம், தொட்டா

சிணுங்கு புதர்களையும் வெட்டி அப்புறப்படுத்தினால், தங்கம் போன்ற நிறத்திலுள்ள கனத்த மண் காணப்பட்டது. விலை மதிக்கமுடியாத தானிய வகைகளைப் பரிமாறப் போகும் ஒரு தங்கத்தட்டை, அந்தப் பச்சை நிறக் கம்பளத்தினால் மூடி வைக்கப்பட்டிருந்தது.

மாலை நேரத்தில் தங்களுக்குச் சொந்தமாக மாறியுள்ள அந்த ஈரப் பூமியை, மரியம் கண்களை உயர்த்திப் பார்த்தாள். அவளுடைய கருத்த இருண்ட கண்களில் கனத்த கனவுகள் நடனம் புரிந்தன. ஓராயிரம் ஆசைகள் அதில் அடங்கியிருந்தன. ஒரு லட்சம் எதிர்பார்ப்புகள் எதிரொலித்தன. குதிரைப் புல்லும் தொட்டாச்சிணுங்கிச் செடியும் தழைத்து வளர்ந்து, காட்டு ஜந்துக்களின் கூத்தம்பலமாகக் கிடக்கின்ற அந்தக் குறுங்காடு களின் சுய நல ஆட்சி, இனி தங்களுடையதுதான் என்று அவள் எண்ணிக் கொண்டாள். எவ்வளவு நிலங்கள் தங்களுக்குச் சொந்த மாகக் கிடைக்குமென்று திருவிதாங்கூரிலிருந்து போது யூகிக்கக் கூட சாத்தியமில்லாமலிருந்தது. அது உண்மையும்கூட. மலபாரின் மலை நிலங்கள் பழைய செய்திப் பத்திரிக்கைகளைப் போல் யாரும் உபயோகிக்காமல் வெறுமனே கிடந்தன.

"மலவாருல மூக்காப் பணத்துக்கு மூணு ஏக்கரா காடு கெடைக்கும்" என்று வண்டிக்காரன் பாச்சுப்பிள்ளை சொன்ன போதுகூட அவள் அதை நம்பியதில்லை.

மரியம் கிழக்கே பார்த்து கணக்கு கூட்டினாள். குடிசையைச் சுற்றிலும் ஒழுங்குபடுத்தி மராமத்துச் செய்து காய்கறிகள் பயிரிடவேண்டும்; அப்புறம் வயக்காடு எல்லை வரையில் நேந்திர வாழை நட வேண்டும். குன்றின் உச்சியில் நிறைய முந்திரி மரங்களை வளர்க்கவேண்டும். மலைச் சரிவில் ஒரு பக்கத்தில் நெல் பயிரிட வேண்டும். மறு பக்கத்தில் மரவள்ளிக்கிழங்கு, கேழ்வரகு, சாமை, பருப்பு வகைகள் முதலியவைகளைப் பயிரிடவேண்டும். ஒரு வருஷம் இதேபோலக் கழித்தால், "அதோ இருக்கே, அதான் மாத்தன் மொதலாளி எஸ்டேட்டு" என்று மற்றவர்கள் பொறாமையுடன் பார்த்துச் சொல்வார்கள்.

## 7

அவர்கள் மீண்டும் மீண்டும் வந்துகொண்டே இருந்தார்கள்.

தங்களின் குறைந்த சம்பாத்தியங்களைக் கூடையில் நிறைத்துத் தலையில் சுமந்தும், வண்டியில் ஏற்றியும் அவர்கள் கூட்டம் கூட்டமாக வந்து சேர்ந்து கொண்டிருந்தார்கள். அழுக்கு ஆடைகளை அணிந்த தரித்திரக் கூட்டங்களைக் கால் நடையாகவும், கொஞ்சம் சுமாரானவர்கள் மாட்டு வண்டியில் பயணம் செய்தும், முதலாளிகள் காரிலும், லாரியிலுமாக வந்து கொண்டிருந்தார்கள்.

1943-ன் இறுதிக் கட்டம். இரண்டாம் உலக மகா யுத்தத்தில் உக்கிரமான நேரம். உலகம் முழுமையும் வெடி மருந்துகளின் கொடும் புகையினால் மூடிக்கிடந்தது. மனித உயிர்கள் வறுக்கப் பட்டுக் கொண்டிருந்தன. பேராசை மனிதத்துவத்தைத் திருடிச் சுரண்டியது. உலகம் தோன்றிய நாள்முதல் இப்படி வீங்கி வெடிக்கின்ற நிமிடங்களைக் காலம் கண்டிருக்க முடியாது.

பர்மாவையும், மலேயாவையும் விரோதிகள் (எதிரிகள்) பிடித்து அடக்கி விட்டார்கள்.

ஹிந்துஸ்தான் திணறிக் கொண்டிருந்தது. நாடு முழுவதும் பஞ்சத்தினால் நடுங்கியது. பொருள்கள் யாவும் யுத்த முன்னணிக்குச் சென்றன. பதார்த்தங்களெல்லாம் போர்க் களத்திற்குள் புகுந்தன. பூமியிலுள்ள எல்லாப் பொருள்களுக்கும் அவசியம் நேரிட்டது. விலை கூடியது. இழுபறி நடந்தது.

திருவிதாங்கூரின் உட் பிரதேசங்களில் ஏழைக் கிறிஸ்துவ விவசாயிகள் வாழ்க்கையும் கரியத் தொடங்கியது. தூரத்தில் எங்கேயோ நடக்கின்ற யுத்தத்தீ அவர்களுடைய உயிர்காற்றையும் இழுத்துக்கொண்டு சென்றது. கள்ள மார்க்கெட்டும், கள்ள வியாபாரமும், யுத்தக் கெடுபிடியும் உண்டாக்கிய பண நெருக்கடிகள் எங்கும் பொங்கத் தொடங்கின. ஏழை மக்களுக்கு மூச்சுத் திணறியது. மணலுக்குக்கூட விலை ஏறிக் கொண்டிருக்கும் போது, மனிதத்துவத்துக்கு மட்டிலும் விலை வீழ்ந்து கொண்டிருந்தது.

மூட்டை ஒன்றுக்கு எட்டு ரூபாய் விலையிருந்த அரிசிக்கு 'பிளாக் மார்க்கெட்டில்' அறுபத்தைந்து ரூபாய் கொடுக்க வேண்டியதாயிற்று. மலை நிலங்களுக்கு விலை ஏறிற்று. பதினைந்து சென்ட் நிலம் கிடைத்தாலும், அதில் செய்யும் உழைப்புக்குத் தக்கபடி விலை கிடைக்காத, விளைச்சலை எடுக்கக்கூட சந்தேகமாக இருந்தது. அது போதாதென்று குத்தகையும் நிலையாகக் கிடைப்ப தில்லை. கைவசமுள்ளதற்கும் பாதுகாப்பில்லை. குடிசையுரிமைச்

சட்டமும் இல்லை. ஒருவகை முதலாளித்துவம்தான் அங்கே நடப்பிலிருந்தது.

வாழ்க்கையின் இந்த நிச்சயமற்ற தன்மையிலிருந்தும், வறுமையின் மரணப் பிடியிலிருந்தும் மீள்வதற்கு இரண்டு வழிகள் தான் அவர்களின் முன்னால் காணப்பட்டன.

"ஒண்ணு பட்டாளத்துக்குப் போ அல்லது மலவாருக்குப் போ!"

இளைஞர்களில் ஏராளமானவர்களும், பட்டாளத்தில் சேர்ந் தார்கள். அதற்கு மனமில்லாத சிலரும், கஷ்டநிலையிலுள்ள சில குடும்பங்களும் மலபாருக்குப் புறப்படத் தீர்மானித்தார்கள்.

மலபாருக்குச் செல்ல அவர்களுக்கு வேறு சில பேராசைகள் கூட உண்டாக்கியிருந்தன.

சில ஆண்டுகளுக்கு முன்பு நடந்த போராட்டத்தின் தோல்வியைத் தொடர்ந்து, உண்டான ஏமாற்றத்திலிருந்தும் விடுபட்டு ஆறுதல் பெறுவதற்காக, அவர்களுடைய சமுதா யத்தைச் சேர்ந்த சில பேர்கள் மலபாரில் மலைப் பிரதேசங் களுக்குத் தங்கள் இடங்களைவிட்டுக் குடி பெயர்ந்து போய் விட்டார்கள். அவர்களில் சிலர் லட்சாதிபதிகளைப் போல ஊரில் பவனிவரத் தொடங்கினார்கள். இவர்கள் கார்களில் மதுப்பாட்டில்களை நிரப்பிக் கொண்டு வந்தார்கள். தங்கச் சங்கிலியும், தங்கக் கை கடிகாரமும், இரத்தின மோதிரங்களும், சில்க் சட்டையும், கனத்த சரிகை வேட்டியும் அணிந்து, அவர்கள் பளபள வென்று மின்னிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் செல்லும் இடங்களெல்லாம் விழாக் கொண்டாடினார்கள். அவர்களுடைய இந்த ஆடம்பரத்தில் ஏழைப்பட்ட கிராம மக்கள் மயங்கி விட்டார்கள்.

அந்தக் குட்டிக் குபேரன்களாக வேஷம் போட்டு வந்தவர்களில் சிலருக்கு, மலபாரில் ரப்பர் தோட்டங்கள் உண்டாகியிருந்தன. 1940 முதல் ரப்பரின் விலை கவர்ச்சியாய்க் கூடியதனால், அவர்கள் திடீரென்று குட்டிக் குபேரர்களாக மாறினார்கள். அந்தக் கதையொன்றையும் ஊர்க்காரர்கள் ஆலோசிக்கவில்லை. முன்பு, அவர்களுடன் சென்றிருந்த மற்ற நபர்களுக்கு என்ன நடந்திருக்கும் என்பதைப் பற்றியும் அவர்கள் கண்டுபிடிக்கவில்லை. தங்கள் எதிரில் நடித்துக் கொண்டிருக்கும் இவர்களைப் பெரும் குபேரர்களாக்கியது மலபார்தான் என்று நம்பினார்கள். மலபார் பொன் காய்க்கும் மரமென்று, அவர்கள் தங்கள் கண்களை மூடிக்கொண்டு நம்பினார்கள்.

"மலவாருக்குப் போ". -என்ற வாக்கியம் அவர்களுடைய கோஷமாக வெடித்தது.

அவர்கள் கூட்டத்தோடு கூட்டமாக மூட்டை கட்ட ஆரம்பித்தார்கள். அவர்கள், தங்கள் வாழ்க்கையில் சம்பாதித்ததை முழுவதையும் நோட்டுக் கட்டுகளாக மடியில் முடிந்து கொண்டு, மலபாரின் மாய பூமிக்குப் பயணத்தைத் தொடங்கினார்கள்.

மலபாரில் கிழக்குக் காட்டுத் தோப்புகளில், செல்புற்றுகளைப் போல் மூங்கில் குடிசைக்குள் எழும்பத் தொடங்கின. மலைப் பாம்புகள் மயங்கிக் கிடந்த பாறை இடுக்குகள், விவசாயக் கருவிகளின் அறைகளாக மாறின. நரைத்து வளர்ந்த தாடியை வைத்து உறங்குகின்ற முப்பாட்டன் குன்றுகள், காய்கனிகள் நிறைந்த மரத் தாம்பாளத்தை ஏந்தி நிற்கும் அப்ஸரஸ்களாக மாறின.

## 8

விடியும் முன்பே மரியம் எழுந்து கஞ்சி வேக வைத்தாள்.

உதயசூரியன் வனமேகலைக்குப் பின்னால் சிகப்பு நிறத்தைத் தெளித்தான். மரியம் குடிசையின் வராண்டாவில் உட்கார்ந்து, கீழ்த்திசையை நோக்கியவாறு மனம் கொண்டமட்டும் இனிய கனவுகளைப் பின்னிக் கொண்டிருந்தாள்.

நன்றாக வெளிச்சம் பரவியது. மாத்தான் இன்னும் தூக்கத்திலிருந்து விடுபடவில்லை. அவன் பன்றியைப்போல் குறட்டை விட்டுக் கொண்டு தூங்கினான். அணிந்திருந்த வேட்டியினால் தன் உடல் முழுவதையும் மூடிக் கொண்டு, மூன்று மடங்குகளாகச் சுருங்கிக் கிடந்த மாத்தானைக் கோபத்துடன் நோக்கிய மரியம் கூச்சலிடத் தொடங்கினாள். அவனிடம் எவ்வித அசைவும் ஏற்படவில்லை. அவள் அவனைப் பலமாக உருட்டிக் கூப்பிட்டாள். பதிலில்லை.

"பாவி செத்துக்கித்துப் பூட்டானா?" அவளுக்கு வந்த கோபத்தை அடக்கவே முடியவில்லை.

அவள், மாத்தனுடைய மத்தங்காய்த் தலையைப் பிடித்துக் கீழே இடித்தாள். 'ட்ரும்' என்றொரு சப்தம் உண்டாயிற்று. அந்த சப்தம் தான் மாத்தனை எழுப்பி இருக்கவேண்டும். அவன் கண்களைத் திறந்தான்.

சண்டைக்கு அழைக்கும் மரியத்தின் கண்களைத்தான், அவன் கண் விழித்ததும் பார்த்தான். அவன் மெதுவாகப் பாயில் எழுந்து

உட்கார்ந்து, வேட்டியை இடுப்பில் சுற்றிக்கட்டி நான்கு புறங் களையும் உற்றுப் பார்த்தான்.

"ஏய், என்னா இது? மத்தியானமாயிட்டுதே, தெரியல?1 என்று மரியம் அலறினாள்.

"என்னா வேணும் என்ற பாவத்தில் மாத்தன் மரிய்த்தின் முகத்தைப் பார்த்தான்.

"இப்படி மத்தியானம் வரைக்கும் படுத்துத் தூங்கி சுகம் பெறவா இங்க மூட்டைக் கட்டிக்கிட்டு வந்திருக்கோம்? - கஞ்சியக் குடிச்சிட்டு மம்முட்டிய எடுத்துக்கிட்டு காட்டுக்கு வா."

அந்தப் போர்க் களத்திற்கான அழைப்பு, மாத்தனின் மூளையில் கொஞ்சம் அரிப்பை உண்டாக்கியது. உடலை அசைப்பது என்பது அவனால் சகித்துக் கொள்ள முடியாதது. தன் தேகத்தை வெண் ணெய்க்கட்டியைப் போல அசையாமல் வைத்துக் கொண்டிருப்பது தான் அவனது ஆசை. ஆனால் மரியத்தின் முன்னால் தப்ப முடியாது. அவள் ஓர் உக்கிர அரக்கியாகி விடுவாள்.

மாத்தன் கிழக்கே பார்த்தான். தன்னுடைய சுகமான தூக்கத்தைக் கெடுக்க வந்த சூரியனை நோக்கி இளித்துக் காட்டுவதுபோல் பல்லிளித்தான். பிறகு, மெதுவாகக் கையைத் தரையில் ஊன்றி எழுந்து வேட்டியை மீண்டும் அவிழ்த்து உதறிக் கட்டினான். மூக்கைச் சித்தினான். தலையில், காதுகளுக்குமேல் இரண்டு பக்கங்களிலும் கொஞ்சம் சொறிந்து கொண்டான். வாயைப் பிளந்து ஒரு கொட்டாவி விட்டு, கீழ் உதட்டை நீட்டிக் கொண்டு, முற்றத்தில் நிறுத்தி வைக்கப் பட்டிருந்த மண்வெட்டியை ஒருமுறை விரோத மனப்பான்மையுடன் பார்த்தான். பின்பு வேலையை ஆரம்பிக்கிறேன் என்ற பாவத்தில் மரியத்தின் முகத்தை அனுதாபத்துடன் ஒருமுறை நோக்கினான்.

மரியம் அடுக்களையைத் தாண்டிச் சென்று, பழையக் கஞ்சி நிறைந்த கலையத்தையும், கரண்டியையும், கிழங்கு வேகவைத்த சட்டியையும் மாத்தன் முன்னால் கொண்டுவந்து வைத்தாள்.

பல் தேய்ப்பது, முகம் கழுவுவது போன்ற காரியங்கள், மாத்தனுக்கு ஒத்துக் கொள்ளாத இட்டங்களாகும். மரியம் சண்டைபோட்டுக் கட்டாயப்படுத்தினால், அவன் தன் முகத்தில் கொஞ்சம் தண்ணீரைக் காட்டுவான்.

கஞ்சியும், வெந்த கிழங்கும் முன்னால் வந்ததும் மாத்தன், மிருகக் காட்சி சாலையிலுள்ள கரடிக்குத் தீனி கிடைத்ததைப்போல்

முன்னும் பின்னும் பார்க்காமல், அவற்றை வாரி வீசி விழுங்கத் தொடங்கினான். இரண்டே நிமிடத்தில் அவன் அந்தப் பாத்திரங் களைக் காலியாக்கிவிட்டு, உதட்டைத் துடைத்துக்கொண்டு எழுந்தான்.

"கொஞ்சம் வெத்தலப் பாக்கு இருந்தா கொடேன்" என்று மரியத்தைப் பார்த்து இதயத்தை தொடும் தொனியில் கேட்டான்.

"அந் பாய்க்கட்டுக்குள்ள சொருவி வெச்சிருக்கு. எடுத்துக்க," என்று உள்ளே தொங்கவிடப்பட்டிருந்த பாய்க்கட்டைச் சுட்டிக் காட்டினாள் மரியம். மண்வெட்டியில் அப்பியிருந்த மண்ணைச் சுரண்டிக் கொண்டு அவள் மாத்தனுக்காகக் காத்துக்கொண்டு நின்றாள்.

மாத்தன் நன்றாக வெற்றிலை போட்டுக்கொண்டான். பிறகு, ஒரு காகிதத்தில் கொஞ்சம் வெற்றிலைப் பாக்கையும் சுண்ணாம்பையும் புகையிலையையும் பொட்டலமாகக் கட்டி மடியில் முடிந்து கொண்டு, குதிரையைப்போல் கீழுதட்டை நீட்டி, அசை போட்டுக்கொண்டு முற்றத்திலிறங்கி மண்வெட்டியைத் தூக்கித் தோளில் சாத்திக் கொண்டு மரியத்தின் பின்னால் நடந்தான்.

வெயிலுக்கு இளஞ்சூடு ஏற்பட்டுக் கொண்டிருந்தது. இலை நுனிகளிலுள்ள பனித்துளிகள் அப்போதும் மின்னிக் கொண் டிருந்தன. கிழக்குப் பக்க மலைச்சரிவுகள் சூடேற்றும் காலை வெயிலில் மூழ்கி நின்றன. மரியம் ஈரம் வற்ற ஆரம்பித்த இளம் புல்லின் வழியாக நடந்து, குன்றின்மேல் ஏறத் தொடங்கினாள். பின்னால் மாத்தனும் ஏறினான்.

அவள் தங்கள் குன்றின் சரிவை நிமிர்ந்து பார்த்தாள். பசுமையாகத் தழைத்து நிற்கும் பச்சைக் காய்கறித் தோட்டங் களும், அவைகளுக்குக் கரையமைத்துக் கொண்டு ஒரு வாய்க் காலும், அதற்கும் அப்பால் தவிடு தூவியதுபோல் தோன்றும் வயலும் தெரிந்தன.

மரியம் புற்களைச் செதுக்க தொடங்கினாள். மாத்தனுடைய மண்வெட்டியும் செதுக்கியது.

வெயிலுக்குச் சூடு ஏறத் தொடங்கியது. குன்றுகள் சாம்பல் நிறம் கலந்து காணப்பட்டன.

மரியம் ஓய்வு எடுத்துக் கொள்ளாமல் கொத்திக் கொண்டிருந் தாள். கொழுத்துக் தடித்துத் தழைத்திருந்த தொட்டாச்சிணுங்கிச் செடிகள் ஒன்றோடொன்று கட்டிப்பிடித்துப் படர்ந்து,

நீக்ரோவின் தலையைப் போல் கிடந்தன. அதனால், அந்தக் குன்றின் உச்சிக்கு 'கிராப்பு' வெட்டுவது என்பது அத்தனை சுலபமில்லை. மரியம் குனிந்த தலையை நிமிர்த்தாமல் தீவிரமாகக் கொத்திக் கொண்டிருந்தாள். அந்த உறுதியான சரளை மண்ணில் அவள் தன் மண்வெட்டியைத் தாளம் தவறாமல் தரையில் பதித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய வெளிறிய முகம், வியர்வையினால் நனைந்தும், வெய்யிலில் கருத்தும் தூசு படிந்தும் கிடந்தது. செம்மண் படிந்த தலைமுடி, சணல் நூல் கட்டுப்போல் தோன்றியது. வியர்வையில் அவளின் குட்டை முடிகள் நெற்றி யுடன் ஒட்டிக் கொண்டிருந்தன. கொத்துகின்ற தாளத்தை அனுசரித்து, அவளுடைய குழைந்த மார்பகங்கள் அவிழ்ந்த ரவிக்கைக்குள் உசலாடித் துள்ளிக் கொண்டிருந்தன.

புல்லைக் கொத்திப் புரட்டியும், செதுக்கி நீக்கியும், செக்கியதை வரிசைக்கிரமமாகப் போட்டும், அடிமாற்றி அடிமாற்றி, மரியம் முன்னால் செல்லும் காட்சியைப் பார்த்தால், ஒரு சம்ஹார நடனத்தைப்போல் தோன்றும்.

மாத்தனும் புல்லைக் கொத்துகின்றான் என்று பேருதான். அவன், தன் தலையை ஒரு பக்கமாகச் சாய்த்து, நாக்கை நான்கு அங்குலத்துக்கு வெளியே நீட்டிக் கொண்டு மெதுவாகக் கொத்துவான். மறுபடியும் மரியத்தை ஒருதரம் பார்ப்பான். தலையை மறு பக்கத்துக்குச் சாய்ந்து, அங்கேயே மீண்டும் ஒருமுறை கொத்திப்பார்ப்பான். பிறகு, மண்வெட்டியைக் கீழே வைத்துவிட்டு, கைகளை நீட்டி விரித்துத் திமிர் முறித்து, எச்சிலைத் துப்பிவிட்டு மீண்டும் மண்வெட்டியை எடுத்து உதடுகளை இறுகக் கடித்துக்கொண்டு பாய்ந்து பாய்ந்து கொத்துவான். அதேபோல் சிறிது நேரம் சென்றதும், மண்வெட்டியைக் கீழே சாய்ந்து வைத்து, அதைப் பழுது பார்ப்பதுபோல் சிறிது நேரம் அதனைத் தொட்டுத் தடவிக் கொடுப்பான்.

மாத்தனின் அலட்சியங்கள் ஒன்றையும் மரியம் கவனிப்ப தில்லை. அவள் ஓர் உக்கிர விரதத்தின் ஒரே குறிக்கோளோடு போரிட்டுக் கொண்டிருந்தாள்; அந்த மலை நிலங்களில் தலையெழுத்தை மாய்த்துக் கொண்டிருந்தாள்.

மேரிக்குட்டி, ஜானை இடுப்பில் வைத்துக்கொண்டு குன்று ஏறி வந்தாள். தாயைக்கண்ட குழந்தை கைகளை நீட்டி அழ ஆரம்பித்தது. மரியம் மண்வெட்டியைக் கீழே வைத்துவிட்டு

முன்னால் வந்து, குழந்தையைக் கைநீட்டி வாங்கி, முத்தம் கொடுத்தாள். ஒரு பாறைக் கல்லின்மேல் சென்று உட்கார்ந்து கொண்டு, அதை மடியில் கிடத்தி ரவிக்கையை விலக்கிப் பால் கொடுத்தாள்.

ஜானி கால்களை ஆட்டித் தாய்ப்பாலை உறிஞ்சிக் கொண்டிருக்கும்போது மரியம், தாய் கொத்திக்கிளறிச் சுத்தப்படுத்திய நிலத்தைத் தளர்ந்த பார்வையில் படரவிட்டாள்.

மாத்தன் மண்வெட்டியைக் கீழே வைத்துவிட்டு, மடியிலிருந்த வெற்றிலைப் பொட்டலத்தை எடுத்து மெல்ல மரியத்தின் அருகே வந்து, அந்த பாறைக் கல்லுக்குக் கீழே முழங்காலை மடக்கி உட்கார்ந்தான்.

மாத்தன், உலர்ந்து சுருங்கிய வெற்றிலையை நிமிர்த்தித் துடைத்துப் பழைய பத்திரத்தைப் பரிசோதிப்பதுபோல் சிறிது நேரம் வெற்றிலையின் ஒவ்வொரு நரம்பையும், கரும் புள்ளிகளையும் பார்த்துக் கிள்ளி எடுத்துக் கொண்டிருந்தான். சுண்ணாம்புக் கரண்டத்தை எடுத்து அதிலிருந்து கொஞ்சம் சுண்ணாம்பை வழித்தெடுத்து வெற்றிலையில் தடவி, அதை மடித்துச் சுருட்டி, வாயில் திணித்துப் பாக்குடன் சேர்த்து மென்றான். சிறிது நேரம் சென்றதும் புகையிலைத்துண்டை இரண்டு விரல்களால் விரித்து முகர்ந்து வாசலைப் பார்த்துவிட்டு, மீண்டும் விரல்களால் சுருட்டிக் கடை வாயினுள் துருத்திக் கொண்டான். கண்களை இறுகமூடி, வாயை இருபக்கங்களுக்கும் இழுத்து இழுத்து நீட்டி, பல்லை இளித்து அவன் மென்று கொண்டிருக்கும்போது, மரியம் உரத்த குரலில் கூறினாள்.

"தோபாரு... அந்தக் காட்டு மரத்த வெட்னாதான் மத்த வேலை நடக்கும். அதும் வேர பறிச்சி எடுக்காமல் போனா, அங்க ஒன்னும் கொத்த முடியாது."

மாத்தன் தன் கொண்டைக் குழியிலிருந்து முரட்டுச் சப்தத்தைப் புறப்பட வைத்தான். பிறகு, மரியத்தின் முகத்தைக் கண்சிமிட்டாமல் பார்த்தான்.

மாத்தனுடைய உருண்டு ஒடுங்கிய கண்கள் மரியத்தின் முகத்தைப் பிடித்துக் கொண்டுவிட்டன.

'ஆச்சரியமா இருக்கே!' மாத்தன் மனதில் நினைத்துக் கொண்டான். 'மரியம் எப்படி இவ்வளவு சீக்கிரம் ஒரு சின்னப் பொண்ணா மாறினா?'

ஆமாம், அவள் கன்னங்கள் உப்பித் தடித்திருக்கின்றன. சோம்பல் கலந்து ஒரு சுயதிருப்தி அலை வீசும் அந்தக் கருவிழிகளில் அபூர்வமானதொரு அழகு குடிகொண்டிருந்தது.

இளமையை விட்டு இறங்கிவிட்ட அந்த மார்பங்கள், வியர்வையில் நனைந்து வெளிறிக் கொழுத்து நிர்வாணமாகக் கிடப்பதை மாத்தன் ஆவலுடன் சாடையாகப் பார்த்தான். அவைகளுக்குக் கீழே குவிந்துள்ள வயிறு, அவனை மேலும் கிறங்க வைத்தது.

மரியத்தைக் கல்யாணம் செய்துகொண்டபோதுகூட, அவன் அவளை இப்படியோர் அழகியாகக் கண்டதில்லை. மாத்தன், தன்னுடைய மனைவியையே இவ்வாறு மனதால் கற்பழித்துக் கொண்டிருந்தபோது, அவனுக்குக் காதல் பொருளானவள், அந்த மலையோரத்துக்கு வரவிருக்கும் மாற்றங்களைப் பற்றிக் கனவு கண்டு கொண்டிருந்தாள். மரவள்ளிக் கிழங்குச் செடிகள் தழைந்து நிற்கும் குன்றின் சரிவு; புல் தைலம் ஊற்றுகின்ற குழாய்; தானியங்களைச் சேர்த்து வைக்கும் களம்- அவருடைய நீலக் கண்களில் இவைகளெல்லாம் நிழல் படமாகத் தெரிந்தன.

மாத்தன் மரியத்தைத் தொட்டபடி நகர்ந்து உட்கார்ந்தான். அவளைத் தொடும் போதெல்லாம் அவனுள் பல விகாரமான உணர்ச்சிகள் ஏற்பட்டுக் கொண்டிருந்தன. ஏழாண்டுக் காலமாகத் தன்னுடன் படுத்துக் கிடந்த பெண்தான் அருகில் இருக்கின்றாள் என்று அவனால் நம்ப முடியவில்லை.

சட்டென மரியம் மாத்தனின் முகத்தைப் பார்த்தாள். மாத்தன் குறுகிப் போனான். என்றாலும், அந்தச் சந்தர்ப்பத்தில் மாத்தனுடைய விகார எண்ணத்துடன் கூடிய ஸ்பரிசத்தையும், மரியாதையில்லாத பார்வையையும் மரியத்துக்கு ரசிக்கத்தான் தோன்றியது. அவள் குழந்தையை மடியில் தூக்கி வைத்துக்கொண்டு ரவிக்கையத் தாழ்த்தி, ஓர் கள்ளப் புன்னகையுடன் மாத்தனைச் சாடையாகப் பார்த்தாள். "எதுக்காப் பொம்பளைய இப்பிடீ முழிச்சிப் பாக்கற. ஒனக்குக் கொஞ்சங்கூட வெக்கமா இல்ல?" என்று விளையாட்டாக ஒரு ஏறு ஏறினாள்.

அந்தப் பரிகாசத்தைக் கேட்ட மாத்தன் உரக்கச் சிரித்து விட்டான். அவன் தைரியத்துடன் மரியத்தின் தோளைக் கட்டிப் பிடித்தான்.

மரியம் எழுந்து நின்று, "இந்த மேரிக்குட்டி எங்க போனா?" என்று கேட்டு நாலாபுறமும் சுழன்று பார்த்துவிட்டு, "அடி, மேரிக்குட்டி..." என்று உரக்கக் கூப்பிட்டாள்.

மேரிக்குட்டி குன்றின் சரிவிலிருந்த புதரிலிருந்து, சத்தம் கேட்டு ஓடி வந்தாள்.

"யம்மா, ஒரு பொணத்த மாதா கோயிலுக்குத் தூக்கிக்கிட்டு போறாங்க" என்று அவள் மேல்மூச்சு வாங்கக் கூறினாள்.

"பொணமா? யாருடி செத்தது?"

"தெரியலியே."

"மலேரியா சொரத்தால செத்துட்டாங்களா?" என்று கேட்ட மாத்தன், "மலேரிய சொரத்தால நேத்துக்கூட ஒருத்தன் செத்துட்டான்" என்று உறுதிப்படுத்திச் சொன்னான்.

"நாம வூட்டுக்குப் போயி கஞ்சி குடிச்சிட்டு வருவோம்" என்று கூறி மரியம் எழுந்தாள். மேரிக்குட்டி ஜானியை வாங்கிக் கொண்டாள்.

மரியத்தின் பின்னால் தலை குனிந்து, மோப்பத்துடன் நடக்கும் காளையப்போல் மாத்தனும் நடந்தான்.

மரியத்தின் பின்னால் நடந்த மாத்தனுக்குப் பல பழைய சிந்தனைகளும் உதித்தன. உண்மையாகவே, சிந்தனைகள் மாத்தனுக்கு ஒருபோதும் பிடிபட்டதில்லை. சிந்திப்பது என்பது, அவனுக்குத் தன் தலையில் ஏற்றி வைத்த சுமையைப்போல் தோன்றும். வாழ்க்கையில் வந்து சேர்ந்த புதிய மாற்றம்தான் அவனைச் சிந்திக்கத் தூண்டியது.

அவனுக்கு மரியத்திடம் எப்போதுமே பயம். தன்வாழ்க்கையைச் சுமந்து செல்வது மரியம்தானென்று அவனுக்கு நன்றாகத் தெரியும்.

மரியத்தின் நிர்பந்தத்தால்தான் அவர்கள் மலபாருக்குப் புறப்பட்டு வந்தார்கள். மாத்தன் இவ்விஷயத்தில் முற்றிலும் மாறுபட்ட கொள்கையுடையவனாக இருந்தான். மரியம், பிடிவாதம் பிடித்து மலபாருக்குப் போகத் தீர்மானித்ததால்தான் இன்று அவர்கள் முப்பது ஏக்கர் நிலத்தின் சொந்தக்காரர்களானார்கள். கர்த்தரின் கருணை இருந்தால், இன்னும் ஐந்தாண்டு முடிவுக்குள் அவர்கள் இங்கே ஆயிரம் ஏக்கர் நிலத்தின் சொந்தக்காரர்களாகி விடலாம். வாழக்கையின் எதிர்கால ஆசைகள் எதிராகிக்கொண்டு வந்தன. மரவள்ளிக் கிழங்கையும், சுடுதண்ணீரையும் மட்டும் ஆகாரமாக உண்டு தன் கிராமத்தில் வாழ்ந்த காலமெல்லாம் போய்விட்டது. இப்போது சொந்த நிலங்களும், விவசாயமும், தோட்டத் தொரவுகளும், வீடுமுள்ள ஒரு குடும்பமாக உயர்ந்திருக்கின்றது.

'பள்ளிப்பரம்பில் மாத்தன் முதலாளி,

குளியன்மலை எஸ்டேட்,

போஸ்டாபீஸ்?- போஸ்டாபீஸ் ஏதாவது இருந்துட்டு போகட்டும்'- என்னும் முகவரிக்குத் தன் ஊரிலிருந்து கடிதங்கள் வருவது என்பது எப்படிப்பட்டதோர் அந்தஸ்தாக உள்ளது. அதெற்கெல்லாம், இதோ முன்னால் நடக்கிறாளே இந்த பெண்தானே காரணம்?

தான் ஒரு நாயாக மாற முடிந்திருந்தால், வாலாட்டிக் கொண்டே மரியத்தின் கால்களை நக்கிக்கொடுத்துக் கொண்டிருக் கலாம் என்று மாத்தன் நினைத்துக் கொண்டான்.

அவர்கள் குன்றிலிருந்து இறங்கி, தாங்கள் வசிக்கும் இருப்பிடத்தை அடைந்தார்கள். கஞ்சி குடிக்க உட்கார்ந்தார்கள்.

காலையில் காய்ச்சிய கஞ்சிதான் அது. மேரிக்குட்டி மரவள்ளிக் கிழங்கை வேக வைத்திருந்தாள். உலர்ந்த கருவாடும் இருந்தது.

மத்தியானச் சாப்பாடு முடிந்ததும் மாத்தன் மேரிக்குட்டியிடம், "மேரிக்குட்டி, நீ மாத்தச்சன் வீட்டுக்குப் போயிக் கோடாலி வாங்கிக்கிட்டு வா" என்று கூறினான்.

மேரிக்குட்டி, ஓலையால் செய்த ஊதுகுழலை ஊதிக்கொண்டே, இரண்டு மைல் தூரத்திலுள்ள மாத்தச்சன் குடிசைக்குப் புறப் பட்டாள். மரியம் பாயை விரித்துப் போட்டு, அதில் ஜானியைத் தூங்கப்போட்டாள். அவளும் அங்கேயே சாய்ந்து கொண்டாள்.

வெளியே கொளுத்துகின்ற வெயில். அந்த மூங்கில் குடிசையின் உள்ளே சுகமான குளிர்ச்சி இருந்தது. குழந்தை உறங்கிவிட்டது. மரியமும் மயங்கிப் போய் இருக்கவேண்டும்.

மாத்தனின் ஸ்பர்சம் அவளை உணர்த்தியது. அவன் அவளைத் தொட்டுக் கொண்டு அருகில் படுத்துக் கொண்டிருந்தான்.

அவனுடைய சூடான மூச்சுக்காற்றையும், இறுக்கிப்பிடித்து ஒரே சீரான திணறலையும் அறியாத பாவத்தில் நடித்துக்கொண்டு அவள் அசையாமல் கிடந்தாள்.

சாதாரணமாக மரியம் மாத்தனுக்கு இப்படிப்பட்ட கெட்ட நடவடிக்கைகள் ஒன்றுக்கும் அனுமதி கொடுப்பதில்லை. மரியத்துக்கு விருப்பம் தோன்றினால், அவள் அவனுக்குச் சிறு அளவில் உடலுறவு சுதந்திரங்களை அனுமதிப்பாள். அவ்வளவு தான். அவன் அதற்காகப் பொறுமையுடன் காத்திருப்பான். கிடைத்ததை வைத்துத் திருப்திப் படுத்திக்கொள்வான். என்றாலும், இன்று காலம் மாறியிருக்கின்றது. அவர்கள் புதிய வாழ்வை உள்ளன்போடு கொண்டாட வேண்டும். தன்னுடைய

நூதனமான இன்ப எதிர்பார்ப்புகளில் அவளுக்கு ஒரு பங்காளி வேண்டும்.

மாத்தன் இன்று வழக்கத்தைவிட வேலையும் செய்திருந்தான். அதற்கு ஒரு பரிசாகவாவது அவனுக்குச் சுகம் கொடுக்கவேண்டும்.

மரியம், மாத்தனுக்கு நேரேத் திரும்பிப் படுத்தாள். அவனுடைய உரோமம் சேர்ந்த மார்பை அன்புடன் தடவிக் கொடுத்தாள்.

## 9

ஒரு மாதம் சென்றது.

வர்க்கி தான் வாங்கப் போகும் நிலங்களைப்பற்றி இன்னும் ஒரு முடிவுக்கும் வரவில்லை. அவனுக்கு அப்படியொன்றும் பெரிய அவசரமில்லை. ரூபாய் நோட்டுக் கட்டுகள் கையிலிருக்கும்போது எதற்கு அவசரப்படவேண்டும்? மிகவும் நல்ல மலை நிலங்களாகத் தேர்ந்தெடுக்கவேண்டும். சுலபமாகக் குறைந்த விலைக்குக் கிடைக்கவும் வேண்டும். அதற்காகப் பல முயற்சிகளும் எடுக்க வேண்டும். நேரம் வரும்போது எல்லாம் தானாகவே சரியாகிவிடும். அதற்கு முன்பு இந்தப் பிரதேசத்தையும் இங்குள்ள மக்களையும் சரியான முறையில் புரிந்துகொள்ள வேண்டும்.

வர்க்கியைப் போலவே, புதிய நிலங்களைத் தேடிக்கொண்டு சுற்றுபவன்தான் செரியானும். ஐம்பது ஏக்கர்வரை செரியான் வாங்கி விட்டான். இன்னும் நூறு ஏக்கர்வரை நிலங்கள் வாங்க வேண்டுமென்று அவன் உத்தேசித்திருந்தான். அவனுடன் அவனுடைய அண்ணன் மகன் அந்தோணியும் இருந்தான். தான் வாங்கிய புதிய குன்றின்மேல் ஒரு மூங்கில் குடிசையைக் கட்டி அந்தோணியை அங்கேயே தங்க வைத்துவிட்டு, செரியான் ஜானின் பங்களாவில் தங்கியிருந்தான்.

தனக்கோர் இடம் சரியாகும்வரை ஜானினுடைய பங்களாவிலேயே தங்குவதற்குத்தான் முடிவு செய்து இருப்பதாக, செறுகாட்டில் வர்க்கி என்ற மற்றொரு புதிய புள்ளியும் ஜானிடம் அறிவித்தான். வர்க்கியின் கையில் ஏழாயிரம் ரூபாய் உண்டென்று புரிந்துகொண்ட ஜான், அவனை வேண்டாமென்று கூறவில்லை.

அவ்வாறு அந்த நான்கு பேர்களும் சேர்த்து, உல்லாசமாக விருந்துண்டும், வேட்டையாடியும், சீட்டு விளையாடியும், குடித்தும் உறங்கியும் நாட்களைக் கழிக்கத் தொடங்கினார்கள்.

காலையில் பதினோரு மணிக்குத்தான் வர்க்கி படுக்கையி லிருந்து எழுந்தான். முதல்நாள் இரவு முழுவதும் மூச்சுமுட்டும் அளவுக்குக் குடித்தான். சாராயமும், பன்றி இறைச்சியும் சர்வ சாதாரணமாக இருந்தன. என்றாலும், ஜான் நேற்று நகரத்திற்குச் சென்று, முதல்தரமான 'சௌத் ஆப்பிரிக்கன்' ஆறு பாட்டிலும், கொஞ்சம் 'டீன் ஃபிஷ்ஷீ'ம், மற்றவைகளும் கொண்டு வந்ததால், போதை முழுமையாக இருந்தது.

கனத்துத் தொங்கும் கண் இமைகளை விலக்கச் சிரமப்பட்டுக் கொண்டு, வர்க்கி படுக்கையிலேயே கிடந்தான். அவன் மெதுவாக மேஜைமேல் கையை நீட்டி, சிகரெட் டின்னில் சிகரெட்டைத் தேடி னான். ஒரு சிகரெட்டுகூட அதில் இல்லை. அவன் கையையூன்றி எழுந்து படுக்கையிலேயே கும்பிடுவதுபோல உட்கார்ந்தான்.

உடல் முழுவதும் சொல்லொணாத களைப்பு, தலை பாரமாக இருந்தது. ஆனால், வர்க்கிக்கு முதல்நாள் இரவில் விருந்து சாப்பிட்டதைப் பற்றியெல்லாம் தெளிவாக நினைக்க முடிந்தது. நகரத்திற்குச் செல்லும்போது, செலவுக்குத் தேவையான அளவு எடுத்துக் கொள்ளும்படி ஜானின் கையில் தான் கொடுத்த நூறு ரூபாய் நோட்டில் மீதியொன்றும் ஜான் தன்னிடம் கொடுக்க வில்லை என்பதையும் அவன் நினைத்துக் கொண்டான். பரவாயில்லை; நூறு ரூபாய் தானே? தன் நண்பர்களும் தானும் எத்துணையளவுக்கு மகிழ்ச்சியுடன் இருந்தோம் என்று நினைத்து வர்க்கி ஆறுதல் கொண்டான்.

வராண்டாவில் யாருடைய காலடி ஓசையோ கேட்டு, வர்க்கி ஜன்னல் வழியாகக் கழுத்தை நீட்டிப் பார்த்தான். ஒரு பனியனும், தோளில் ஒரு துண்டும் அணிந்த நடுத்தர வயதானவன் ஒருவன் வெளியே நின்றிருந்தான்.

"யாரது?" என்று வர்க்கி உரத்தக் குரலில் கேட்டான்.

அந்த மனிதன் வாசற்படியிடம் வந்து, "ஜான் மொதலாளி இங்க இல்லிங்களா?" என்று கேட்டான்.

"என்னமோ தெரியலியே. எஸ்டேட்டுக்குப் போயிருப்பாரு. ஏன் தேடறீங்க,"

"இங்க யாரோ நெலம் வேணும்னு சொன்னாங்களாம். நான் புல்லங்கோட்டு நம்பியாரு காரியஸ்தன்."

"இங்க வாங்க. அதோ... அந்த நாற்காலில் ஒக்காருங்க."

வந்தவன் ஒரு நாற்காலியில் மெதுவாக அழுந்த உட்கார்ந்து கொண்டான்.

"எனக்குத்தான் நெலம் வேணும். ஒங்க காடு எங்க இருக்கு?" என்று கேட்டான் வர்க்கி.

"இங்கேந்து நாலு மைலு கெழக்கே இருக்கு. நாம இன்னிக்கே போயிப் பாக்கலாம்?"

"இன்னிக்கு சௌகரியப்படாது. நாளைக்கிப் போவலாம். ஏக்கரு என்ன வெல வரும்?"

"வெல வெஷயத்துல ஒண்ணும் தகராறு உண்டாவாது. நெலத்த பார்த்த பொறவு அதப்பற்றி தீத்துக்கலாம். பெரிய காடுமில்ல. பாறைகளுமில்ல. கோடப் பயிரு செஞ்சு ஒழுங்கு பண்ணிய மலச்சரிவு தான். நீங்க நேரடியாவே நெலத்த வாங்கனதும் பயிரு வெக்கலாம். அந்த எடத்துக்காகப் பலபேரு கண்ணு வெச்சிருக்காங்க. எங்க எஜமான் நல்ல மரியாதையுள்ளவங்களுக்குத்தான் அந்த நெலத்தக் கொடுக்கணும்னு நெனச்சிக்கிட்டு இருந்தாரு. அப்பதான் ஜான் மொதலாளி இந்தப் பேச்சை பேச ஆரம்பிச்சாரு."

"ஒங்க பேரு?"

"ஒதேனக்குறுப்பு"

"சரி. நாளைக்கிக் காலைல இங்க வாங்க. நாம போயிப் பாப்போம்."

"நாளைக்குக் காலைல நா இங்கேயே வந்துடறேன். இங்கெல்லாம் காரியஸ்தனும் ஏஜண்டுன்னும் சொல்லிக்கிட்டு பலபேரு திரியறானுங்க. அவுங்க வலைல வுழுந்திடாதீங்க. அவுங்க காட்டற நெலமும் கெடைக்காது; கொடுத்த பணமும் கெடைக்காது."

"அப்படிப்பட்ட செல புள்ளிங்க இங்கியும் இருக்காங்களா?"

"இந்தக் காலத்துல எக்கச்சக்கமா இருக்காங்க."

"அப்டின்னா, அவுங்கள்ள செல பேரத்தான் நானும் பாக்கணும்னு இருக்கேன். மொதல்ல அவுங்களத் தொரத்தனும். என்னால இங்க நெரந்தரமாத் தங்க முடியாது. அதனால அவுங்களுக்கு எங்க சொரூபத்தை நான் காட்டறேன்."

வேலைக்காரன் தொம்மன் டீக்கோப்பையை மேஜைமேல் கொண்டு வந்து வைத்தான். வர்க்கி மெல்ல டீயை உறிஞ்சிக் குடித்துக்கொண்டே, "இந்தச் சோம்பேறிப் பசங்க திருவிதாங்கூரு காரங்களப் பத்தி சரியாவே தெரிஞ்சுக்கல. மகாராஜா கிட்டவே நேரடியாப் போர் செஞ்சவங்கதான் இந்தக் கிறிஸ்துவங்க. இவுங்க எப்படிப்பட்டவங்கன்னு பாக்க இந்தச் சோமாறிங்களுக்கு நேரம்

ஒண்ணும் வாய்க்கல" என்று தொடர்ந்து சொன்னான். காரியஸ்தன் ஒதேனக்குறுப்பு விடைபெற்று எழுந்து கொண்டான்.

"அப்படின்னா நாளக்கிக் காலைல பாக்கலாம். அதுக்குள்ள.... ஏய்....என்ன பேரு சொன்னீங்க?.....கதீனா....."

"ஒதேனக்குறுப்பு."

"ஆங்...ஒதேனக்குறுப்பு. சரி ஒதேனக்குறுப்பு. அந்தத் திருட்டு பசங்கள்ள யாராயாச்சும் பாத்தா இங்கக் கொஞ்சம் அனுப்பி வையிங்க. தெரிஞ்சதா?"

"சரி செய்யறேங்க" என்று கூறிக் காரியஸ்தன் சிரித்துக் கொண்டே குடையை எடுத்துக் கொண்டு நடந்தான்.

## 10

காஞ்ஞிரப்பள்ளியிலிருந்து வந்தவன் குழிமாடத்தில் ஔசேப்பு 3,500 ரூபாயும் நான்கு பிள்ளைகளும் மனைவியும் ஒரு மாட்டு வண்டி நிறையப் பெட்டி சாமான்களுமாக, பதினைந்து நாட்களுக்கு முன்பு அவன் இங்கே பிரவேசித்தான்.

மறுநாள் முதலே அவன் இடங்களைத் தேடி அலைந்தான். கடைசியில் பாலங்கோட்டு முதலாளியின் காரியஸ்தன் ராமக்கிடாவை அவனுக்கு யாரோ அறிமுகப்படுத்தி வைத்தார்கள்.

ராமக்கிடா, ஔசேப்பை அழைத்துக்கொண்டு போய், விற்பனைக்காக உள்ள குன்றுபுறங்களைச் சுற்றி காட்டினான்.

விடியற்காலையின் மூடுபனி மலைச்சரிவுகளிலிருந்து மெல்ல மறையத் தொடங்கியது. இளம்பனி வெயிலில் பச்சிலைக் காடுகள் தெளிவாகத் தெரிந்தன.

ராமக்கிடா ஒரு பாறையின்மேல் ஏறி நின்று, கையிலிருந்து ஒரு துண்டுக்கழியை கிழக்கே வீசி எறிந்து, "அதோ தெரியுதே அதெல்லாம் விக்கத்தான் உள்ளன" என்று கூறினான்.

அங்கே ஒரு வனப்பேரரசைக் காணமுடிந்தது. அதைப் பார்த்த ஔசேப்பு திகைத்துவிட்டான்.

"எத்தன ஏக்கரு வேனும்னாலும் ஒங்க இஷ்டம்போல் பங்கு பிரிச்சிக்கலாம்"

ஔசேப்பு, அதை வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டு நின்றுவிட்டான். அதனுடைய சௌந்தரியமல்ல, அவனை ஆச்சரியப்படவைத்தது. அதனுடைய பரப்பளவுதான் அவனை அப்படி நிற்கச் செய்தது.

கிழக்கே குடகு மலைகலைத் தொட்டுக்கொண்டு, நீள நெடுக நிர்வாணமாகக் கிடக்கின்ற புதிய நிலங்கள். அளவையும் விளைவையும் காணாமல் அரசாங்கம் சர்வே செய்யாமல், அனாதையாகக் கிடக்கும் பள்ளத்தாக்குகள். இரும்பின் முனையினாலொ உடைத்தெரியப்படாத கரும்பச்சைநிற நிலங்கள்; கரியினால் எல்லை குறிக்கப்படாத மலைநாட்டு நிலங்கள்.

அங்கே தெரிவது முழுவதும்....ஔசேப்பின் இதயம் துடித்தது. அவ்விடங்கள் முழுவதும் மலைநெல்லும், மரவள்ளிக்கிழங்குமாகத் தழைந்து நிற்கும் அழகிய காட்சி அவனுடைய கற்பனையில் எழுந்தது.

தானிய விதையின் ஸ்பரிசம் படாமல் பரிசுத்தமாக இருக்கும் அந்த பூமிக் கன்னியின்மேல் அவன் தன் கண்களை மூடி லயித்து நின்றுவிட்டான்.

ஔசேப்பு குனிந்து கையிலிருந்த வெட்டுக் கத்தியினால் கொஞ்சம் குழி பறித்து; ஒரு பிடி மண்ணை வாரி எடுத்துப் பரிசோதித்தான்.

எப்படிப்பட்ட அழகான கெட்டி மண்? கடும் தவிட்டு நிறத்தில் புற்றுமண்ணைப் போல் களிப்புள்ள சத்து நிறைந்த புது மண். பல நூற்றாண்டுகளாக இலைகளும், செடிகளும், மரக்கிளைகளும் அழிந்து சேர்ந்தும், பட்சிகளும் மிருகங்களும் இட்ட எச்சங்கள் அழிந்து சேர்ந்தும், மலையிலிருந்து ஓடிவரும் தாது திரவியங்கள் கலந்தும், இயற்கையினாலும் காலத்தினாலும் தொடர்ந்து உண்டான ரசாயன மாற்றத்தால் வீரியம் கூடியும் கிடக்கின்ற விலைமதிப்புள்ள மண். நல்ல பச்சை மாமிசத்தைப் போன்றுள்ள அந்த மண்ணிற்கு அளவுக்காகக் கொடுக்காமல் எடைக்கே நல்ல விலை கொடுக்கலாம்.

"ஏக்கருக்கு எவ்வளவு கொடுக்கனும்?" என்று ஔசேப்பு உள்ளுக்குள்ளேயே ஒரு சிறு பெருமூச்சுடன் குரல் இடறியவாறு கேட்டான்.

ராமக்கிடா மூங்கில் கழியினால் நிலத்தில் குத்தினான்.

"ஒங்களால் எத்தனை ஏக்கரு வாங்க முடியும்?"

"அது, நீங்கள் எதிர்பாக்கிற வெலயப் பொறுத்திருக்கும்."

"ஏக்கருக்கு ஒம்பது ரூபா வீதம் கொடுக்கனும். ஐநூறு ரூபாய் பாதுகாப்பு பணம் வேணும். இதெல்லாம் சரிப்படுத்திக் கொடுப்பதற்காக எனக்கு வேறு கொடுக்க வேண்டி இருக்கும்."

ஔசேப்பு கணக்கு கூட்டிப் பார்த்தான். கையில் மீதி மூவாயிரம் ரூபாய் இருக்கிறது. இருநூறு ஏக்கர் வாங்கினால் 1800 ரூபாய் ஆகும். பாதுகாப்புப் பணம் ஐந்நூறு ரூபாயையும் சேர்த்துக்கலாம். மீதி முந்நூறு ரூபாய் இருக்கும். அது ஒரு வருஷத்திய சாப்பாட்டுச் செலவிற்குப் போதும். வருகின்ற வருஷம் முதலே விவசாயத்திலிருந்து லாபம் கிடைக்க ஆரம்பித்து விடும்.

"எனக்கு இப்ப எழுநூறு ஏக்கரு வேணும்", என்று ஔசேப்பு உரக்கச் சொன்னான். 'பத்து வருஷத்துக்குள் இங்கே தெரிவிக்கின்ற இடங்கடையெல்லாம் நான் கைவசப் படுத்திப்பேன்.' என்று அவன் மனதுக்குள் நினைத்துக் கொண்டான்.

ராமக்கிடா தலையாட்டினான்:

"சரி, நான் ஏற்பாடு செஞ்சு தரேன். நாளைக்குச் சாயங்காலம், ரெண்டு கட்டு வெத்திலயும், ஒரு பிடி நல்ல போயிலக் கட்டும், ரெண்டு பாட்டுலு நாட்டுச் சரக்கும் வாங்கிக்கிட்டு எஜமான் வூட்டுக்கு வந்துடுங்க. நான் அங்கே இருப்பேன்,"

ஔசேப்பு சம்மதித்தான். இருவரும் சேர்ந்து மறுபடியும் அந்த மலைச்சரிவில் கொஞ்சநேரம் சுற்றிச் சுற்றி நடந்தார்கள். தான் தேர்ந்தெடுக்கும் இடத்தின் எல்லையைப் பற்றி ஔசேப்பு பல ஆராய்ச்சிகளையும் நடத்தினான். கடைசியில் ஏறக்குறைய சமச்சதுரமாக ஒன்றுக்கொன்று தொட்டுக்கொண்டு இருக்கும் இரண்டு குன்றுகளின் சரிவுகளையும், அதற்குக் கீழே சமநிலமாகக் கிடக்கின்ற பூமியில் ஒரு பாகத்தையும் அவன் தேர்ந்தெடுத்தான்.

"நல்ல நடு எடத்தைத்தான் தேடிப் புடிச்சிருக்கீங்க." என்று சிரித்துக்கொண்டே அபிப்ராயப்பட்ட காரியஸ்தன், "கல்லப் பொதைச்சாலே நெல்லு வெளயும். கீழே ஒரு வாய்க்காலும் ஓடுது. இனிமே ஒடனடியா இங்க ஒரு வூட்டக் கட்ட ஏற்பாடு செய்யுங்க" என்று மேலும் கூறினான்.

ராமக்கிடா புஞ்சையைக் கொத்துவதைப் பார்க்கக் கிழக்கே போனான். ஔசேப்பு வெற்றியும் மகிழ்ச்சியும் விம்முகின்ற இதயத்துடன் மேற்கே, தான் தங்கியிருக்கும் இடத்தை நோக்கி நடந்தான். குன்றின் சரிவிலிருந்து தோண்டிய மண்ணை அப்போதும் அவன் தன் கையில் இறுகப்பிடித்துக்கொண்டுதான் இருந்தான்.

# 11

பகலில் குளியல் பாறைக்குன்றைத் தூரத்திலிருந்து பார்க்கும் போதெல்லாம், புற்களைச் செதுக்கிக் கொண்டிருக்கும் மரியத்தின் தெளிவற்ற உருவம்தான் அங்கே தெரியும்.

அவள் விடிவதற்குள்ளேயே, கஞ்சியைக் காய்ச்சிக் கலயத்தில் ஊற்றிப் பத்திரமாக மூடி வைத்து விடுவாள். தன் கைக் குழந்தைக்குப் பால் கொடுத்து, அதன் தகப்பனின் அருகில் படுக்க வைப்பாள். பிறகு, முற்றத்தில் இறங்கி, மண்வெட்டியை எடுத்துத் தோளில் வைத்துக்கொண்டு கவாத்துக்குச் செல்லும் பட்டாளத்துக்காரனைப் போல் மலைக்குப் புறப்புட்டு விடுவாள், தரையைக் கொத்திக் கிளறி புற்களைப் பிடுங்கி, மரங்களின் வேர்களை வெட்டுவாள். உச்சி வெயிலில் வியர்க்கும் வியர்வையை அப்படியே தன் உடலில் வடிய விட்டுக்கொண்டு, உடலையும், கைகளையும் அங்கேயிங்கே சாய்க்காமல் புல் செதுக்கும் வேலையை முனைப்பாகச் செய்வாள். பத்து மணியாகும்போது மாத்தனும் மெல்ல மெல்ல அங்கே வந்து சேருவான். மதியமானதும் அவர்கள் வேலையை நிறுத்திவிட்டுத் தங்கள் இருப்பிடத்திற்குத் திரும்புவார்கள். காலையில் காய்ச்சி வைத்துவிட்டு வந்த கஞ்சியைப் பகிர்ந்து குடித்துவிட்டு, அரைமணி நேரம் படுப்பார்கள். மீண்டும் மலைக்குப் புறப்படுவார்கள். இருள் படர்ந்து வழி தெரியாத நேரம்வரை மரியம் தன் வேலையைத் தொடர்ந்து செய்து கொண்டேயிருப்பாள். அதேபோல் அந்தக் குன்று முழுவதும் தெளிவாயிற்று.

சில நாட்கள் கழிந்ததும், தன் பிறப்புடனேயே தோன்றிய சோம்பேறித்தனம் மாத்தனுக்கு மேலும் அதிகரித்தது. அதனால், அவன், 'அரை நாள் லீவு' எடுத்துக் கொண்டு வீட்டிற்கு திரும்பி விடுவான். சில சமயம், 'பிரஞ்சு லீவு' எடுத்து சுத்தமாக வேலைக்குப் போகாமலேயே தங்கிவிடுவான். எந்த வேலையும் செய்யாமல் ஒரே இடத்தில், குனிந்தபடி - ஒரு வகை எந்த மாற்றமுமில்லாத சமாதி நிலையில்-பகல் முழுவதையும் உட்கார்ந்தே பொழுதைப் போக்கிக் கொண்டிருப்பதுதான் அவனுக்கு தன் வாழ்க்கையிலேயே மிகவும் பிடித்தமான இன்பமாகும்.

மாத்தன் வேலை செய்யவில்லை என்றாலும், அவன் தன் அருகில் இருப்பதே மரியத்திற்கு ஒரு ஊக்கம்தான். ஆனால்,

மாத்தனின் பதுங்கல் தன்மை அவளுக்கு ஏமாற்றம் கொடுப் பதைவிட, அவன்மேல் கோபத்தைத்தான் ஏற்படுத்தியது. தன்னோடு கூட, காலையிலேயே குன்றுக்குப் புறப்படவேண்டு மென்ற அவள் அவனுக்கு உத்தரவு பிறப்பித்தாள். மாத்தன் விடியற்காலையிலேயே தூக்கத்திலிருந்து எழுந்திருப்பது பழக்கம் இல்லை. அப்படியே எழுந்து விட்டாலும் தூங்குவது போல் நடித்துக் கொண்டு, மலைப் பாம்பினைப்போல் படுக்கையிலேயே கிடந்து புரளுவான். அவனுடைய திருட்டுத்தனம் மரியத்திற்குத் தெரியும். அதனால், அவள் அவனுடைய காதில் தண்ணீரை ஊற்றுவாள், நீண்ட தாடி முடிகளைக் கிள்ளி இழுப்பாள். மூக்கில் புகையிலையைத் துருத்துவாள். அதுபோல், பல 'மூன்றாம் டிகிரி' வேலைகளைப் பிரயோகித்து, அவனை எழுப்பி மலைக்கு வந்து தன்னுடன் உட்கார்ந்திருக்கச் செய்வாள். புற்களிடம் சாணக்கிய னுக்கு ஏற்பட்ட பகையை விட, நூறு மடங்கு அதிகப் பகை அதனிடம் மாத்தனுக்குத் தோன்றியிருந்தது.

மரியம் வழக்கம்போல் ஒய்வெடுக்காமல், புற்களைச் செதுக்கிக் கொண்டிருந்தாள். செதுக்கிக் கொண்டிருக்கும்போதே அவள் மீதியுள்ள நிலத்தின்மேல் கண்களை ஓடவிட்டாள்.

"ஒரு வாரத்தில் மீதி எடங்களையும் கொத்திச் சீராக்கிவிடலாம்" என்று அவள் தனக்குத்தானே கூறிக்கொண்டாள்.

"ஐய்யயோ, கர்த்தரே!" என்று மாத்தன் கூப்பாடு போட்டான். மரியம் திருப்பிப் பார்த்தாள். மாத்தன் கீழே விழுந்து கிடந்தான்.

மரியம் மண்வெட்டியைக் கீழே எறிந்துவிட்டு, அவன் அருகில் ஓடினாள்.

மாத்தன் மல்லாந்து கிடந்தான்.

வலது காலை இரு கைகளாலும் தூக்கிப் பிடித்துக்கொண்டு, "ஐய்யயோ! என் காலு போச்சேடி!......நான் செத்துடுவேனேடி!......" என்று ஓலமிட்டான்.

மாத்துனுடைய பின்னங்காலின் அடியிலிருந்து இரத்தம் ஒழுகிக்கொண்டிருந்தது. மண்வெட்டி பட்ட வெட்டு அப்படி யொன்றும் பெரிய காயத்தை உண்டாக்கவில்லை. என்றாலும், கால் முறிந்து தொங்கிப்போய் விட்டதுபோல், அவன் கீழே கிடந்து அலைமோதிக் கொண்டிருந்தான்.

மரியம் மாத்தனைப் பிடித்து எழுத்திருக்கச் செய்து, அழைத்துச் சென்று ஒரு பாறையின்மேல் உட்காரச் செய்தாள். வெட்டுவாயில் உள்ள இரத்தத்தைத் துடைத்து எடுத்தாள். மெதுவாகத்

தாங்கிப்பிடித்துக் கொண்டே கீழே கிடந்து அலைமோதிக் கொண்டிருந்தான்.

மரயம் மாத்தனைப் பிடித்து எழுந்திருக்கச் செய்து, அழைத்துச் சென்று ஓர் பாறையின்மேல் உட்காரச் செய்தாள். வெட்டுவாயில் உள்ள இரத்தத்தைத் துடைத்து எடுத்தாள். மெதுவாகத் தாங்கிப்பிடித்துக்கொண்டே கீழே நடத்திச் சென்றாள். தாங்கள் குடியிருக்கும் இடத்தை அடைந்தபின், சில பச்சிலைகளை அரைத்து வெட்டு வாயில் வைத்துக் கட்டினாள். மெல்ல ஒரு பாயில் அவனைப் படுக்க வைத்துவிட்டு, மீண்டும் மலைக்கு வேலை செய்யச் சென்றாள்.

"வேனும்னே காலை வெட்டிக்கிட்டானே பாவி!" என்று புற்களைச் செதுக்கியவாறு தனக்குத்தானே சொல்லிக்கொண்ட மரியம், "இதனால் இந்த மரியம் ஒன்னும் தோத்துட மாட்டா" என்றும் சபதம் செய்து கொண்டாள்.

## 12

மண்! வெறும் மண்தான்! என்றாலும் எத்தனையெத்தனை மகத்துவம் தான் அந்த மண்ணுக்கு இருக்கிறது! மனித வாழ்வின் அடிப்படை அவசியங்கள் எல்லாமும் அதிலிருந்துதான் கிடைக் கின்றன. போதாக்குறைக்கு மனிதத்துவத்தின் அடித்தளமான ஓர் அம்சமும் அதுதான்.

நாம் மண்ணின் ஓர் அம்சமாகப் பிறக்கிறோம். மண்ணின் ஸ்பரிசத்தை விடாமல் வாழ்கின்றோம். மண்ணின் வீரிய அம்சங் களை உள்ளடக்கி வளர்கின்றோம். இறுதியில் மண்ணிலேயே கலந்து விடுகின்றோம்.

இந்த மண்ணுக்காகத்தான் இரத்தத்தைச் சிந்துகிறோம். குழப்பங்கள் உண்டாக்குகிறோம். பெரும் யுத்தங்கள் நடத்துகி றோம். உலகப் பெரும் காவியங்களும்கூட மண்ணின் மணத்தைத் தான் பரப்புகின்றன.

மரியம், தான் கொத்திக்கிளரிய காட்டு மண்ணிலிருந்து ஒரு மண்கட்டியைக் கையிலெடுத்தாள், அதனுடைய ஒவ்வொரு மணலிலும் அவள் வாழ்வில் காட்சிகள் உறங்கிக்கொண்டிருந்தன. அவளுடைய ஆசைகள் அனைத்தும் அந்தக் காட்டுமண்ணின் கட்டியில் ஒட்டிக்கொண்டு இருந்தன. அவளுடைய இரைப்பும், வியர்வையும், பெருமூச்சும் அந்த மண்ணில் இழைந்து கொண்டிருந்தன.

காலை வெயில் படர்ந்து, அதிக் மஞ்சள் நிறத்தைக் காட்டும் அந்த மண் விரிப்பை மரியம் நிமிர்ந்து பார்த்தாள். நாட்கள் செல்லச் செல்ல, மழைச்சாரலினால் நனைந்து பொங்கும் போது, அந்த மண் விரிப்பின் அடியிலிருந்து சுபிட்சத்தின் செய்தியைத் தாங்கிக்கொண்டு வருவதுபோல், அங்குள்ள பசுங்கொடிகள் தூளாக்கிக்கொண்டு இருந்தன. வெளிச்சத்தினால் ஆடும் பசுங்கொடிகள் தூளாகிக்கொண்டு இருந்தன. வெளிச்சத்தினால் ஆடும் புல் வகைகள், ஆயிரக்கணக்கான தளிர்களால் அலங்கரிக்கப் பட்டு, விசாலக் காட்சிகளாகத் தெரிகின்றன. காற்றும் வெயிலும் மழையும்பட்டு அந்தச் செடிகள் தழைத்து வளருகின்றன. அத்துடன் தங்கள் பொன் மணிகளையும் காட்சிக்கு வைக்கின்றன.

அந்தக் குன்றின் மூடுபடலம் முக்கால்பங்கும் நீக்கப்பட்டு விட்டது. இன்னும் கொஞ்சம்தான் மீதமிருந்தது. இரண்டு நாட்களில் அதையும் சரிப்படுத்தி விடலாம்.

தன்னால் அபிவிருத்தி செய்யப்பட்ட காட்சியைக் கண்டு மகிழ்ச்சியடைய, மரியம் குன்றின் மேலே ஏறிச்சென்றாள். அங்கே அவள் கண்ட காட்சி அவளைத் திடீரென்று திகைக்க வைத்து விட்டது.

"ஐயய்யோ! கர்த்தரே!" என்று அவள் கூச்சலிட்டாள். இரு கை களையும் உச்சந்தலையில் அழுத்தி வைத்துக்கொண்டு, "ஐயய்யோ! சாத்தான் என்னைப் பழிவாங்கிட்டானே!" என்று மரியம் ஓலமிட்டாள்.

முதன் முதலில் கொத்திச் சமப்படுத்திய நிலத்தில், ஏராளமாக தொட்டாச்சிணுங்கிச் செடிகள் மீண்டும் புதியதாகத் துளிர்ந்து வந்திருந்தன.

அவை அந்த மலைச்சரிவிலுள்ள சாத்தானின் ஆரம்பப் பற்கள்!.

மரியம் அதற்காக ஏமாற்றமடையவில்லை, மறுநாள் காலை யிலேயே அவள் வெட்டுக் கத்தியையும் மண்வெட்டியையும் எடுத்துக்கொண்டு அந்தக் குன்றின்மேல் குதித்தாள்.

இனிமேல் ஆரம்பத்திலிருந்தே வேலையைத் தொடங்க வேண்டும். வேறு வழியொன்றுமில்லை. அந்த அசுரச் செடியில் மூலக்கருவையே அழிப்பதற்காக அவள் அப்போது அங்கே வந்திருந்தாள். அவள் அந்தச் செடியின் ஒவ்வொரு வேரையும் கொத்திக்கிளறி, வெட்டிப் பறித்தெடுத்து, ஓரிடத்தில் கும்பலாகக்

குவித்துத் தீ வைத்துச் சுட்டுப் பொசுக்கினாள். அடுத்த பதினைந்து நாட்களில் அவள் அந்த மலைச்சரிவு முழுவதையும் அதேபோல் சுத்தப்படுத்தி முடித்தாள்.

இனிமேல் பயிரிடலாம். ஓரிருமுறை மழை மட்டும் பெய்தால் போதும்.

நாட்கள் ஓடின. மாத்தன் காலில்பட்ட வெட்டுக்காயம் இன்னும் ஆறவில்லை. அகலச் சேலைத்துண்டைக் காலில் சுற்றிக் கட்டிக் கொண்டு, மிகுந்த வேதனையை அனுபவிக்கும் முகபாவத்தில் அவன் மல்லாந்து படுத்துக்கொண்டிருந்தான். இளைய குழந்தையைத் தகப்பன் அருகில் தூங்க வைத்துவிட்டு, மரியம் மட்டும் வழக்கம்போல் வேலைக்குச் செல்வாள். வீட்டு வேலைகள் முடிந்ததும் மேரிக்குட்டியும் மரியத்தின் உதவிக்கு ஓடுவாள். மாலையில் அவர்கள் இருவரும் திரும்புவார்கள். மரியத்தின் தலையில் ஒரு கட்டு விறகு இருக்கும். கத்தியும் மண்வெட்டியும் மற்ற கருவிகளும் மேரிக்குட்டியிடம் இருக்கும்.

வீட்டுக்குத் திரும்பியதும், மரியம் தன் விவசாயத்தின் எதிர்கால வேலைகளைப் பற்றி மாத்தனிடம் விவாதிப்பாள்.

"கீழப்பூராவும் மரவள்ளிய நடணும்."

"உம்," என்று மல்லாந்து படுத்திருந்த மாத்தன் முனகுகிறான்.

"போத்தச்சன் கொஞ்சம் நல்ல ஜாதி மரவள்ளிக் குச்சியத் தரேன்னு சொல்லிருக்காரு."

"உம்."

"வூட்டுக்காரன் குஞ்ஞு மாயங்கிட்ட செல பயறு வெதைங்க இருக்கு. ஒருபடி வெதைக்கு எட்டணா கொடுத்தா கெடைக்கும்."

"உம்."

"நெலம் நெறையா இருக்கிறதனால் இஞ்சி மஞ்சள்ளாம் கூட பயிரு செஞ்சிப் பார்க்கணும். போத்தச்சன் வூட்டு முத்தத்துல தொங்கிட்டு இருக்கிற பாகச் செடிய பாத்தியா? எவ்வளவோ பெரிசா இருக்கு!" அந்த வெதையில அஞ்சாறப் போத்தச்சன் கிட்டக் கேட்டுப் பாக்கணும். அங்க சேம்புகூட நெறைய இருக்கு. வெளிச்ச சேப்பங்கெழங்க ஏலியாம்மா கொஞ்சம் திங்கறத்துக்குக் கொடுத்தா, அது அப்பிடியே வெண்ணெயைப் போல இருக்கு. நேந்திர வாழைங்களுக்கு இடையில சேப்பங்கிழங்க நடணும்.

நஞ்ஞு மாயங்கிட்ட நல்லஜாதி அசுரமுளகோட கன்னுங்க இருக்கு. அதுலகூட கொஞ்சம் வாங்கியாந்து நட்டு வைக்கணும்."

"உம்"

மாத்தன் எல்லாவற்றுக்கும் 'உம்' கொட்டினான். அவனுக்கு என்று புது அபிப்ராயங்களோ யோசனைகளோ ஒன்றுமில்லை.

"மேரிக்குட்டீ... நீ கூடைய எடுத்துக்கிட்டு கொல்லைவெளிக்குப் போயி சாணி பொறுக்கிக்கிட்டு வா" என்று மரியம் மகளுக்குக் கட்டளை இட்டாள்.

களிமண்ணால் ஒரு காளைக்கன்றை உருவாக்கிக்கொண்டிருந்தாள் மேரிக்குட்டி. தாயின் ஆணையைக் கேட்டவள், மெல்ல எழுந்து ஓலைக்கூடையை எடுத்துக் கொண்டு வயல் வெளிக்குப் புறப்பட்டாள். குன்றின் சரிவுகளும், வயல்களிலும் மற்ற இடங்களிலுமாக மெல்லச் சுற்றி நடந்து, காய்ந்துபோன சாணத்தைப் பொறுக்கிக் கூடையில் நிரப்பிக் கொண்டுவருவது மேரிக்குட்டியின் வேலையாயிற்று.

## 13

இரு மாதங்கள் கழிந்தன. செரியான் மேலும் கொஞ்சம் காட்டு நிலங்களை வாங்கினான். அவன் தேர்ந்தெடுத்த இடம், கேவலம் வெறும் காடுகளாக மட்டும் இருக்கவில்லை, என்றாலும், பெருங்காடுகளைவிட மக்கள் நடமாட்டமற்ற ஓர் ஒய்விடமாகவே அது இருந்தது.

திப்புவின் மலபார் ஆக்கிரமிப்புக்கு முன், குடகு மலைக்குச் செல்லும் வியாபாரக் கூட்டங்கள் நடமாடும் ஒரு காட்டுப்பாதை அந்த இடத்தில் தான் நீண்டு கிடந்தது. அந்தப் பெரும் வியாபாரிகள் தங்குமிடமாக உபயோகித்து வந்த சத்திரங்களின் இடிபாடுகள், இப்போதும் கூட அங்கே மண் மூடிக்கிடந்தன. சதுர வடிவக் குளங்களும், ஆலமரத்தின் கீழ் கட்டப்பட்டிருந்த ஒய்வு மேடைகளும் இடிந்து விழுந்து மறையத் தொடங்கியிருந்தாலும், அக்காலத்தில் சாலை மரங்களின் வழித்தோன்றல்கள் இப்போதும் அங்கே கோட்டைக் கட்டிக்கிடப்பதைக் காணலாம். அவைகளின் மறைவில் ஒரு மறைந்துபோன கோயிலும்

உண்டு. கோயிலின் சுவர்கள் இடிந்து விழுந்து, அதன் பிம்பமும் விளக்குமாடமும் பலிபீடமும் மறைந்து கிடக்கின்றன.

அங்கே சென்று யாரும் எதற்காகவும் எட்டிப் பார்க்கக்கூடத் துணிவில்லை. அந்தக் கோட்டையில் வாசுகியைவிட, மிகப்பெரிய நாகங்கள் உலவுவதாகவும் வதந்தி உள்ளது. அதன் சுற்றுப் புறத்தில் ஏராளமான வீடுகள் இருந்தனவென்றும், திப்புவின் ஆக்கிரமிப்புக்குப் பின் அந்த வீடுகளின் சொந்தக்காரர்கள் எங்கேயோ ஓடியோ ஒடுங்கியோ போய்விட்டார்கள் என்றும், அங்கே மூடிக்கிடக்கும் கிணறுகளில் கணக்கிலடங்காத புதை யல்கள் மறைந்து கிடக்கின்றனவென்றும் கூறி வருகின்றார்கள், பகலில் கூட அந்தச் சுற்றுப்புறங்கள் வழியாகச் செல்ல அவ்வூர்க்காரர்களுக்குப் பயம்தான்.'

அதன் கீழ்ப்பக்கம் செங்குத்தாக ஒரு பெரிய மலை. மலையின் அடி வாரத்தில் விசாலமானதொரு வயல். அந்த வயல் பிரதேசத்தையும் அதன் சுற்று வட்டாரத்தையும் எழுதி வாங்கி செரியான் அங்கே தனிமையில் வாழத்தொடங்கினான். கோயிலில் பழைய கற்களையும், சில மரச்சாமான்களையும் திருடி வந்து தன் வீட்டின் முக்கால் பாகத்தையும் செரியான் கட்டி முடித்தான்.

நான்கு மைல்கள் தூரத்திலிருக்கும் தொண்டியன் மலையின் மறு பக்கத்தில், தான் வாங்கிய மலை நிலங்களில் பயிரிடவும் அதைக் காவல் காக்கவும் அந்தோனியை செரியான் நியமித்திருந்தான். வாரத்தில் ஒரு முறையோ அல்லது எப்போதாவதோ அவன் அந்தோணியிடம் போய் வருவான். கூலியாட்களுக்கும் மற்ற செலவுகளுக்கும் தேவையான பணத்தை அந்தோணியிடம் கொடுத்து, விவசாய சம்பந்தப்பட்ட சில விவரங்களையும் கூறிவிட்டு அப்போதே திரும்பி விடுவான்.

செரியானுக்கு விசேஷமான நெருங்கிய நண்பர்கள் யாருமில்லை. சில சமயம் அவன் ஜானின் பங்களாவுக்குச் சென்று சீட்டு மட்டும் விளையாடுவான்.

## 14

குன்றுகளும் குறுங்காடுகளும் நிறைந்துள்ள அவ்விடத்தில், மேல் நீல நிறத்தில் விசாலமாகக் கிடக்கும் ஆகாயத்தில் நிறம் மங்கி, அங்கங்கே மழை மேகங்கள் காணத்தொடங்கின.

அந்த மங்கல் சில நாட்கள் நீடித்தது. பிறகு ஒரு நாள் ஒரு போர்ப் பிரகடனத்தைப் போன்று இடியோசைகள் முழங்கின...

மரக்கூட்டங்களைக் கூத்தாடச் செய்த பெருங்காற்றுக்குப் பின், பேய் மழை கொட்டே கொட்டென்று கொட்டியது. வேனல் வெப்பத்தால் சுட்டுச் சுருங்கிப்போன குன்றுகள் எல்லாம் குளிர்ச்சி யடைய ஆரம்பித்தன. வறண்ட நிலங்களிலும், வற்றிப்போன அருவிகளிலும், வெடிப்பு ஏற்பட்ட வயல்களில் அந்தக் குளிர்மழை சிலிர்க்க வைத்தது. மலைவெள்ளம் கீழ் நோக்கிக் குன்றின் சரிவுகளி லுள்ள ஆழம்மிகுந்த வாய்க்கால்கள் வழியாக அடிவாரத்தி லிருக்கும் வெளுத்த வயல்களுக்குக் குதித்துப் பாய்ந்து வந்தது. மலையின் வளமும் தாதுப் பொருட்களும் இலைச்சத்துக்களும் சேர்ந்து வயல்களை வளமாக்கி, இரத்த நிறத்தை ஏற்படுத்தின.

இருண்டு அழகற்ற ஆகாயத்திலிருந்து தொடர்ச்சியாக, பெரும் முழக்கத்துடன் மழை பொழியும்போது, ஒரு ஜீவனைக்கூட வெளியே எங்கும் காண முடியவில்லை. காட்டு மிருகங்கள் பாறைக் குகைகளுக்கும், பறவைகள் மரப்பொந்துகளுக்கும் இலைக்கூட்டங் களின் மறைவிலும் அபயம் தேடிக்கொண்டன. சீறுகின்ற காற்றில் சிதறியோடும் சிறு கிளிகள், மீண்டும் பழைய இடத்துக்கே பறந்து வந்து சேர்ந்தன. இயற்கையின் படைப்புத் தொழில்களின் ஆரம்ப லீலைகள் இவ்வாறு தொடர்ந்து கொண்டிருக்கும்போது, மனிதன் மட்டும் தன் வேலைகளைச் செய்ய முனைப்பாகக் காத்திருந்தான்.

கொத்திக்கிளறி மராமத்துச் செய்த குன்றின் சரிவில் புது மழை பொழியும் காட்சியைப் பார்த்துக்கொண்டு, மரியம் தனது குடிசையின் வராண்டாவில் உட்கார்ந்திருந்தாள். தவிட்டைப் போன்ற மண், மழையினால் நனைந்து குழைந்து உறுதிப்பட்டு கடும் சிகப்பாக மாறியது. அதிலிருந்து ஒரு வாசனை காற்றில் கலந்து வியாபித்தது.

மரியம் மறுநாள் அதிகாலையிலேயே அந்தப் புது மண்ணில் விவசாயத்தைத் தொடங்கினாள்.

விதை விதைத்து, கழி நட்டு, பாத்தி போட்டு, வரப்பு கட்டி, எரு போட்டு, வாய்க்கால் வகுத்து, குழிகளை மூடி - அதுபோல் பல வேலைகளைச் செய்து, அந்தக் குன்றின் சரிவையே ஒரு சித்திரச் சாலையாக மாற்றினாள் மரியம்.

கோணல் மாணலாகப் பொருத்தமற்ற இடங்கள்; சம உயர மற்ற வரப்புகள்; கைரேகை போன்று அழகற்ற ஒன்றுக்கொன்று பின்னிக்கொண்டுள்ள வாய்க்கால்கள்; என்றாலும், அவைகளுக்கு ஒரு தனித்தன்மையும் அழகும் இருந்தன. சொந்தக் கற்பனைச் சாதுரியமும் இருந்தன.

மண்வெட்டியின் மேல் கைகளையூன்றிச் சாய்ந்து நின்ற மரியம், தன்னுடைய மண் வேலைகளைப் பார்த்துத் தனக்குத்தானே திருப்திபட்டுக் கொள்வாள். திடீரென்று எங்கேயோ ஒரு தவறைக் கண்டுபிடித்து, திரும்பிப்போய் ஒரு வரப்பிற்கு அழகூட்டவோ அல்லது பாதைக்கு அகலம் குறைக்கவோ செய்வாள்.

மழை பலமாகப் பெய்து வரப்புகளைக் கரைத்து இடிந்து விடும். மலைவெள்ளம் பாதைகளை இருக்கும் இடம் தெரியாமல் மறைத்து விடும். ஆனால், அவள் அதற்கெல்லாம் சளைக்காமல் மழை நின்றதும் மீண்டும் வேலை செய்து, எல்லாவற்றையும் சரி செய்து விடுவாள். சில சமயங்களில் தலையில் ஒரு முண்டைக் கட்டிக் கொண்டு மழையிலேயே நனைந்தும்கூட அவள் வேலை செய்து கொண்டிருப்பாள்.

மழை சிறது நேரத்துக்கு அமைதியாகும். அப்போது, தவளைகள், மண் அட்டைகள், மலை அட்டைகள் ஆகியவைகளின் ஆர்ப்பாட்டக் கூக்குரலைக் கேட்கலாம். மாலை மயங்கினால், மரக்கிளைகளில் மின்மினிப் பூச்சிகளின் தீபாலங்காரம் தொடங்கி விடும். தங்க நிறத்தில் அநேகாயிரம் எலக்டிரிக் பல்புகள் கட்டப் பட்டுள்ள கூடாரம்போல் காடு பிரகாசிக்கும். மறைவில் எங்கேயோ வேலை செய்து கொண்டிருக்கும் டைனமோ இயந்தி ரத்தில் நிரந்தர ஓசையைப்போல் சுவர்க்கோழிகளின் ரீங்காரமும் கேட்கும்.

இயற்கை அன்னை சகஸ்ரநாமக் கும்பாபிஷேகத்துடனும், வாத்தியக் கோஷத்துடனும், தீபக் காட்சியுடனும் விவசாயத் தேவதையை எதிர்நோக்கி வரவேற்கிறாள்.

அவ் விழாவைப் பார்த்துக்கொண்டே, மரியம் தன் மண் வெட்டியைத் தோளில் சுமந்து மழையில் நனைந்து, நீர் ஒழுக

இருப்பிடத்திற்குத் திரும்புவாள். அப்படி வரும் மரியத்தை வரவேற்க மேரிக்குட்டியும் ஜானியும் ஓடிவருவார்கள்.

மரியம் உடைமாற்றிய பின் ஜானிக்குப் பால் கொடுத்தவாறு அடுப்பருகே சென்று குளிர் காய்ந்து கொண்டு உட்கார்ந்திருப் பாள். அப்போதும் கூட அவள் நினைவெல்லாம் அந்த மலைச்சரிவு களில்தான் இருக்கும்.

மாத்தன் தன்னுடைய போலிச் சமாதியில் முக்கி முனகியவாறு ஒரு மூலையில் கோபத்துடன் உட்கார்ந்திருப்பான்.

இரவில் மழை தீவிரமாகும்போது, குடிசையினுள்ளே உள்ள நிலைமையும் சோதனையாக இருக்கும். ஒவ்வொரு மூலையிலும் மூங்கிலும் மரக்கம்புகளையும் நட்டு நிறுத்தி, அங்கங்கே பனை யோலைகளால் மறைத்து, குதிரைப் புற்களாலும் சிறு சிறு குச்சிகளாலும் மோட்டுவளையை மூடிய அந்தக் குடிசைக்குக் காட்டுக்காற்றையும், மழையையும் தாங்கக்கூடிய உறுதியில்லை. உக்கிரமான கீழக்காற்று வீசும்போது, அந்தக் குடிசை ஆட்டத்தி னால் விழத்தொடங்கும். மழைத்தூரலால் பாயும் படுக்கையும், கொடியில் தொங்கிக்கொண்டிருக்கும் துணிகளும் நனைந்துவிடும். எல்லா இடங்களிலும் ஒழுக்குதான். மோட்டுவளையிலிருந்து நேராக வடியும் ஒழுக்கினால் அடுப்பினுள் தண்ணிர் குளமாக நிற்கும். மரியம் பனையோலையினாலும், பாய்த்துண்டுகளி னாலும், மற்ற பொருள்களினாலும் தனக்கு எட்டும் அளவிலுள்ள பழுதடைந்த பகுதிகளிலெல்லாம் துருத்தி அடைப்பாள்.

பெரியதொரு தேக்கு இலையைத் தலையின்மேல் பிடித்துக் கொன்டே ஜானியை மடியில் மறைத்து, ஒரு பாட்டுபாடியவாறு மேரிக்குட்டி ஒரு மூலையில் ஒடுங்கிக்கொண்டு உட்கார்ந் திருப்பாள்.

## 15

பால் அந்தப் பிரதேசத்தையடைந்து பதினைந்து நாட்கள்தான் ஆகின்றன. அக் குறுகிய காலத்திலேயே, அவனுடைய பிரதாபமும் புகழும் எல்லா மூலை முடுக்குகளிலும் பரவி விட்டன. ஒரு பிரபுக் குமாரனைப்போல் பாலின் வாழ்க்கை அமைந்துவிட்டது.

பாலங்கோட்டுப் பெரிய குறுப்பின் காரியஸ்தன் ராமக்கிடா, பாலைத் தன் எஜமானனிடம் அழைத்துச் சென்றான்.

பாலங்கோட்டு குடும்பம் பழைய அமைப்பில் இருந்தது. சுண்ணாம்பின் ஸ்பரிசத்தை உணராத பழைய சுவர்களும், குஷ்ட ரோகம் பிடித்த வராண்டாவும், புற்களைச் செதுக்கித் துப்புரவு செய்யப்படாத முற்றமும் உள்ள அந்த வீட்டைப் பார்க்கும் போது, மனிதர்கள் புழங்காத வீடென்றுதான் தோன்றும். அந்தப் பாழடைந்த உணர்வை அனுசரித்து, ஒரொ அழகற்ற தன்மையும் அங்கே எங்கும் படர்ந்து பிடித்துக்கொண்டிருந்தது. உண்மையில் அந்த நாட்டிலேயே மிகப்பெரிய பணக்காரக் குடும்பங்களில் அதுவும் ஒன்று.

முதலாளி குஞ்சிராமக் குறுப்பு வராண்டாவின் ஓர் ஓரத்தில் ஒரு பெரிய பலகைமேல் கால்களை மடக்கி உட்கார்ந்து, பல் தேய்த்துக் கொண்டிருந்தார். வலப்பக்கத்தில் தண்ணீர் நிரம்பிய கிண்டி இளம் வெய்யிலில் மின்னிக் கொண்டிருந்தது. அதனருகே ஒரு வாழையிலைத்துண்டில் உமிக்கரியும், மாவிலையும், தென்னை ஈர்க்குச்சியும் வைக்கப்பட்டிருந்தன.

படியைத்தாண்டி வரும் பாலையும், அவன் பின்னால் வரும் ராமக்கிடாவையும் அலட்சியமாகப் பார்த்துவிட்டு, முதலாளி பற்களை இளித்தவாறு பல தேய்ப்பதைத் தொடர்ந்தார்.

பால் வராண்டாவில் மிகவும் கூச்சத்துடன் இரவானத்தின் கீழேயே நின்று கொண்டான்.

"அங்க உட்காருங்க" என்று முதலாளி கையிலிருந்த மாவிலை யினால் வராண்டாவிலிருந்த நாற்காலையைச் சுட்டிக் காண்பித் தார். பிறகு, அந்த மாவிலையைச் சுருட்டி வாயில்போட்டு மெல்லத் தொடங்கினார். பால் நாற்காலியில் அமர்ந்து ஒரு வெறுப்பான பார்வையால் அந்தச் சூழ்நிலையை ஆராய்ந்தான்.

முதலாளி, பல்தேய்த்துக் கொண்டிருக்கும்போதே கடைக் கண்ணால் வந்தவனைச் சாடையாகப் பார்த்து, அவன் மனதைப் படித்துக்கொண்டிருந்தார். சுமுகமானவனும் யோக்கியமுள்ளவனு மான ஓர் இளைஞர்தான். அழகுபடுத்தி சவரம் செய்த முகத்தில் குட்டிக்குரா பவுடரின் பூச்சு அங்கங்கே தெரிந்தது. நடு வகிடு எடுத்து இருபக்கமாகவும் சீவி அலங்காரம் செய்த கருத்த சுருண்ட கனத்த தலை முடி. தங்கப் பிரேமில் பதித்த கண்ணாடி. மேலுதட்டிற்கு மேலே கருப்புப் பட்டு நூலைப்போல் கிடக்கும் அழகான மீசை.

மிகச் சன்னமான சில்க் சட்டையின் உள்ளே, சாண்டோ பனியனின் பின்னல்கள் தெளிவாகத் தெரிந்தன. அலட்சியமாகப்

பிரிந்து கிடக்கும் சட்டைக் காலரின் இடைவெளி வழியாகத் தங்க மணிகள் கோர்ந்த தங்கச் செயின் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்துது. செப்புக் காசின் அளவில் ஒரு கைக்கடியாரமும், தங்கச் செயினும் வலக்கையில் மணிக்கட்டில் லூசாக கிடப்பதுபோல் அணியப்பட்டிருந்தது. கை விரல்களில் இரத்தின மோதிரங்கள் மின்னின. சரிகைக் கரையுள்ள எட்டு முழ வேட்டியும், கருத்து மின்னும் ஷூவும் அவனிடம் இருந்தன.

முதலாளியின் பல் தேய்ப்பு மீண்டும் சிறிது நேரம் நீண்டு நின்றது. பால் குழப்பத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தான். ஏதாகிலும் பத்திரிகைகள் அங்கே எங்காவது கிடக்கின்றனவா வென்று பரிசோதித்தான். ஒரு பஞ்சாங்கம் மட்டும் அந்தச் சாய்வுப் படிமேல் கிடந்ததைக் கண்டான். அவன் தன் பாக்கெட்டில் கையைவிட்டு, தங்கத்தால் செய்யப்பட்ட ஒரு சிகரெட் பெட்டியை உருவி எடுத்து நெக்கித் திறந்தான். ஒரு சிகரெட்டை அதிலிருந்து உருவி எடுத்து உதட்டில் வைத்தான். அடுத்த பாக்கெட்டிலிருந்து ஓர் அமெரிக்கன் சிகரெட் லைட்டரை வெளியே எடுத்து, அதைத் தட்டி உராய்ந்து தீயுண்டாக்கினான். அதில் சிகரெட்டைப் பற்றவைத்து புகையை இழுத்து, அந்தப் புகைச் சுருள்களை வெளியேவிடத் தொடங்கினான். முதலாளி கிண்டியை எடுத்துக்கொண்டு, முற்றத்து மண் த்ரைக்கருகே சென்றார். அங்கே குனிந்து நின்று பயங்கரச் சப்தத்துடன் தொண்டையைக் காரி சுத்தம் செய்து, முகத்தைக் கழுவினார். தோளில் கிடந்து துண்டின் முனையினால் முகத்தையும் கழுத்தையும் பாலிஷ் போட்டு, மூக்கைச் சிந்தி 'களபுளா' என்று தவளைச் சப்தத்தைப் புறப்படவைத்தார். மீண்டும் மூக்கை அழுத்தித் துடைத்துக்கொண்டே மெதுவாக வராண்டாவிற்கு வந்தார்.

காரியஸ்தன் ராமக்கிடா பாலை அறிமுகப்படுத்தினான்.

"பால் மொதலாளிக்குக் கொஞ்சம் நெலம் வேணுமாம். எஜமான்கிட்ட நேராகக் கேட்டு வாங்கலாம்னு வத்திருக்காரு."

முதலாளி கரகரப்பான தொனியில் 'உம்'கொட்டிவிட்டு, தன் துண்டினால் நாற்காலியில் கேன்வாஸைத் தட்டி அதில் அமர்ந்து கொண்டார்.

பால் முதலாளியைக் கொஞ்சம் பயத்துடனும் மரியாதையுடனும் நோக்கினான். அறுபத்தைந்துக்குமேல் வயதாகியும் ஆரோக்கியத்துடன் கூடிய திடகாத்திரமான ஒரு கிழவர்.

முகத்தில் அராதாரணமான ஒரு தேஜஸ் ஜொலித்தது. மார்பில் சிலந்தி வலை போன்று நரைத்த ரோமங்கள் வளர்ந்து படர்ந்திருந்தன.

அவருடைய மூக்கைக் கவனித்துப் பார்த்தபோது பாலுக்கு உள்ளுக்குள்ளேயே சிரிப்பு வந்து போயிற்று. ஒரு லேடீஸ் குடையின் பிடிக்குத் தேவையான மூக்காக அது இருந்தது.

"ஓங்களுக்கு எத்தனை ஏக்கரு நெலம் தேவைப்படுகிறது?" என்று அந்த முதலாளி பாலைப் பார்த்துக் கௌரவத்துடன் கேட்டார்.

பால், அந்த முதலாளியின் அருகே தன் நாற்காலையை நகர்த்திப் போட்டு, முன்புறம் குனிந்து அமர்ந்து சிகரெட்டின் சாம்பலைத் தட்டியவாறு சிறிது நேரம் ஆலோசனை செய்தான்.

"இப்ப நானூறு ஏக்கரு வாங்கிக்கலாம்" என்று பால் வினயமாகப் புன்னகை புரிந்தவாறு சொன்னான்.

"அவ்வளவுதான் வேணுமா? சரி முடிச்சுடலாம்."

முதலாளி சாந்தமான குரலில் பதில் கூறினார்.

"வெலை விஷயம்?...." என்று பால் மீண்டும் புன்னகைத்துக் கேட்டான்.

"போவப் போவ நெலத்துக்கு வெலக்கூடிக்கினு வருதுங்கறது தெரியும்லலே. ஏக்கருக்கு பத்து ரூவா ஆவும்".

"ஆ.... அது ரொம்ப அதிகமாக இருக்கு. எட்டு ரூவா வீதம் முடிச்சுடலாம்னு ராமக்கிடா சொன்னதாலதான் நான் இங்கப் பொறப்பட்டு வந்தேன்."

"இது வரைக்கும் எட்டு ரூவான்னு கொடுத்து வந்திருக்குன்னு தான் நான் சொன்னேன். நெலத்துக்கு வெல ஏர்றது எல்லாருக்கும் தெரிஞ்சதுதானே?".

ராமக்கிடா பின் வாங்கும் தொனியில் முக்கி முனகிச் சொன்னான்.

"சரி. அபபடின்னா அந்த மாதிரியே இருக்கட்டும். நான் வெல பேசல. நானூறு ஏக்கருக்கு மூவாயிரத்தி எரநூறு ரூவா. முன்னூறு ரூவா குத்தக. ஆக, மூவாயிரத்து ஐநூறு ஆவுது. என்னா, பணம் தயாரா இருக்கா?"

"தயாருதான்."

"அப்படின்னா நான் இன்னொன்னும் சொல்றேன், ஓங்களுக்கு நான் ஐநூறு ஏக்கரு தறேன். அதுக்கு நீங்க ஆறு ரூவா வீதம் கணக்குத்தீத்தா போதும்."

பாலுக்கு அந்த விஷயம் ஒன்றும் புரியவில்லை. பால், தன் மூத்தின் மேலிருந்த கண்ணாடியை எடுத்து, சட்டையின் நுனியால் துடைத்துக்கொண்டே முதலாளியின் முகத்தை விழித்துப் பார்த்தான்.

"மிஸ்டர், நான் சொன்னது ஒங்களுக்குப் புரியலியா? ஒங்க மூவாயிரத்தைந்நூறு ரூவாவுக்கே ஐநூறு ஏக்கரு நெலத்த ஒங்களுக்குக் கொடுக்க நான் நெனைச்சிருக்கேன். ஏக்கருக்கு ஆறு ரூவா வீதம் மூவாயிரம் ரூவா. ஐநூறு ரூவா குத்தக. ரெண்டும் சேத்து மூவாயிரத்தைந்நூறு ரூவா ஆவுது. இப்ப புரியுதா?".

முதலாளி, பாக்குத்துண்டைப் போல் உள்ள பற்களை வெளியே காண்பித்து, பாலைப் பார்த்து முதன் முதலாகச் சிரித்தார்.

பால் சிறிதுநேரம் ஆலோசித்தான். பிறகு, நன்றியுடன் அதற்குச் சம்மதித்தான்.

காரியஸ்தன் ராமக்கிடா மேலே பார்த்து ஸ்தம்பித்து நின்று விட்டான்.

முதலாளி கழுத்தை உயர்த்தி, ஏறக்குறைய ஒரு பிரசங்கம்போல் சொல்லத் தொடங்கினார்;

"இங்க பாழாக்கெடக்கிற மலைச்சரிவுகளை வளமா மாத்த, ரொம்பத் தூரத்திலேந்து வந்துருக்கிற ஒங்கள வரவேத்து உற்சாகப்படுத்துறது எங்க கடமை. நீங்கள்ளாம் உழைப்பாளியா இருக்கீங்க. காடுகளை வெட்டி மராமத்துச் செஞ்சி நெறைய வெவசாயம் செய்யுங்க. இந்த ஊரையும் வளமாக்குங்க. ஏதாச்சும் கஷ்டம் வந்தா, ஒடனே இங்க வந்து சொல்லுங்க. ஒங்க சொந்த ஊரு எதுன்னு சொன்னீங்க மிஸ்டர்?".

"மத்திய திருவிதாங்கூர்ல உள்ள கூத்தாட்டுக்குளம்" என்று பணிவான தோரணையில் கூறினான் பால்.

"ஒங்ககூட யாரெல்லாம் இருக்காங்க?"

"இங்க யாருமில்ல, நான் மட்டும்தான் இருக்கேன். எனக்கு சித்தப்பா ஒருத்தரும் நாலு சகோதரர்களும் இருக்காங்க. அவங் கல்லாம் எங்க ஊர்லேயே இருக்காங்க."

"நீங்க எங்க புது சகோதரன். இந்த ஊரையும் ஒங்க சொந்த ஊரா நெனைச்சிக்குங்க."

"ஒங்க ஒபதேசத்துக்கும் அன்புக்கும் ரொம்ப நன்றி எஜமான்."

"சரி, நீங்க போவலாம். ரெடியா வாங்க. பத்திரங்களை எல்லாம் வர்ர திங்கக் கெழம ரெஜிஸ்டர் செஞ்சிக்கலாம். பணத்தோட அன்னிக்கு ரெஜிஸ்டர் ஆபீசுக்கு வந்துடுங்க. பத்திரங்களையும்

மத்த டாக்குமெண்டரிகளையும் ராமக்கிடா எழுதிச் சரிசெஞ்சி தருவான்.

பால், விடைபெற்றுப் படியிறங்கிப் போன உடனே ராமக்கிடா முதலாளியின் அருகில் வந்து வாயைக் கையினால் மறைத்து மூடிக்கொண்டு, "ஆமாம், ஐயாவோட புத்தி பேதலிச்சுப் போச்சுங்களா?. அந்த அண்ணாச்சிக்கு நூறேக்கரு நெலத்த சும்மாவே எறிஞ்சிட்டீங்களே ஏன்? என்னத்த நெனைச்சி அந்த மாதிரி செஞ்சீங்க ஐயா?" என்று கேட்டான்.

முதலாளி குலுங்கி சிரித்துக்கொண்டே, "ராமா, இதுக்கு இப்ப நான் சமாதானம் சொல்ல மாட்டேன். ரெண்டு வருஷம் கழிச்சி சொல்றேன்..... நீ போயி வெத்தலப்பாக்கு எடுத்துகிட்டு வா" என்று கூறினார்.

## 16

மரியத்தின் நிலத்திலிருந்த மரவள்ளிக் கிழங்குக்குக் குச்சிகள் துளிர்விட ஆரம்பித்தன. அத்துடன் மற்ற பயிர்களும் முளைவிட்டன.

மரியத்தின் அடுத்த முயற்சி இப்போது கீழேயுள்ள வயல்களின்பால் திரும்பியது. வயலில் விதைத்த நெல்லும் முளைத்து வந்திருந்தது. வயலைச் சுற்றி வேலி அடைக்கவேண்டும். மாடுகள் உள்ளே நுழைந்து பயிரை நாசமாக்கி விடும். ஒரே நாளில் வேலியைக் கட்டி முடித்துவிட வேண்டும்.

மரியம் எட்டணா கூலி பேசி இரண்டு பணியர்களை அழைத்துச் வந்தாள். பணியர்களின் அலட்சியப் போக்கை அவளால் சகித்துக் கொள்ள முடியவில்லை. அவள் மாத்தனை அழைத்தாள். மாத்தனின் கால் காயம் ஆறி மாதம் ஒன்றாகி விட்டது. என்றாலும், அவன் தன் கால்கட்டை அவிழ்க்கவில்லை. காலுக்கு ஓர் அலங்காரம் என்பது போல் அவன் அந்தக் கட்டை பத்திரமாக நிலைநிறுத்திக் கொண்டு வந்தான்.

மாத்தன் நொண்டிக்கொண்டே மரியத்தின் அருகில் வந்து வாய் பிளந்து நின்றான்.

"அந்தத் திருட்டுப் பணியனுங்க அங்க சும்மா நிக்கறானுங்க. அவனுங்க கிட்டபோயி வேலை செய்யச்சொல்லு. நான் இந்த மதிலக் கட்டறேன்" என்று மரியம் வேலை நெருக்கடியின் இடையே நிமிர்ந்து நின்று கூறினாள்.

மாத்தன் பணியர்களின் அருகில் சென்றான். அங்கே இவனையும், சேர்த்து மூன்று மடையர்களானார்கள்.

மரியம், குன்றின் சரிவுக்கும் வயலுக்குமிடையே உருளைக் கற்களால் ஒரு மதில் கட்டிக் கொண்டிருந்தாள். கற்களின் ஒட்டையில் நிரப்புவதற்காக வயலிலிருந்து நன்கு பசுமையான சேற்றைத் தோண்டி ஓலைக்கூடையில் நிறைத்துத் தூக்கி வந்தாள் மேரிக்குட்டி.

அந்த இடத்தில் தென்கிழக்கு மூலையில் ஓர் நடைபாதை இருந்தது. அந்தப் பாதையில் அசாதாரணமான கூப்பாடு களையும், கலாட்டாக்களையும் கேட்டு மரியம் திரும்பிப் பார்த்தாள்.

புதிய கூட்டம் அந்த வழியாக வந்து கொண்டிருந்தது.

ஆமாம், அவர்கள் மீண்டும் மீண்டும் வந்துகொண்டே இருந் தார்கள். பெட்டியையும், பாய்க்கட்டையும், முறத்தையும், துடைப் பத்தையும், தலையில் தூக்கிக்கொண்டு நடந்துவந்த தளர்ந்த மனிதக் கோலங்கள், சேறுபுரண்ட ஆடைகளும், மண் தூசு படிந்து செம்பட்டையான தலை முடியும், பொடி மண் படிந்த கால்களும், குழி விழுந்த கண்களும், குழைந்து போன அவயவங்களுமாக நெளிந்து வரும் பரிதாபமாக உருவங்கள்.

அந்த விகார வேஷக்காரர்களை அவள் அனுதாபத்துடன் நோக்கினாள்.

அவர்கள் ஆயிரக்கணக்கில் மேலும் மேலும் வந்து கொண்டே இருக்கட்டும். எல்லையில்லாமல் கிடக்கும் இந்தக் காட்டு நிலங்கள் அவர்களை வரவேற்கக் காத்துக் கொண்டிருக்கட்டும். யுக யுகாந்திரங்களாக இயற்கையின் ஒரே ஆளுகையின் கீழே முடங்கிக் கிடக்கும் இந்தக காட்டுப் பூமிகளை மனிதர்கள் பங்கு போட்டுக் கொள்ளட்டும். உறங்கிக் கொணடிருக்கும் நிலங்களே அவர்கள் உணவு தானியக் கிடங்குகளாகட்டும்.

மரியத்தின் சிந்தனைகளும் ஏறக்குறைய அதே போல்தான் இருந்தன.

"வர்க்கியோட கூட்டத்தாராதான் இருக்கணும். நாப்பது பேரு இந்த வாரம் வருவாங்கன்னு வர்க்கி சாரு சொல்லியிருந்தாரே, அவங்களாத்தான் இவுங்க இருக்கணும்?"

தனியாக தனக்குத்தானே சொல்லிக்கொண்டு, மரியம் ஒரு பெரிய உருட்டுக்கல்லைத் தூக்கி மதிலில் சாய்த்து வைத்து, சேற்றை வாரிப் பூசி அங்கே நிலை நிறுத்தினாள்.

## 17

ஜானியின் பங்களா.

செறுக்காட்டில் வர்க்கி படுக்கையில் எழுந்து உட்கார்ந்தான். மழையில்லாத காலை நேரம். பொன்னிறம் போன்ற இளம் வெயில் குன்றுகளைத் தழுவிக் கொண்டிருந்தது.

வர்க்கிக்கு அசாதாரணமாக ஓர் உற்சாகம் தோன்றியது. அவன் கையை நீட்டி மேஜை மேலிருந்த தூரதரிசினிக் குழலை எடுத்துக் கண்களில் வைத்து, ஜன்னலின் வழியாகத் தூரத்தில் பார்த்தான்.

அங்கங்கே காட்டை வெட்டித் தெளிவாக்கி, விவசாயம் நடந்து வரும் குன்றுகள், பல நிறத் துண்டுத் துணிகளால் சேர்த்துத் தைத்த சட்டைகளை அணிந்து நிற்பது போன்று தோன்றின. எவ்வளவு அழகான வடிவங்களாக அந்தக் குன்றுகள் உள்ளன. கிறிஸ்துமஸ் கேக் போல், ரொட்டியைப் போல், நெய்யப்பம் போல், பூசனிப் பூ அப்பம் போல்- இப்படிப் பல வடிவங்களிலும் அந்தக் குன்றுகள் சிதறிக் கிடக்கின்றன. வர்க்கி அந்தக் குழலை மற்றோர் திசைக்குத் திருப்பி நிலை நிறுத்தினான்.

அதோ, அந்தக் குன்றின் சரிவில் பணியாளர்களின் குடிசைக் கூடாரங்கள் சிதறிக் கிடக்கின்றன... வெள்ளை ஆடையால் மார்பகத்தையும், தலையையும், மூடிய பெண்கள் கூட்டமாக மலைக்கு வேலைக்குப் போகின்றார்கள்..... ஒரு யானையும், அதன் பின்னால் யானைப் பாகனும் ஆற்றுக்குள் இறங்குகின் றார்கள்.....அடுத்துள்ள சிறிய குன்றில் வெள்ளை நிறத்தில் எதுவோ ஒன்று நகர்ந்து கொண்டிருந்தது. அந்தக் கண்ணாடி வழியாக அது ஒரு பூனையின் அளவில் தெரிந்தது. மீண்டும் உற்றுப் பார்த்தபோது, ஒரு பெண்தான் என்று புரிந்தது. தனிமையில் வேலை செய்யும் பெண்.

"ஓ, அவ மரியமாத்தான் இருக்கணும். அது மாத்தன் குன்றுதான்" என்று வர்க்கி தனக்குத்தானே சொல்லிக்கொண்டான்.

அவன் சினிமா பார்ப்பது போல் இயற்கைக் காட்சிகளை ஒவ்வொன்றாக மாறி மாறிப் பார்த்தான். இலையின் பசுமையும், மண்ணின் சிகப்பும், பாறைகளின் கருமையும், காய்ந்த புற்களின் வெண்மையும் சேர்ந்த பலவண்ண இயற்கைப் படுக்கை; அமைதியின் விளையாடல்! என்னென்ன செல்வங்கள் அங்கே மறைந்து கிடக்கின்றன!

வராண்டாவில் ஒரு காலடியோசை கேட்டு வர்க்கி குழலைக் கையில் எடுத்துப் பிடித்துக்கொண்டு திரும்பிப் பார்த்தான்.

ஒதேனக் குறுப்பு மீண்டும் வந்திருந்தான். நான்காவது முறையாக அவன் அப்போது வருகிறான். புல்லங்கோட்டு நம்பியாரின் நிலங்களைப் போய்ப் பார்க்க வர்க்கிக்கு இதுவரையில் நேரம் கிடைக்கவில்லை.

"என்ன சார், புறப்படலாமா?" என்று ஒதேனக்குறுப்பு சிரித்துக் கொண்டே கேட்டான்.

"ஆங்..... சரி; இன்னிக்கு வரலாம்னுதான் தீர்மானிச்சிருக்கேன். உள்ளே வாங்க."

ஒதேனக் குறுப்பு அறையினுள் வந்து ஒரு சிறிய கான்வாஸ் நாற்காலியில் அமர்ந்தான்.

"இன்னும் நான் ஷேவ் பண்ணிக்கல; டீயும் குடிக்கல, ஒரு மணிநேரமாவது ஆவும்" என்று வர்க்கி தூரதரிசினக் குழலைத் தடவிக்கொண்டே சொன்னான்.

"நான் அதுவரைக்கும் இங்கியே காத்திருக்கேன்," என்று குறுப்பு தலையாட்டினான்.

வர்க்கி சோம்பலுடன் படுக்கையிலேயே உட்கார்ந்திருந்தான். ஐந்து நிமிஷம் கழிந்ததும் அவன் மீண்டும் அந்தக் குழலைக் கண்களில் வைத்து அந்த வனப் பாகங்களில் வேறொரு கோணத்தில் ஆழ்ந்த ஆராய்ச்சியைத் தொடங்கினான்.

சிறிது தூரத்தில் விரும்பத் தகாத உருவத்தில் ஒரு குன்று. அதன் உச்சியில் பெரும் கரும்பாறைகள் ஒதுக்கமாக நின்றன. முதுகில் கருப்பு மூட்டை ஒன்றைத் தூக்கிக் கூன் விழுந்து நடக்கும் ஒரு கிழவனைப்போல் அந்தக் குன்றைப் பார்த்தால் தோன்றும். அதன் கீழே வளைந்து விழும் அருவி. அருவிக்கரையும் பாறைக்கூட்டங்களால் மூடிக்கிடக்கின்றது. இடையே மூங்கில் காடுகள். அந்தக் கரும்பாறைகளின் அடிவாரத்திலிருக்கும் அருவிக்கரையில் முக்கால் நிர்வாணமாக ஒரு பெண் குளித்துக் கொண்டிருந்தாள்.

வர்க்கி ஆவலுடன் அங்கே தன் கண்களை நிறுத்தினான்.

ஜலக்கிரீடை செய்யும் வனதேவதை! அவளுடைய ஒவ்வோர் அசைவும் வர்க்கியை மனமாற்றமடையச் செய்தது.

வர்க்கி அந்த வனதேவதையின் தனக்குத்தானே குளிக்கும் முறைகளைப் பார்த்து ரசித்துக் கொண்டிருக்கும் போது, ஒதேனக் குறுப்பு அந்த அறையின் அலங்கார நேர்த்திகளை அவலுடன் பார்த்துக்கொண்டு நேரத்தைக் கழித்தான்.

நல்ல விஸ்தாரமான அறை. தரையில் வண்ணம் சிந்தும் ஆலப்புழை தேங்காய் நார்ப்பாய் விரிக்கப்பட்டிருந்தது. சுவரில் பெரிய ஜன்னல்கள். அதில் இரண்டிற்குக் கண்ணாடிகள் பதிக்கப் பட்டிருந்தன. அறை முழுவதையும் விலை மிகுந்த மரச்சாமான் களால் நிறைத்து அலங்கரிக்கப்பட்டிருந்தது. வட்டமான மேஜை, ரோஸ்வுட் நாற்காலிகள், பிரம்பு நாற்காலிகள், சோபாக்கள், சாய்வு, பெஞ்சுகள், பணப்பெட்டி, டிரெஸ்ஸிங் டேபிள், அலமாரி - இவைகளெல்லாம் கலந்து கிடத்தன. கண்ணாடி ஜன்னல்களின் எதிரே பந்தல் கால்களுடன் கொசுவலைகளைத் தொங்கவிட்டு ஒவ்வொரு மரக்கட்டில் போடப்பட்டிருந்தது. மேஜை மேல் சில ஆங்கில மாத இதழ்களும், புத்தகங்களும், ஷேவிங் சாமான்களும், சிதறிக்கிடந்தன. உலக்கையளவு நீலமுள்ள ஒரு டார்ச்சு லைட்டும் அந்த மேஜை மேல் கிடந்தது. சீட்டுகள் சோபாவின் மேல் சிந்திச் சிதறிக் கிடந்தன. உபயோகமற்ற பாட்டரிகள் அலமாரியின்மேல் அம்பாரமாக வைக்கப்பட்டிருந்தன. அலமாரி வைத்திருந்த மூலையில் ஒரு துப்பாக்கியும் சாய்த்து வைக்கப்பட்டிருந்தது. விலை மிகுந்த கம்பளிச் சட்டைகளும், சால்வைகளும், கம்பிளிகளும், கொடிக்கம்பியில் தொங்கவிடப்பட்டிருந்தன. அடுத்த அறைக்குச் செல்லும் வாசற்படிக்கு அருகே ஒரொ மூலையில், பெரியதொரு கூடையில் அழுக்குத் துணிகள் நிறைக்கப்பட்டிருந்தன. தரை முழுவதும் சிகரெட் துண்டுகளும், எரிந்துபோன தீக்குச்சிகளும் சிதறிக்கிடந்தன. ஆக, அழகில்லாமல் கிடக்கும் ஒரு அறைதான் அது. என்றாலும் அதன் உரிமையாளன் தாராளமாகச் செலவு செய்யும் ஒரு செல்வந்தன் தானென்று அங்கேயுள்ள ஒவ்வோரு ஏற்பாடும் உரக்கச் சொல்லிக்கொண்டிருந்தன.

"குறுப்பு, இங்கக் கொஞ்சம் வாங்க" என்று வர்க்கி தூரதரிசினி குழலைக் கண்களில் எடுக்காமல் குறுப்பைக் கூப்பிட்டான்.

குறுப்பு அருகில் வந்ததும் வர்க்கி குழலை அவனிடம் கொடுத்து, "அங்க ஏதாச்சும் தெரியுதான்னு கவனமா பாருங்க" என்று கூறினான்.

குறுப்பு குழலைக் கண்களில் வைத்து சிறிது நேரம் பார்த்தான். "என்னா தெரியுது," என்று வர்க்கி புன்னகைத்துக் கொண்டே கேட்டான்.

"எல்லாம் தெரியுது."

"அந்த ஆத்துப் பக்கம்....."

"யாரோ குளிக்கறாங்க."

"யாருன்னு அடையாளம் புரியுதா?"

"ஆளு நல்லா தெரியுது.

"ஒரு பொண்ணுங்களா!" வர்க்கி குலுங்கிச் சிரித்தான்., "யாருன்னு சொல்ல முடியுமா?"

குறுப்பு குழலைக் கண்களிலிருந்து எடுத்து, வர்க்கியின் முகத்தைச் சந்தேகத்துடன் பார்த்தான்.

"யாருன்னு தெரிஞ்சு என்ன செய்யப்போறீங்க?"

"சும்மா தான் கேட்டேன்."

"கிருஷ்ணன் நம்பியாரு மருமவ மாதவி மாதிரித் தோணுது"

"கிருஷ்ணன் நம்பியாரு யாரு/"

"காரியாட்டு மொதலாளியோட காரியஸ்தன்".

"இங்க மொதலாளிங்களும் காரியஸ்தனுங்களுமில்லாம வேற ஆளுங்களே இல்லன்னு தோணுதில்ல? அது போவட்டும். இந்த நம்பியாரு வூடு எங்க இருக்கு?"

"அந்தப் படித்தொறைக்குத் தெக்கே ஓர் உயரமான எடமிருக்கு ரசிகன் மூலைன்னு அந்த எடத்துக்குப் பேரு. அங்கதான் கிருஷ்ணன் நம்பியாரு வூடு இருக்கு. அங்கருந்து ஒரு மைலு மேற்காலதான் நாமப் போயிப் பாக்கிற மலையும் இருக்கு?"

"சரி". என்று வர்க்கி குழலை எடுத்து மீண்டும் அங்கே பார்த்தான். அப்போது அந்த வனதேவதை மறைந்து விட்டிருந்தாள்.

"நாம இப்பவே பொறப்படுவோம்" என்ற வர்க்கி குழலைக் கீழே வைத்துவிட்டுப் படுக்கையிலிருந்து எழுந்து, "டீ குடிச்சிட்டு, ஷேவிங் செஞ்சிக்கிட்டு குளிக்கணும். அதுக்குத்தான் நேரமிருக்கு" என்றான்.

வர்க்கி இரவு உடுப்புகளை அவிழுத்துப் படுக்கையில் எறிந்து விட்டு, ஒரு பாட்டு பாடிக்கொண்டே குளியலறைக்குச் சென்றான்

குறுப்பு என்ன செய்து என்று தெரியாமல் விழித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். சிறிது நேரம் சென்றதும் அவன் அந்தக் குழலை எடுத்துக் கண்ணில் வைத்து வெறுமனே பல திசைகளிலும் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவன் அந்தப் பெண் உருவத்தை வேறொரு திசையில் கண்டான். அவள் அருகே ஓர் இளைஞனும் இருந்தான். குறுப்பு ஆவலுடன் அந்த இளைஞனைக் கூர்ந்து கவனித்தான். அவனை யாரென்று புரிந்துகொள்ள முடியவில்லை. வெள்ளைச் சட்டையும், அரைக்கால் சட்டையும் அணிந்த இளைஞன் அவன். அந்தப்

பிரதேசத்தில் யாரும் அரைக்கால் சட்டை அணிவதில்லை. யாராவது திருவிதாங்கூர் அண்ணாச்சியாக இருக்கலாம் என்று குறுப்பு தீர்மானித்தான். ஆனால் மாதவி அதுபோல் கர்தல் சல்லாபம் செய்கின்றவளா? குறுப்பு சந்தேகப்பட்டான்.

ஒன்றரை மணி நேரம் கழிந்தது.

வர்க்கி டீ குடித்து, முகச்சவரம் செய்து, குளிந்து முடித்து புதியதொரு வேஷத்தில் காட்சி அளித்தான். மிகவும் தாராளமாக வெள்ளை பைஜாமா. தீக்கான நீலநிறத்தில் நீண்ட சட்டை அந்தச் சட்டையின் முன்பாகம் கோட்டு போல் திறந்திருந்தது. பத்து இருபது பொத்தான்களால் அந்த நீண்ட திறந்த பாகம் இணைக்கப்பட்டிருந்தது. வட்ட வடிவிலுள்ள நீல நிறக் கண்ணாடி கண்களை மறைத்திருந்தது. ஒரு நீண்ட தோல் வாரில் சிறயதோரு காமிரா தொங்க விடப்பட்டிருந்தது. காலில் கருப்பு பூட்ஸ்கள் மின்னிக் கொண்டிருந்தன.

வர்க்கி கரு கரு வென்று கருத்திருந்தான். முதுமை நிறைந்த முரட்டுத் தனமான முகம். அத்தக் கருத்த முகத்திற்கு அகால நரை விழுந்திருந்த தலைமுடி சிறியதொரு அழகைக் கொடுத்திருக்கிறது என்று சொல்லவேண்டும்.

"அந்த ரசிகன் மூலை வழியாத்தானே நாம போவனும்" என்று வர்க்கி சிரித்துக் கொண்டே கேட்டான்.

அவனுடைய முன் பற்களில் இரண்டு பவுனால் செய்யப்பட்டது என்பதை குறுப்பு கண்டுபிடித்தான்.

"அந்த வழியாவும் போவலாம்" என்று குறுப்பு அலுப்புடன் பதில் சொன்னான்.

"அப்பிடின்னா அந்த வழியாவே போவோம்", என்று வர்க்கி கண்களைச் சிமிட்டிவிட்டுச் சிரித்தான்.

சுவரிலுள்ள கொக்கியிலிருந்து தவிட்டு நிறத்திலுள்ள தடித்த குல்லாயை எடுத்துத் தலையில் வைத்துக்கொண்டு, அலமாரியின் மேல் இருந்த மலேயாம்ப் பிரம்பைக் கையில் எடுத்து அதை அங்குமிங்கும் வீசி விசிலடித்துக்கொண்டே வர்க்கி வெளியில் இறங்கினான்.

"டேய் தொம்மா!" என்று வர்க்கி முற்றத்தில் நின்று வேலைக்காரனை அழைத்தான். தொம்மன் அடுக்களைக்கு நேராக உள்ள முற்றத்தில் வெளிப்பட்டான்.

"இன்னிக்கி கோழி சூப்பு வேணும்" என்று கூறிய வர்க்கி விசிலடித்துத் தலையாட்டிக்கொண்டே நடந்தான். பின்னால் குறுப்பு நடந்தான்.

அவர்கள் குன்றிலிருந்து இறங்கி வயல் வழியாக நடந்தார்கள். அதன் பின் பல காட்டுப் பாதைகளையும் மலை இடுக்குகளையும் கடந்து, ரசிகன் மூலையின் அருகே சென்று சேர்ந்தார்கள். வயலின் மேற்குக் கரையின் உயர்ந்த ஒரு மனையின் நடுவில் ஓலை வேய்ந்த ஒரு மாளிகை வீடும் தனிமையாகக் காணப்பட்டன.

குறுப்பு அந்த இடத்தைச் சுட்டிக்காட்டி, "அதான் கிருஷ்ணன் நம்பியாரு வூடு" என்று சொன்னான்.

வர்க்கி அந்த வீட்டையும் அந்தச் சூழலையும் நன்றாகப் பார்த்துக் கொண்டே நடந்தான். அவர்கள் அந்த வீட்டின் முன் பக்கத்து வயலை அடைந்தார்கள். அங்கே பாலம் இல்லாத சிறிய தொரு வாய்க்காலைக் கடக்கவேண்டியதாக இருந்தது.

"இங்கே எறங்கிப் போவணும். ஷூவைக் கழட்டிக்குங்க" என்று குறுப்பு உபதேசித்தான்.

"வேணாம், நான் தாண்டிக்கிறேன்" என்று வர்க்கி உறுதி கூறினான்.

வர்க்கி அந்த வீட்டின்மேல் பார்வையைப் பதித்து, கௌரவ பாவத்தில் முன்னால் நகர்ந்து கொண்டிருந்தான். அங்கே வெளியில் யாரையும் காணவில்லை. வடக்கு பக்க அடுக்களையி லிருந்து புகை மேல் நோக்கி எழும்பிக் கொண்டிருந்தது. தென் பாகத்தில் இலந்தை மரத்தின் கீழே ஒரு வெள்ளைப் பசு மேய்ந்து கொண்டிருந்தது. வீட்டின் மதிலுக்கு அருகில் இறந்து கிடந்த ஒரு கன்றுக்குட்டியை ஒரு பெரிய காட்டுக்கழுகு கொத்தி இழுத்துத் தின்று கொண்டிருந்தது.

வர்க்கி தன் தலையிலிருந்த தொப்பியை எடுத்து மார்போடு அணைத்து, குறி வைத்து ஒரு தாவல் தாவினான்.

ஆனால் அவன் அடுத்த நிமிடமே அந்த வாய்க்காலில் கிடந்தான்.

குறி தவறியதோ கால் வழுக்கியதோ தெரியவில்லை. அரைக்கால் ஆழத்தில் மாவைக் குழைந்து வைத்ததுபோல் உள்ள சேற்றில் வர்க்கி தலை குப்புறவிழுந்துவிட்டான் என்று தான் சொல்ல வேண்டும். அதிலிருந்து திமிரிக்கொண்டு எழுவதற்கு முயற்சித்தபோது கால்கள் வாய்க்காலின் கரையிலுள்ள சதுப்பு நிலக்குழியில் தாழத் தொடங்கின.

குறுப்பு பின்னாலிருந்து ஓடி வந்து வர்க்கியை அந்த மூழ்குதலிலிருந்து விடுவித்து, கரைக்கு இழுத்து விட்டான்.

அப்போது அவனுடைய கோலம் காணவேண்டிய ஒரு காட்சியாக இருந்தது. அவனுடைய நீல நிற ஜிப்பாவும், பேண்டும், காமிராவும் எல்லாம் சேற்றில் குழைந்து ஒட்டிப்பிடித்துக் கொண்டிருந்தது. பவுடர் பூசிய முகத்திலும் வாயிலும், மூக்கிலும், கண்களிலும், காதுகளிலுமெல்லாம் கருமைநிறச் சேறுவிளையாடி இருந்தது. நீலக்கண்ணாடியும், தொப்பியும், மலாயாப் பிரம்பும் அவனை விட்டுப் பிரிந்து சேற்றில் ஒளிந்து கொண்டிருந்தன.

அவன் தன் வாயிலிருந்த சேற்றைத் துப்பிவிட்டு, கைகளைத் துடைத்து, புறங்கையால் கண்களையும், புருவங்களையும், உதடுகளையும் அழுந்தத் துடைத்து முகத்தைச் சுளித்துக் கீழே பார்த்துக்கொண்டு நின்றான்.

வாய்க்காலின் கரையிலுள்ள கற்றாழைப் புதரின் மறைவிலிருந்து அடக்கப்பட்ட சிரிப்பொலி வெடித்து வந்தது.

வர்க்கி தலையைச் சாய்த்துப் பார்த்தான்.

"ஒரு பொம்பளையோட சிரிப்பா?"

குறுப்பு சிரிப்பை அடக்க முயற்சித்தவாறு, "சார், இனிமே என்ன செய்யறது?" என்று கேட்டான்.

வர்க்கி தன் உடல் முழுவதையும் ஒருமுறை பார்த்துக் கொண்டான். கோபமும், வெறுப்பும், நிராசையும், உதவியற்ற தன்மையும் எல்லாம் சேர்ந்து உண்டாகிய, சங்கடத்துடன் கூடிய அசட்டுச் சிரிப்புடன் குறுப்பின் முகத்தைப் பார்த்தான்.

"கிருஷ்ணன் நம்பியாரு வூட்டுக்குப் போயி சட்டையெல்லாம் கழட்டிக் குளிச்சுட்டுப் போவலாம்" என்று குறுப்பு அபிப்ராயப் பட்டான்.

"வேணாம், வேணாம்" என்று தலையாட்டி, "தூப் தூப்" என்று துப்பிக்கொண்டே சொன்னான். அந்தச் சேற்றுக்கு அமெரிக்கன் மாவின் சுவை உள்ளது என்று சொல்ல வேண்டியதில்லை அல்லவா?

"நாம திரும்பிடலாம்" என்று வர்க்கி மீண்டும் துப்பியவாறு சொன்னான்.

"இந்த வேஷத்திலா? வயல்ல இருக்கிற வேலைக்கரப் பொண்ணுங்க கூப்பாடு போட்டுக் கிண்டல் பண்ணுவாங்களே" என்று குறுப்பு தகவல் கொடுத்தான்.

"அப்படின்னா, எங்கியாவது மறைஞ்சிக்கலாம்" என்று கூறிய வர்க்கி, தன் காதுக்குள் கைவிரலை விட்டு, சேற்றைத் தோண்டி எடுத்தான்.

"மறைஞ்சிருக்க வேணாம்; அதோ அந்த வாழைத்தோட்டத்துல பேசாம நின்னுக்கிட்டிருந்தாலே போதும்."

"அந்தக் கத்தாழைப் புதருக்கப்பாலிருந்து, மிருதுவான குரலில் ஓர் அபிப்ராயமும் அதைத் தொடர்ந்து கேலிச்சிரிப்பும் வந்தது.

குறுப்பு அந்த கத்தாழைப் புதருக்கு அருகே ஒருமுறை எட்டிப் பார்த்தான்.

"யாரது? ஓகோ, மாதவியா? நீ இங்க என்னா செய்யற?" என்று சிரித்துக்கொண்டே கேட்டான் குறுப்பு.

"நான் சன்னுக்குட்டிய கட்டப்போறேன். யாரு இந்த கோமாளி?".

"திருவிதாங்கூரு, பெரிய மொதலாளி."

அந்த சம்பாஷணையை வர்க்கியும் கேட்டான். மாதவி! அவன் இதயம் ஒருமுறை பூரித்தது. அவளை அருகில் வைத்து, கண்குளிர ஒருமுறை பார்க்க இதயம் துடித்ததென்றாலும், தற்போதைய நிலையில் அது முடியாதல்லவா? ஓர் உபயோகமுமில்லாமல், சேறு நிறைந்த வாய்க்காலைப் படைத்த இறைவனை வர்க்கி சபித்தான்.....

"அட, யார் இது? வர்க்கி சாரா? ஐயய்யோ! இதென்ன கோலம்?"

அரைக் கால் சட்டையும் வெள்ளைமேல் சட்டையும் அணிந்த இளைஞன் அங்கே பிரத்யட்சமாகி வர்க்கியிடம் கேட்டான்.

"யாரது, அந்தோனியா? நான் காலு தடுமாறி சேத்துல விழுந்துட்டேன்பா. சரியான சேறுப்பா!" என்று வர்க்கி காறித்துப்பினான்.

குறுப்பு அந்த இளைஞனை ஏதோவொரு சந்தேகத்துடன் கூர்ந்து பார்த்தான்.

"நீங்க வாங்க சார், நம்ம வூட்டுக்குப் போவலாம்" என்று அந்தோணி அழைத்தான், "சட்டை மாத்திக்கிட்டு அருவியில முழுவிக் குளிச்சிட்டு போவலாம்."

"இதோ வர்றேன்," என்று சம்மதித்த வர்க்கி, "சரி, அந்தோணி என் தொப்பியும், கூலிங் கிளாசும், மலேயா பெரம்பும் இந்தச் சேத்தில் எங்கியோ கெடக்குது. நீ கொஞ்சம் தேடி எடுத்துக் கொடேன்" என்று கூறினான்.

அந்தோணி சேற்றில் தேடத் தொடங்கினான். தொப்பியும் பிரம்பும் மட்டும் கிடைத்தன. கூலிங்கிளாஸ் போனது போனது தான்.

"நீங்க போவலாம் குறுப்பு" என்று குறுப்பிடம் திரும்பிக் கூறிய வர்க்கி, "நான் இவன் கூடப் போறேன். அடுத்த வாரம் காட்டைப் பார்க்கப் போவோம்" என்றான்.

"சரி" என்று குறுப்பு கத்தாழைப் புதருக்கு அருகிலிருந்து உரக்கக் கூறினான்.

வர்க்கியும், அந்தோனியும் வாய்க்காலில் கரை வழியாகக் கிழக்கே நடந்தார்கள்.

## 18

மரியத்தின் மதில் கட்டும் வேலை முடிந்து விட்டது. மரவள்ளிக்கிழங்குச் செடிகளும் நன்கு துளிர்ந்துத் தழைத்து வந்தன.

அருமையான காட்சி, சிவந்த காம்புடன் கூடிய *சுண்டர்படர்ப்பனும்' பச்சைக் காம்புடன் கூடிய' *வெள்ளை ரொட்டியும், ஊதா வண்ணக்காரனான '*காரியாலவனும்' கொழுத்துத் தழைத்துத் தழைத்து பட்டுபோன்ற இலைகளை காற்றில் அலைய விட்டுக்கொண்டு, மலைச்சரிவுகள் முழுவதையும் மூடிக்கிடக்கின்றன. தினந்தோறும் அந்தக் காட்சிகளைக் காண மரியம் அங்கே சென்று நிற்பாள்.

ஒரு நாள் காலையில் வழக்கம்போல அவள் அங்கே ஏறி நின்று பார்த்தபோது, அங்கேயுள்ள காட்சியைக் கண்டு இடிவிழுந்ததைப் போல் திகைத்து நின்று விட்டாள். காட்சிகளெல்லாம் மாறியிருந்தன. அவளால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. கண்களில் பார்வை மங்கியபோது, அவள் தன் உச்சந்தலையில் இரு கைகளையும் வைத்துக்கொண்டு ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விட்டாள். "ஐய்யோ! கர்த்தரே! - சாத்தான் பழி வாங்கிட்டானே" என்று.

சாத்தான் இம்முறை காட்டுப் பன்றியின் வேடத்தில் வந்திருந்தான். அந்தத் துஷ்ட மிருகங்கள் மரவள்ளிக்கிழங்கின் வேர்கள் முழுவதையும் தோண்டிக் கிளறி மடித்து, கூத்தாடி விட்டுப் போயிருந்தன. தலைமாடு கால் மாடாக விழுந்து கிடந்த

---

*சுண்டர்படர்ப்பன், *வெள்ளைரொட்டி, *கரியாலன்- மரவள்ளிக் கிழங்கு இனங்கள்.

இளஞ்செடிகளைக் கண்ட மரியம் வாய்விட்டே அழுது விட்டாள். சிறிது நேரம் அதேபோல் தலையில் கையை வைத்துக்கொண்டு அழுதாள். பிறகு, அந்தக் கோரக் காட்சியைக் காணச் சகிக்காமல் திரும்பி நடந்தாள்.

மணி ஒன்பதாகியும், மாத்தன் தனது கும்பகர்ணத் தூக்கத்திலிருந்து எழுந்திருக்கவில்லை. மாத்தன் பன்றியைப்போல் கிடந்ததைப் பார்த்த மரியத்துக்கு வெறி அதிகமாகியது. அவள் பற்களைக் கடித்து, முஷ்டையை மடக்கி, யாதொரு மூன்னெச்சரிக்கையுமின்றி மாத்தனின் மண்டையை இடிக்கத் தொடங்கினாள். பன்றியின் மேல் ஏற்பட்ட கோபத்தை மாத்தனின் மீது காட்டினாள்.

மாத்தன் எழுந்து உட்கார்ந்தான். எதுவும் நடக்காததுபோல் மரியத்தின் முகத்தை முறைத்துப் பார்த்தான். மரியம் முஷ்டியை மடக்கி மீண்டும் மாத்தன் தலையில் இடிக்க ஆரம்பித்தாள்.

மாத்தன் தன் இரு கைகளையும் தலையில் வைத்து மறைத்து, மரியத்தின் கனத்த இடிகளைத் தடுத்துக்கொண்டிருந்தான். அவன் தன் சுத்தமில்லாத பற்களை வெளியே காட்டி இடையிடையே இளித்துக் கொண்டிருந்தான். எப்படிப்பட்ட மாற்றமானாலும் எல்லாவற்றுக்குமே அவன் ஒரே மாதிரிதான் இளித்துக்கொண்டிருப்பான். மரியத்தின் திட்டுக்களையெல்லாம் வெறும் பொழுது போக்காகவே அவன் தன் கணக்கில் வைத்துக் கொள்வதுபோல் தோன்றும். அவனுடைய அந்தப் பாவனை மரியத்தை மேலும் மேலும் கோபம் கொள்ளச் செய்தது. எத்தனை தரம் இடித்தாலும், அடித்தாலும் மாத்தன் அவைகளைப் பொருட்படுத்தவில்லை. ஒருமுறைகூடச் சப்தம் எழுப்பவில்லை. ஏதாவதொரு சிறிய எதிர்ப்பையாவது எதிர்பார்த்து அவள் மீண்டும் மீண்டும் இடித்தும், கைகளால் பிராண்டியும், நெட்டித் தள்ளியும் பார்த்தாள். துரைக்கு ஒரு குலுக்கலும் ஏற்படவில்லை. கையைத் தலையில் வைத்துக்கொண்டு வெறுமனே சிலையாக உட்கார்ந்து கொண்டிருந்தான்.

கணவனிடம் சிறிதுநேரம் சண்டை போட்டு முடித்ததும், மரியத்திற்குச் சலிப்புத் தோன்றியது. அவள் வராண்டாவில் மல்லாந்து விழுந்து, தன் மார்பில் தானே அடித்துக் கொண்டு ஒப்பாரி வைத்தாள். மாத்தானைச் சிறிது நேரம் அது போல் அடித்துவிட்டால் அதற்கும் பிராயசித்தமாக தனக்குத் தானே அடித்துக்கொண்டு ஒப்பாரி வைப்பது மரியத்தின் பழக்கம்.

அப்போது, பிள்ளைகள் தாயின் அருகே சென்று, என்ன செய்வது என்று தெரியாமல் மிரண்டு தேம்பிக்கொண்டு நிற்பார்கள். மனைவியும் குழந்தைகளும் அழுவதைப் பார்க்கும்போது மாத்தன் நிம்மதியில்லாமல் கைகளை ஊன்றி எழுந்து எங்கேயாவது கொஞ்சம் தூரம் போய் உட்கார்ந்து, கால் நகங்களைக் கிள்ளிக் கொண்டோ, காதுக்குள்ளே கோழி இறகை விட்டுத் துருவிக் கொண்டோ அல்லது வேறெதாவதோ செய்து கொண்டிருப்பான்.

சிறிது நேரம் சென்றதும் ஆர்ப்பாட்டங்கள் ஓய்ந்தன.

மரியம் எழுந்து சென்று கஞ்சிக்காய்ச்சி மரவள்ளிக்கிழங்கை வேகவைத்து தொட்டுக்கொள்ளத் தயார் செய்தாள்.

"ஒப்பனக்கூப்புடுடி" என்று மரியம் மேரிக்குட்டியிடம் கூறினாள். மேரிக்குட்டி முற்றத்திற்கு ஓடினாள்.

மாத்தன் முற்றத்தில் உட்கார்ந்து, இணைசேர்ந்து ஒன்றோடொன்று ஒட்டிக் கொண்டு நகரும் இரண்டு பிராணிகளைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தாள்.

"கஞ்சி குடிக்க வாப்பா" என்று மேரிக்குட்டி அழைத்தாள்.

மாத்தன் அவள் கூறியதைக் கேட்காத மட்டில் இருந்தான். அவன் அந்த சிவந்த இணைகளை நோக்கி கீழ் உதட்டைக் கோணலாக்கி, வெளியே தள்ளி நீட்டிக் கொண்டு ஏதோ காரியமாக சிந்தித்துக்கொண்டிருந்தான்.

திடீரென அவன் அந்தப் பிராணிகளைப் பிடித்து நிறுத்தி, அவைகளை இன்பச் சேர்க்கையிலிருந்து தன் பலத்தை உபயோகித்து வேறுபடுத் முயன்றான். அவைகள் பிரிவதாக தெரியவில்லை. அவன் ஒரு கல்லை எடுத்து அவைகளின் நடுவே ஒரு குத்துக் குத்தினான்.

அந்த ஜீவன்கள் இணைபிரியா இன்ப உறவுடன் நசுங்கிச் செத்தன. சிவத்த தோல் கிழிந்து, அவைகளின் இரத்தத்திலிருந்து ஒரு வெண்மையான பொருள் வெளியே பிதுங்கி விழுந்தது. மாத்தன் அதைப் பார்த்துச் சிரித்தான்.

"கஞ்சிக் குடிக்க வாப்பா" என்று மேரிக்குட்டி அவன் தோளைப் பிடித்து இழுத்தாள்.

மாத்தன் எழுந்து அடுக்களைக்குச் சென்றான்.

தாயும், தந்தையும் பிள்ளைகளும் கஞ்சிக் குடிக்க வட்டமாக உட்கார்ந்தார்கள்.

கஞ்சி குடித்துக்கொண்டிருக்கும்போது, "நம்ம மரவள்ளிச் செடிகளையெல்லாம் பன்னி பூந்து நாசமாக்கிட்டுது" என்று மரியம் கூறினாள்.

மாத்தன் அதைக் கேட்டதாகக் கூடக் காட்டிக்கொள்ளவில்லை. அவன் அப்போதும் அந்தப் பிராணிகள் நசுங்கி செத்த காட்சியைி நினைத்து ரசித்துக் கொண்டிருந்தான்.

"தே தண்டமே, கேக்குறியா..... நம்ம மரவள்ளிச் செடிங்களயெல்லாம் பன்னித் தோண்டி தாறுமாறாக்கிட்டுது" என்று கஞ்சிக் கையை மாத்தனுடைய மூக்கிற்கு நேராகச் சுட்டக் காட்டி மரியம் உரக்க மீண்டும் கூறினாள்.

"பன்னிக்கு வெடி வைக்கணும்" என்று சேனாதிபதி 'ஃபயர்' ஆர்டர் கொடுப்பதுபோல் மாத்தன் கட்டளையிட்டான்.

"ஆங்....செய்யலாமா?நான் போத்தச்சங்கிட்ட துப்பாக்கிய வாங்கிக்கிட்டு வறேன். ராத்திரிக்கு நீ மலைக்குப் போயி காவக் காத்துப் பன்னியச்சுடறியா?" என்று மரியம் ஆவேசத்துடன் கேள்வி கேட்டாள்.

மாத்தன் மறுபேச்சு பேசவில்லை. அவள் அதுபோல் சொல்வாள் என்று அவன் எதிர்பார்க்கவில்லை.

"பன்னியச் சுடறியா?" மரியம் தன் கையை மாத்தனுடைய மூக்கிற்கு நேராக நீட்டி மீண்டும் கேட்டாள்.

மாத்தன் மேலுதட்டைக் கீழ்ப்பக்கம் நீட்டி ஆலோசித்தான். மிகவும் கௌரவத்துடன் ஏதாவது யோசிக்கும்போது மட்டுமே, அவனுடைய மேலுதடு தபால் பெட்டியின் துவாரத்தைப் போல் வெளியே தள்ளி நிற்கும்.

"கறித்துண்டுல வெடிகள மறைச்சு வெச்சு பன்னியக் கொல்லலாம்" என்று மாத்தன் மற்றொரு உபாயத்தைச் சொன்னான்.

மரியம் அதற்குச் சம்மதித்தாள்.

அன்று மாலையே அவள் போத்தச்சன் வீட்டுக்குச் சென்றாள். கொஞ்சம் பொட்டாஷ்ஷும், ரெட் ஆர்சனிக்கும் வாங்கி வந்து வெடிகள் கட்டி இறைச்சித் துண்டுகளில் மறைத்து மரவள்ளிச் செடிகளுக்கு இடையே வைத்தாள்.

தன் நிலத்தில் இறந்துகிடக்கும் பன்றிகளைப் பார்க்க மறுநாள் காலையில் அவள் ஓடினாள். ஒரு குள்ளநரி மட்டும் மண்டை பிளந்து செத்துக்கிடந்தது. பன்றியின் ஒரு ரோமம்கூடக் கிடைக்கவில்லை. அன்றைக்கும் அந்தத் திருட்டுக் கழுதைகள் அங்கே வந்து சென்றதைத் தெளிவாக்குவதுபோல் மீதமிருந்த மரவள்ளிச் செடிகள் ஒடிந்து சிதறிக் கிடந்தன.

## 19

புதியவர்கள் வந்து குடியமர்ந்து மாதங்கள் பல கழிந்தன. அந்தப் பிரதேசத்தில் உள்ளவர்களும், குடியேறியவர்களும் பொதுவாக ஒருவருக்கொருவர் விட்டுக்கொடுத்து இணங்கி ஒன்று சேரவில்லை. ஊர் விட்டு ஊர் வந்தவர்களான 'திருவிதாங்கூர் அண்ணாச்சிகளை' பொதுவாக அவ்வூர் மக்கள் விரும்பவில்லை. அதனால் அவர்கள் சந்தேகமும், பொறாமையும் கலந்த முணுமுணுப்புக்களுடன் தங்களின் எதிர்ப்புக்களைப் பிரகடனப்படுத்தத் தொடங்கினார்கள்.

குடியேறியவர்களின் நடவடிக்கைகளும் அனுசரித்துப் போகும் எண்ணத்தில் இருக்கவில்லை. அவர்கள் தங்கள் மனதில், 'இங்கே இருப்பவர்கள் சுத்த மடையர்கள், விலைமிகுந்த காட்டு நிலங்களை அருகில் வைத்திருந்தும், அதைக் கவனிக்காமல் மேலே பார்த்து நடக்கும் முட்டாள்கள். எப்படிக் காட்டுநிலங்களைப் பணக்கூம்பாரங்களாகா மாற்றலாமென்று நாங்கள் இவர்களுக்கு கற்றுத் தருவோம். எங்கள் பணத்திற்கு முன்னால் இவர்களை மாடுகளைப்போல் வேலை செய்விப்போம். இந்தக் காட்டு சாம்ராஜ்யத்தை நாங்கள் இங்கே ஸ்தாபிப்போம்' என்றெல்லாம் எண்ணினார்கள்.

குடியேறியவர்களின் சுபாவமும் வாழ்க்கை முறைகளும் அவ்வூர் மக்களிடம் வெறுப்பை உண்டாக்கின.

உபதொழில்களின் மட்டும் ஈடுபட்டு, யாருக்கும் எந்த உபத்திரமும் கொடுக்காமல் வாழ்க்கையை நடத்தும் பொறுமைசாலிகளான ஏழை கிறிஸ்துவக் குடும்பங்களுடன், அவர்களுக்கு உதவுபவர்கள் என்று கூறிக்கொண்டு சில் கருங்காலிகளும் புகுந்துவிட்டிருந்தார்கள். திருவிதாங்கூரில் பெரிய பெரிய குற்றங்ககளைச் செய்துவிட்டு மலபாரில் தஞ்சம் புகுந்த சில கேடிகளும், ஏமாற்றவும் திருடவும் மலபாரில் காட்டுக் கிராமங்களில் புது முறைகளை ஏற்படுத்திய சில போக்கிரிகளும், வேலையொன்றும் செய்யாமல் வாயால் மட்டுமே வாழ்க்கையை ஓட்டும் சில ஏஜண்டுகளும் அந்தக் கூட்டத்தில் இருந்தார்கள். நியாய அநியாயங்களைப் பார்க்காமல் எந்தக் குறுக்கு வழிகளிலாவது அதிக நிலங்களைக் கைப்பற்றியும் அவ்வூர் வேலையாட்களை மோசடியாக வஞ்சித்தும், அநியாயமாகப் பயமுறுத்தியும், ரௌடித்தனமாக

அடித்தும் வேலை வாங்கப் புறப்பட்ட சில ராட்சஸப் புள்ளிகளும் இருந்தார்கள்.

'இந்தப் பசங்களால திருவிதாங்கூருக்காரங்க நெறத்தப் புரிஞ்சிக்க முடியல. நாங்க 'வட்டம்' கொடுத்து இந்த நெலங்கள வாங்கி, மொதல் போட்டு, உடம்புக் கஷ்டப்பட்டு உண்டாக்கிய வெளச்சலு இது. இங்க பூந்தா காலைச் சொழட்டி மடக்கி ஒடிச்சிடுவோம்னு சொல்லிடு.'

ஊர்க்காரர்கள அவர்களின் விளைச்சல்களைத் திரும்பிப் பார்க்கக்கூடப் போகவில்லை. விபரீதமான முறையில் அடுத்தவர் களின் விளைச்சலில் தங்கள் செல்வாக்கை நடத்த அவர்கள் துணிந்ததுமில்லை.

திருட்டுக்கள் அதிகமாயின. குஞ்சப்ப நம்பியாரின் மனைகளிலிருந்து நான்கு வாழைக்குலைகள் திருடு போயிருந்தன. அம்புக்குறுப்பின் தோட்டத்திலுள்ள பலா மரத்திலிருந்து இரண்டு பெரிய பலாப்பழங்களை யாரோ அறுத்துக்கொண்டு போய் இருந்தார்கள். காவுதீயன் ஒணக்கனின் பசுங்கன்றைக் காணவில்லை. கூனன் கனாரனின் வராண்டாவில் வைத்திருந்த தண்ணீர்ச் சொம்பு போனவழி தெரியவில்லை. ஆசாரி கேளப்பனின் தச்சு ஆயுதப்பெட்டி திடீரென்று மாயமாய் மறைந்து விட்டது. கொடியில் காய வைத்திருந்த துணியையும், சமையல்கட்டு முற்றத்தில் வைத்திருந்த பாத்திரங்களையும் இரவாணத்தில் சொருகியிருந்த விவசாயக் கருவிகளையும், பட்டியில் கட்டியிருந்த பசுவையும் பொழுது விடிந்து பார்த்த போது அங்கே காணவில்லை.

ஏடாகூடமான பேச்சுக்களும் அடிதடியும் அதிகமாயின. இரண்டு கொலைகள் அந்தச் சுருங்கிய எல்லைக்குள் நடந்தன. பரம்பரை பரம்பரையாக அமைதியும் குளுமையும் பரவியிருந்த கிராமங்களில், ஆபத்துக்கு அறிகுறியான சிகப்புத் தொப்பிகள் நடமாடத் தொடங்கின. அங்கே நடக்கும் காரியங்களில் போக்கும் சமாதானத்தில் முடிவதாக இல்லை.

குடியேறிய கூறிஸ்தவர்களின் பின்னால், இயேசு மிஷனரியினரின் பிரதிநிதிகளாக பைபிளையும் சுமந்து கொண்டு, சில பாதிரிகளும் ஃபாதர்களும் புறப்பட்டு வந்தனர். பாவிகளுடன் மதமும் காடும்மலைகள் எறிப்போக வேண்டியதாகிவிட்டதல்லவா? அந்த தேவதூதர்கள் நரியும் காட்டுயானையும் நிறைந்திருந்த குறுங்காடுகளை வெட்டிச் சுத்தமாக்கி மாதா கோயிலும் பள்ளிக்

கூடமும் கட்டினார்கள். காட்டு தெய்வங்களின் கல்லையும் இடத்தையும் கொத்திக் கிளறி, அங்கே சுத்த மரியாளின் சலவைக்கல் பிரதிமையைப் பிரதிஷ்டை செய்தார்கள். காட்டுக் கழுகுகள் இறக்கையை விரித்துப் பறந்து திரிந்த வானாந்திர வெளியில், மிக உயரத்தில் பிரமிப்பூட்டும் உருவத்தில் ஒரு சிலுவையையும் நட்டார்கள்.

அந்தி நேரத்தில் மின்மினிப்பூச்சிகளுக்குப் பதில், அங்கே மெழுகுவர்த்திகள் பிரகாசித்தன. மணியோசை முழங்கியது. கூட்டுப் பிரார்த்தனையும், பாவமன்னிப்பும், வேண்டுதலும், திருவிழாவும் முறையாக நடந்தன.மாதா கோயிலைத் தொட்டுக் கொண்டு ஒரு கிறிஸ்துவச் சுடுகாடும் ஏற்பட்டு வந்தது.

## 20

பால் பாலங்கோட்டு முதலாளியின் வருகையைச் சேர்ந்த ஐந்நூறு ஏக்கர் நிலங்கள் முழுவதையும் எழுதி வாங்கி, தன் வசப்படுத்தினான். தன் எல்லையில் வேலிகட்டி உறுதி செய்து கொள்வதற்குக் கொஞ்சம் பணம் செலவாயிற்று. அவன் தன் இடத்திற்கு 'பட்லாம் எஸ்டேட்' என்ற பெயரை வைத்தான். எஸ்டேட் முழுக்க விவசாயம் செய்ய வேண்டுமென்பதுதான் அவன் ஆசை.

பீர் மேட்டில் ஏதோ ஓர் எஸ்டேட் மேனேஜர் பதவியில் இருந்ததாகக் கூறிக்கொண்டு வந்த பாப்பச்சன் என்பவன் பாலின் காரியஸ்தனாகி விட்டான்.

எஸ்டேட்டில் வேலைக்காரர்கள் கிடைக்காமல் பால் பெரிய சங்கடத்தில் மூழ்கினான். சுற்று வட்டாரங்களிலுள்ள கிராமத் தார்களில் முக்கால்வாசிப் பேர்களும், தங்களிடமிருந்த சொற்ப நிலங்களில் சொந்த விவசாயத்தில் கவனம் செலுத்தினார்கள். மத்தியானம் வரையில் அவர்கள் தங்கள் பழைய முதலாளிகளின் நிலங்களில் வேலை செய்யவேண்டும். தலைமுறை தலைமுறையாக நடந்துவருகின்ற வழக்கம் இது. அவர்களைத் தங்கள் நிலங்களுக்கு வேலைக்குத் திரும்பிக் கொண்டு போக வழி தெரியாமல் புதிய நிலங்களின் சொந்தக்காரர்கள் பதுங்கினார்கள். திருவிதாங்கூரி லிருந்து வந்த ஏழைகளாலும் பாலுக்கு உதவி செய்ய முடிய வில்லை. தங்களுக்குக் கிடைத்த புது நிலங்களை விவசாயத்திற்கு உபயோகமாக்க, அந்த ஏழைகள் இரவு பகலாகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

ஒரு நாள் விடியற்காலையில் பாலும் காரியஸ்தன் பாப்பச்சனும் ஜானினுடைய பங்களா படிக்கட்டில் வந்து நின்றார்கள்.

மலைச்சரிவுகளில் மூடுபனி இன்னும் மறையவில்லை. வெட்டுக் கத்தியும், மண்வெட்டியும் எடுத்துக்கொண்டு, கிராம வேலை யாட்கள் முதலாளியின் மலைகளுக்குச் சென்று கொண்டிருந் தார்கள்.

முட்டி மறையாத தலை துவட்டும் துண்டை இடுப்பில் சுற்றி மறைத்து, கிழிசல்கள் மட்டுமே மீதியிருந்த ஒரு நீண்ட காக்கிச் சட்டையை அணிந்த கிழவன் ஒருவன், பெரிய மண்வெட்டியை, தோளில் தூக்கிக்கொண்டு அந்த வழியாக வந்தான்.

"என்னா பெரியவரே, ஒங்க எஜமான் மலைக்குப் போறீங்க போலிருக்கு?" என்று பால், தானே அறிமுகம் செய்து கொள்வது போல் புன்னகை புரிந்துகொண்டே கிழவனை வரவேற்றான்.

முதலாளியின் தரிசனத்தைக் கண்டு, சிறிது அபிமானத்துடனும் வணக்கத்துடனும் கிழவன் சிரித்தவாறு தயங்கி நின்றான்.

பால் தன் ஜிப்பாவின் சைடு பாக்கெட்டிலிருந்து தங்க முலாம் பூசிய சிகரெட்டுப் பெட்டியை உருவி எடுத்துக் திறந்து, ஒரு சிகரெட்டை இழுத்து வாயில் வைத்து, ஒன்றைப் பாப்பச்ச னிடமும், கொடுத்து, தீவைத்துக் கொண்டே கிழவனிடம் "பெரியவரு பேரு என்னா?" என்று கேட்டான்.

"சாத்து" என்று கிழவன் சிரித்துக்கொண்டே பதில் சொன்னான்.

"ஒங்க எஜமான் மலைக்கு வேலை செய்யப்போனா எவ்வளவு கூலி கிடைக்கும்?" என்று பால் கேட்டான்.

"ஆறணா கெடைக்கும்" என்று சாத்து தலையாட்டிக்கொண்டு சொன்னான்.

"ஆறனாவா?" பால் புகைக்கிற சிகரெட்டை உயர்த்திப் பிடித்து வாயைத்திறந்து ஆச்சரியப்படுவது போல் நடித்து, பாப்பச்சன் முகத்தைப் பார்த்தான்.

"ஆறணாதான் மொதலாளி" என்று சாத்து தலை சாய்த்து உறுதிப்படுத்திச் சொன்னான். பால் தன் உதடுகளை சுளித்து கிழவனின் முகத்தில் பரிதாபமான பார்வையைப் பதித்து, "என்னா பெரியவரே இப்படி சொல்றீங்க? மலையில் கல்லுலேயும், முள்ளு லேயும் சூடுபறக்கும் வெய்யிலிலேயும் தடியைத் தண்ணீராக்கி வேலை செய்தும் எஜமான் தூக்கி எறியற கூலி வெறும் ஆறணாவா? நான் நம்பமாட்டேன்." என்று கூறினான்.

பால் மூக்கில் விரலை வைத்து. என்னவோ துர்நாற்றத்தைச் சுவாசித்தது போல் நடித்து. நான்கு பக்கமும் ஒருமுறை பார்த்து விட்டு. "டேய், பாப்பச்சா. இதக் கேட்டியாடா – இந்த பெரியவரு சொல்றத?" என்று பாப்பச்சன் எதிரே திரும்பி நின்று. "இவுங் களுக்கு கெடைக்கிற கூலி ஆறணாதானாம். கொலைபாதகமில்லை யாடா இது?" என்று கேட்டான்.

"கொலை பாதகம் தான்" என்று பாப்பச்சன் தலையைத் தாழ்த்தி ஆமோதித்தான்.

"ஒங்களுக்கு மனைவிமக்க இல்லீங்களா பெரியவரே?" என்று பாப்பச்சன் விசாரித்தான்.

"ரெண்டு பிள்ளைங்களும் ஒரு கெழவியும் இருக்காங்க. அவ போன வருஷமே போயிட்டா."

"போயிட்டாங்களா? எங்கே?" என்று கேட்டான் பாப்பச்சன்.

"செத்துட்டாங்கன்னு சொல்றாருடா" என்று பால் பாப்பச்ச னுக்குப் புரியவைத்தான்.

"இப்படிக் கெடைக்கிற இந்த ஆறணா, ஒன் குடும்பச் செலவுக்குப் போதுமா?" என்று பாப்பச்சன் புகையும் சிகரெட்டுள்ள தன் விரலைச் சாத்துவைப் பார்த்து நீட்டிக் கொண்டு கேட்டான்.

"கஷ்டம்தான். கொஞ்சம் சேப்பங்கிழங்கு வெச்சிருக்கு."

"அப்படின்னா, நீங்க சொந்த விவசாயம் மட்டும் செஞ்சாப் போதாதா பெரியவரே? இத்த ஆறணாவுக்காக காட்டுக்குப் போயி ஏன் கஷ்டப்படறீங்க? தெரியாமத்தான் கேக்கறேன்."

"நாங்க, பரம்பரைப் பரம்பரையாக எஜமானங்க வெலையாளுங்க. நாங்க வேலைக்குப் போலலைன்னா எஜமான்...."

"எஜமான் என்ன செஞ்சிடுவாரு?"

"அப்புறம் ஒரு ஒதவியும் செய்யமாட்டாரு."

"ஓகோ!" என்று பரிகாசத்துடன் குலுங்கிச் சிரித்த பாப்பச்சன், "இந்த ஆறணாவைத் தூக்கி எரியறதே பெரிய ஒதவிதானோ?" என்று கேட்டான்.

"எங்க ஊர்ல கூலிக்காரனுக்கு எவ்வளவு கூலின்னு ஒங்களுக்குத் தெரியுமா?" என்று பால் கேட்டான். "தெனம் மூணு ரூவா – அதாவது பிரிடிஷ் மூணு ரூவா என்று அவனே பதிலும் கூறினான்.

"?"

"மூணு ரூவாயும். மத்தியானத்துக்கு வயிறு நிறையப் பழைய அரிசிக் கஞ்சியும் வள்ளிக்கிழங்கு தொட்டுக்கயும் உண்டு" என்று

பாப்பச்சன், பால் சொன்னதற்கும் மேலே கொஞ்சம் பொடி சேர்த்துச் சொன்னான்.

"மம்முட்டிய எடுத்துக்கிட்டு நெலத்துல கால வைச்சாலே போதும். மூணு ரூவாயும் மத்தியானச் சாப்பாடும் நிச்சயமாகி விடும்" என்று பாப்பச்சன் மேலும் தன் தலையில் கையை வைத்து சத்தியம் செய்வது போல் கூறினான்.

"எங்க ஊருல கூலிக்கரன்னும் மொதலாளின்னும் வித்தயாசமே இல்ல" என்று கூறிய பால், "மம்முட்டிய எடுத்துக்கிட்டு வேலை செய்யப்போனா அவனும் மனுசனில்லியா? எங்க ஊருல வேலைய முடிஞ்சுட்டா கூலிக்காரனும் மொதலாளியும் ஒண்ணா குடிச் சிட்டுச் சீட்டாடுவாங்க. இந்த மலவாரு ரொம்ப மோசமான ஊரு. எஜமான் படுக்கையில் படுத்துப் பொறள்றான். ஏழைங்க மலைய மைதானமாக்கறாங்க. எஜமான் ஆறணாவைத் தூக்கி எறியறான். நல்ல கதையா இருக்கு இது!" என்று தூபம் போட்டான்.

"இதப் பாருங்க பெரியவரே!" என்று ஆரம்பித்த பாப்பச்சன் பாலின் வாயிலிருந்து வந்த பிரசங்கத்தைக் கேட்ட பின், தன் சிகரெட் துண்டைத் தூக்கி எறிந்துவிட்டு, அந்தக் கிழவனைப் பார்த்துக் கூறினான்.

"அதோ அந்த மலைச்சரிவுகள்ல பசுமையாத் தெரியற பயிரெல்லாம் ஒங்களப் போல ஏழைங்களோட உஷ்ணப் பெருமூச் சாலும், வெயர்வையாலும் வளமாக்கியது தானே? அதுல எஜமா னோட கண்ணுங்களத் தவிர காலடியாவது பதிஞ்சிருக்குமா? ஆனா, அந்த வெளைச்சலோட பலனை அனுபவிக்கும்போது மட்டும் நீங்க வெளியே போயிடணும். அவைகளை விக்கும்போது எத்தனையாயிரம் ரூவா எஜமானுக்கு கெடைக்குது? அதில், ஒரு பைசாவாவது ஒங்களுக்குக் கொடுக்கறாங்களா? ஒங்களுக்குக் கறி வறுத்துச் சாப்பிடணும்னும், நல்ல சட்டை போட்டுக்கிட்டு நடக்கணும்னும் ஆசையில்லையா? கண்டிப்பா இருக்கும். நீங்களும் மனுசங்கதானே? அந்த ஆசைகளயெல்லாம் மனசுல ஒதுக்கிக்கிட்டு, மாடுங்களப் போல வேலை செஞ்சு சாவறீங்க. ஆறணாவுக்கு அரிசியும் மொளா சாமானும் வாங்கினப்பொறவு கருவாடப் பாத்துட்டா கண்ணை மூடிக்கவேண்டியதுதான். இதயெல்லாம் நீங்க ஏத்துக்கறதனால் தான் ஒங்களுக்கு எதுவும் கெடைக்கல. மத்தவங்களக் குத்தம் சொல்லி என்ன புண்ணியம்?"

பாப்பச்சன் தன் இறுதிப் பிரசங்கத்தில், இறுதி பாகத்தை ஒரு கம்யூனிஸ்டின் பிரசங்கத்திலிருந்து கடன் வாங்கி இருந்தான்.

சாத்துவுக்குச் சிலதெல்லாம் புரியவில்லை. என்றாலும், அவர்கள் கூறியதில் ஏதோ விஷயம் இருக்கிறது என்றும் தோன்றாமலில்லை. அவனுடைய முகத்தில் அசட்டுத்தனமும் சோம்பலும் ஏமாற்றமும் சேர்ந்து ஒரு வகை அழுகையாக உருமாறிற்று.

"டேய் பாப்பச்சா, நீ பங்களாவுக்குப் போயி என் பொட்டியிலேந்து ஒரு நல்ல முண்டாப் பாத்து எடுத்துட்டு வா. நான் இந்த பெரியவரப் பாத்ததும் என்னோட செத்துப்போன அப்பாவ நெனைச்சிக்கிட்டேன். பெரியவரு நல்ல முண்டையாவது சுத்திக்கிட்டு போவட்டும். இவுரு இங்குள்ள மொதலாளியோட அடிமைன்னாலும் நம்ம பக்கத்து வூட்டுக்காரருதானே? சீக்கிரமா எடுத்துக்கிட்டு வா," என்று பாப்பச்சனுடைய தோளில் தட்டினான் பால்.

பாப்பச்சன் ஒரு புதுத்துண்டை எடுத்துக்கொண்டு திரும்பி வந்தான்.

பால் அந்தத் துணியைக் கிழவனுக்கு நேராக நீட்டி, "பெரியவரே, இத வாங்கிக்குங்க, ஒங்க நெலமையப் பார்த்ததும் எனக்கு மனசு பொறுக்கல" என்று கூறினான்.

சாத்து மிகவும் அடக்கத்துடனும் நன்றியுடனும் அந்தத் துண்டை வாங்கிக் கக்கத்தில் வைத்து, பாலை வணங்கிவிட்டு மலைமேல் கஷ்டப்பட்டு நடந்தான்.

## 21

தற மூட்டில் சாக்கோ மலபாரில் குடியேறி வசிக்கத் தொடங்கி ஆறு மாதம்தான் ஆயிற்று. அவன் பாலாயிலிருந்து வந்தவன். இரண்டு தம்பிகளும், வயதான தாத்தாவும், அவனும் சேர்ந்து பொட்டக்காயம் குஞ்ஞித்தொம்மன் என்ற ஏஜெண்டின் வார்த்தைகளை நம்பி, தன் ஊரிலிருந்த சொத்துக்களை எல்லாம் விற்றுவிட்டு, மூவாயிரம் ரூபாயுடன் மலபாருக்கு வந்து சேர்ந்தார்கள். நிலங்களை வாங்க குஞ்ஞித்தொம்மன் எல்லா உதவிகளையும் செய்தான். புது மரவள்ளிக் குச்சிகளையும் கொஞ்சம் வேலைக்காரர்களையும் திருவிதாங்கூருக்குப் போய்க் கொண்டுவருவதாகக் கூறி, சாக்கோவிடம் மீதமிருந்த முன்னூறு ரூபாயையும் வாங்கிக் கொண்டான். குஞ்ஞித் தொம்மன் போய் இரண்டு மாதங்கள் ஆகி விட்டன. போனவன் போனவன் தான். இதுவரை அவனை இங்கே யாராலும் பார்க்கக்கூட முடியவில்லை.

சாதாரணப் படிப்புள்ள இளைஞன் சாக்கோ. யாருடனும் அதிகம் பேசாமல், சொந்த வேலையைப் பார்த்துக்கொண்டு ஒதுங்கி வாழக்கூடிய ஜீவன் அவன்.

மலபாரை அடைந்து ஒரு மாதம் கழிவதற்குள்ளேயே, தன்னுடைய முட்டாள்தனம் அவனுக்குப் புரிய ஆரம்பித்துவிட்டது.

ஒரு பழைய 'பௌரத்வனி' இதழை மடியில் விரித்து வைத்துக்கொண்டு அவன் படிக்கத் தொடங்கினான். பத்திரிக்கையிலிருந்த பிராந்தியச் செய்திகள் ஒன்றும் அவனைக் கவரவில்லை. அவன் நினைவுகளெல்லாம் அவனுடைய வாழ்வைப் பற்றித்தான் சுற்றிச் சுற்றி வந்தன.

தன் கைவசம் இருந்த பணமெல்லாம் தீர்ந்துவிட்டது. தன்னிடமிருந்ததையெல்லாம் மலை நிலங்களில் விதைத்து விட்டிருந்தான். அது முளைத்துப் பலன் கிடைக்க வேண்டுமென்றால் இன்னும் அதை வளப்படுத்தவேண்டும். அதற்கு யாரும் உதவி செய்வதாகவுமில்லை. எதிர்காலம் இருளடைந்து காணப்பட்டது.

ஆனால், தன் சொந்தக் குடும்ப வாழ்வின் கதையைவிட அவனுடைய சகோதரக் குடும்பங்களின் நிலைமைதான் அவன் மனதை மிகவும் வேதனைப்படுத்தியிருந்தது. முட்டாள்தனமும், சொந்தப் பாதுகாப்புக்கான குறுக்குத் தந்திரங்களும் சேர்ந்த புகைப்படலம் சுற்றிலுமுள்ள கிறிஸ்துவ சமுதாயத்தை வளைத்துப் பிடித்து வேறுபடுத்தி நிறுத்தி இருந்தது. மலபாரின் கிராமவாசிகளுடன் சேர்ந்த புதிய வாழ்க்கையை திடமாக்கவும் இனிமையாக்கவும் முயலாமல், அவ்வூர் மக்களை பயமுறுத்தி வம்புக்கிழுத்தும், வீம்பு பேசியும், சட்டாம்பிள்ளைத்தனம் செய்யவும் சிலர் எண்ணினார்கள். அந்தக் கெட்ட பெயர் ஒரு சமுதாயம் முழுவதையும் பாதிக்கவும் செய்தது.

தன்னைப் பார்க்கும் போதெல்லாம், அவ்வூர் மக்கள் அவநம்பிக்கையுடன் பார்த்துவிட்டு ஒதுங்கிச் செல்வதாக அவனுக்குப் பல சமயங்களிலும் அனுபவப்பட்டதுண்டு. அவர்களைப் பார்த்து இவன் சிரித்தால் கூட, அவர்கள் தங்கள் முகத்தைத் திருப்பிக் கொண்டார்கள். இதற்கு என்ன காரணம். சில போக்கிரிகள்தான் தங்களுக்கு இடையே உள்ள இந்த இறுக்கத்திற்கும், பயத்துக்கும், வெறுப்புக்கும் விதை விதைத்தவர்கள் என்று அவன் ஊகித்திருந்தான்.

நட்புக்கான இதயம் இல்லாமலில்லை. வெறுப்பும், பகையும் முன்னர் தோன்றியதில்லை. அறிவற்ற தனத்தால் உண்டான கோழைத்தனம்தான் அவர்களை இந்தப் பயத்திற்குத் தள்ளி விட்டது. பக்கத்து வீட்டார்களிடமிருந்து ஏதாவது உபத்திர வங்கள் ஏற்படுமோ என்றதொரு காரணமற்ற பயம்தான். பரஸ்பர நம்பிக்கையானாலும் நட்பானாலும் எளிதில் பெறக் கூடிய அனுமதியை அவர்களுக்கு உருவாக்கிக்கொள்ளத் தெரியவில்லை. பயத்தினால் தங்களின் பலவீனத்துக்குத் திரை பிடிக்கத்தான் அவர்களுக்குத் தெரிந்திருந்தது.

முன்பக்கச் சந்திலிருந்து வந்த ஒரு கலகக்குரல் கேட்டு சாக்கோ தலையைத் தூக்கிப் பார்த்தான். மதுவைக் குடித்து விட்டு இலக்கில்லாமல் பத்துப் பதினைந்து கிறிஸ்துவர்கள் தங்கள் கைகளில் பெரிய பெரிய கட்டாரிகளை உயர்த்திப் பிடித்துக் காட்டிக் கொண்டு கோஷம் போட்டு ஊர்வலம் சென்று கொண்டிருந்தனர்.

## 22

தொண்டியன் மலையின் தெற்குச் சரிவில் விவசாய நிலங்களின் ஒரு மூலையில், தன்னுடைய மூங்கில் குடிசையில் அந்தோணி அமைதியுடன் தனிமையில் தங்கி வசித்து வந்தான். குன்றின் சரி வில் ஒரு பகுதி முழுவதும் சணலும், மற்றப் பகுதிகளில் முந்திரியும் வளர்க்க வேண்டுமென்பது அவன் உத்தேசம். சம வெளியில் நெல் பயிர் தொடங்கியாகிவிட்டது. குன்றுகள் கொத்திச் சீராக்கப் பட்டு வந்தன. குடிசையைச் சுற்றி வாழை, சேம்பு, சேனைக்கிழங்கு, பச்சை மிளகு, பயறு முதலியவைகள் பயிரிடப்பட்டிருந்தன.

கீழேயுள்ள சிறிய நெல் வயலுக்கும், காய்கறிப் பயிருக்கும் காவலாக அந்தோணி இரவு பகலாகக் குடிசையிலேயே இருந்தான். பணியர் காலைமுதல் உச்சிவரை நெல் வயலிலும் மலைச்சரிவிலும் வேலை செய்து கூலியை வாங்கிக்கொண்டு திரும்பிப் போவார்கள். அதன் பிறகு அந்தோணி தனிமையில் பொழுதைப் போக்குவான்.

தனிமையை அவன் விரும்பினான். தானே பலகாரத்தைத் தயார் செய்து கடவுள் சிந்தனையிலும் மதப் புத்தகங்களிலுமாக அவன் நாட்களைக் கழித்தான்.

நேர்மையான வழியில் எப்போதும் நல்லவைகளையே கற்க வேண்டும் என்ற எண்ணத்திலும், தீவிர கிறிஸ்துவ ஆதரிசங் களிலும் முக்கி எடுக்கப்பட்ட ஓர் இளம் வாழ்க்கையாக அவனு டையது இருந்தது. அவனுக்கு விவரம் தெரிவதற்கு முன்பே தாயும்

தகப்பனும் இறந்துவிட்டார்கள். அதன்பிறகு செரியானுடைய பாதுகாப்பில் தான் அவன் வளர்ந்தான். கன்னி மரியாளைத் தாயாகவும் கர்த்தரைத் தந்தையாகவும் நினைந்து ஒரு பாதிரியாரிடம் கல்வி கற்றான். படித்துக்கொண்டிருக்கும் போதே எதிர்காலத்தில் ஒரு பாதிரியாராக வரவேண்டும் என்பது அவன் ஆசை. பரிசுத்த தேவாலயத்தின் பூஞ்சிறகுகள், கர்த்தரின் தினசரி உபாசனையில் வாழ்வை அர்ப்பணிப்பதைவிட, மரியாதையும் மன நிம்மதியும் ஏற்படுத்துவதற்கு வேறு எதுதான் உள்ளது? அவனுடைய அக்காலப் பிரார்த்தனைகளில் இப்படியொரு வரத்தையே அவன் யாசித்து வந்தான்.

ஆனால், அவனால் படிப்பை முடிக்க முடியவில்லை, சித்தப்பா மலபாருக்குப் புறப்படத் தீர்மானித்ததால் அவருடன் அவனும் போக வேண்டியதாயிற்று.

பிறந்து வளர்ந்த கிராமத்தையும், நாட்டையும் விட்டு வெளியேறினான். வாழ்க்கை மாறியது. புதுச் சுமைகளை ஏற்க வேண்டியதாயிற்று. என்றாலும் அவன் தன்னுடைய தெய்வீகமான ஆசையையும் ஆதரிசனத்தையும் அணைத்துக்கொண்டு போகவும் செய்தான்.

கருப்பு அட்டையுடன் கூடிய ஒரு வேதப்புத்தகம் எல்லா நேரங்களிலும் அவனருகில் இருந்து கொண்டே இருக்கும். கயிற்றுக் கட்டிலின் தலைப் பாகத்தில் மூங்கில் தட்டிச் சுவரின் உச்சியில் தொங்கவிடப்பட்டிருந்த சிறு பீடத்தின் மேல், சிலுவையில் அறைந்த இயேசுவின் சித்திரமும், சித்திரத்தின் இரு பக்கங்களிலும் எரிய வைத்திருந்த மெழுகுவர்த்தியும் எப்போது வேண்டுமானாலும் காணக்கூடிய நிலையில் ஸ்தாபிக்கப் பட்டிருக்கும்.

அவன் வேதப் புத்தகங்களை விலை கொடுத்தும், கடனாகவும் வாங்கித் தனிமையில் இதய உணர்வில் உருகிப்படிப்பான்.

'நீ பிறந்த பூமிக்கே திரும்பிப்போகும் வரை, உன் முகத்தில் வியர்வையுடன் நீ அப்பம் சாப்பிடு. ஏனென்றால் நீயும் தூளாகப் போகிறாய். அந்தத் தூளுக்கே நீ திரும்பவும் போவாய்.'

அந்த வரிகளை அவன் ஆயிரம் முறை உருப்போட்டுள்ளான்.

படைப்பைப் பற்றி வேதத்தில் சொல்லப்பட்டுள்ள பாகம்தான் அவனை மிகவும் கவர்ந்தது.

'.....தெய்வம் அவர்களை அநுக்கிரகித்தது. அவர்களுக்குத் தெய்வம் அருளியது. நீங்கள் மீண்டும் பெருகுங்கள். பூமியில்

நிறைந்து அதைக் கீழடக்குங்கள். கடலிலுள்ள மீன்களையும், ஆகாயத்திலுள்ள பட்சிகளையும், நாட்டிலுள்ள மிருகங்களையும், பூமிமேல் ஊருகின்ற சகல ஜீவராசிகளையும் ஆளுங்கள்.'

'மேலும் தெய்வம் அருளியது. பூமியெங்கும் விதைக்கப்படுகின்ற விதையுள்ள எல்லாச் சிறு செடிகளையும், தானாகவே விதை விதைத்துக்கொள்ளும் பழங்களுள்ள எல்லா மரங்களையும் இதோ உங்களுக்கு நான் கொடுத்திருக்கின்றேன். அவை உங்களுக்குத்தான்.

'காட்டிலுள்ள எல்லா உயிர்களுக்கும், ஆகாயத்திலுள்ள எல்லாப் பறைவைகளுக்கும், உயிருள்ளதாக பூமிமேல் ஊருகின்ற எல்லாவற்றுக்கும் உணவிற்காக இருக்கட்டும். எல்லாப் பசும் புற்களும் உணவுக்காக இருக்கட்டும்.'

அந்தோணி அந்தப் பகுதியைப் படித்துச் சிந்தனையில் மூழ்கி, தன் நிலத்தின் மேல் கண்களைச் சுழற்றுவான். குளிர் நிலவில் மூழ்கியுள்ள தன்னுடைய மலை நிலத்தின் ஒவ்வொரு செடியும், ஒவ்வொரு புல்லும், ஒவ்வொரு மரமும் அந்த வேத முறைப்படி இருக்கின்றன. ......தெய்வத்தின் ஆணைப்படி வளர்க்கப்பட்ட தோட்டம்தான் அது.

வாலிபத்தின் ஆரம்பக்கட்டத்தில் விளையாட்டுத்தனமான ஒரு காலக்கட்டம் உண்டு. அப்போது, எங்கிருந்தோ ஒரு காற்று வாழ்வின் ஆத்மாவிற்குள் - வைதீகத்துவத்திற்குள் - புகுந்து ஆட்டிக் கொண்டிருக்கும். உடலுறவிடம் ஒரு வெறுப்பு - பொதுவாகப் பெண்களிடம் ஒரு வெறுப்பு ஏற்படும். மதச்சார் புள்ளவர்களின் உபதேசங்களையும், ஆத்மாவின் சூத்திரங் களையும் பாராயணம் செயவதற்கான ஒரு ஆவல் மிகும். உடலுறவு சம்பந்தப்பட்ட விஷயங்களில் ஓர் அலட்சியம் ஏற்படும். ஒவ்வொரு ஆணும் தன்னுடைய இளமையில் ஒரு காலக் கட்டத்தில் இப்படிப்பட்ட ஒரு நிலையை அறிந்தோ அறியா மலோ சந்தித்திருக்கவேண்டும். ஜென்ம வாசனையும், சூழ் நிலையும் ஏற்படுத்தும் பிரேரணையை அனுசரித்து இந்தச் சுபாவம் வளரலாம்; அல்லது வாழ்வின் உண்மைகளுடைய உறுதியினாலும், எளிதில் கிடைக்காத சில திடீர்ச்சுகங்களின் வசிகரணங்களினாலும், வஞ்சனைகளினாலும், முன் சொன்ன வாசனை படிப்படியாக மங்கி கெட்டுப்போகவும் செய்யலாம். சங்கரரும், ஆஸீஸ் சந்நியாசியும், விவேகாநந்த சுவாமிகளும் முதலில் சொன்ன கூட்டத்தில் சேர்ந்தவர்கள். அந்தோணியும் அவ்வாறுதான். வளர்ந்து வருகிறான். அவனைத் தீய வழிக்குத்

திருப்பிச் செல்லக்கூடிய நண்பர்கள் அவனுக்கு இல்லை. அந்தக் குன்றுப் பிரதேசங்களில் அப்படி ஒதுக்கப்பட்ட பழங்களுமில்லை.

மாலை நேரங்களில் அந்த மூங்கில் குடிசையில் வராண்டாவில் உட்கார்ந்துகொண்டு பார்த்தால், சுற்றிலும் மூடிக்கிடக்கும் காடுகள்தான் தெரியும். நல்ல கதி கிடைக்காத ஆத்மாக்களின் அபாயகரமான அழுகையைப்போல் குள்ள நரிகளின் ஊளைகள் கேட்கும். அப்போது அந்த இடம் ஒரு நரகக் காட்சியைப்போல் தோன்றும். முன்பக்கத்தில் சிறிய பாறைகளுக்கும் சிறிய வயலுக்கும் அப்பால் ஒரு மேட்டில் தனிமையில் நிற்கும் வீட்டிலிருந்து ஒரு விளக்குத் தெரியும். அந்த விளக்குள்ள வீடு கிருஷ்ணன் நம்பியாருடையது. சில விவசாயக்கருவிகளை இரவல் வாங்கவும், பால் வாங்கவும் அந்தோணி சில சமயங்களில் அந்த வீட்டிற்குப் போவதுண்டு. அந்த வீட்டுப் பெரியவர் கிருஷ்ணன் நம்பியாரை அவன் ஒரு முறை கூடக் கண்டதில்லை என்றுதான் சொல்லவேண்டும். காரியாட்டுக்குறுப்பின் காரியஸ்தனான அவர் மாதத்தில் இருவது நாட்களும் வெகு தொலைவிலுள்ள மலைப்பயிர்செய்யும் இடத்திலோ, வேட்டையிலோ இருப்பார். நம்பியாரின் மருமகளான மாதவி என்னும் பெயருள்ள ஒரு இளம் பெண்ணும், ஒரு கிழவியும், வேலைக்காரிகளான இரண்டு மூன்று பணிச்சிகளும்தான் அங்கே உள்ளார்கள். அந்தோணி மாதவியுடன் பேசிக்கொண்டிருப்பதுண்டு. அவனுடைய நாட்டின் வாழ்க்கை முறைகளைப் பற்றியும், அவனுடைய குடும்பங்களைப் பற்றியும், மற்றவைகளைப் பற்றியும் அவள் ஆசையுடன் கேட்பதுண்டு. அவன் எல்லாவற்றையும் விவரமாகச் சொல்வான். அவனுடைய கிராமிய மொழியும், உச்சரிப்பு முறையும் வாய்ச் சாதுர்யமும், கூச்சம் இல்லாமையும்தான் அவனைக் கொஞ்சம் அவளிடம் ஈர்த்ததே தவிர, அவளைப்பற்றி வேறு முறையில் அதிகமாகச் சிந்திக்க அவன் முயற்சித்ததில்லை.

மாதவி, சில வேளைகளில் கூஜாவில் பாலை நிரப்பி அவன் குடிசைக்கு எடுத்துச் சென்று கொடுப்பாள். நல்ல இனிப்புப் பலகாரங்களை – தேனில் குழைத்த தினை மாவு, பலாப்பழப் பாயசம், நெய்யப்பம் முதலியவைகளை – அவள் பணிச்சிகளில் மூலம் கொடுத்தனுப்புவாள்.

'சொர்க்கத்திலுள்ள பிதாவே..' என்று ஆரம்பிக்கும் பிரார்த்த னையைச் சொல்லி, குடிசையின் தெற்குச் சரிவில் கிடக்கும் கயிற்றுக்கட்டிலில் அந்தோணி தூங்குவதற்காகப் படுப்பான்.

அருகில், குண்டு நிரப்பப்பட்ட ஒரு துப்பாக்கியும், திரியைத் தாழ இறக்கிய லாந்தர் ஒன்றும் இருக்கும்.

அவன், தன் போர்வையை இழுத்து மூடிக் கண்களை மூடப்போகும் போதும்கூட, மாதவியின் வீட்டில் விளக்கு எரிந்து கொண்டிருப்பதைக் காணலாம்.

அந்தோணி, விடிவதற்கு ஏழரை நாழிகை இருக்கும்போதே எழுந்து விடுவான். அஸ்தமனச் சந்திரன் குன்றுகளுக்கும் வயல் களுக்கும் வெள்ளி மூலாம் பூசியது. குளிர்ந்த காற்று இதமாக வீசியது. வாழையிலை மீதும், கூரைவேய்ந்த பனையோலைமீதும் பனி விழும் சப்தம் குளிர்ந்த அமைதியில் இதயத்துடிப்பைப் போல் கேட்கின்றது.

அந்தோணி, போர்வையைப் போர்த்தி உட்கார்ந்து கொண்டு, லாந்தரின் திரியைத் தூக்கிவிட்டு, வேதபுத்தகம் படிப்பான். அப்போது, தெளிவில்லாத ஒரு சப்தத்தைக் கேட்கலாம். அது, மாதவி கிணற்றிலிருந்து தண்ணீர் இறைக்கும் போது கிணற்று ராட்டினமும் கயிறும் உராய்ந்து உண்டாக்குகிற சப்தம் தான்.

## 23

அந்தப் பிரதேசத்தில் நிம்மதியற்ற நிலை தொடர்ந்து கொண்டே இருந்தது.

வழிப்பறிகள் இடையிடையே நடந்துகொண்டிருந்தன. கிறிஸ்து வர்கள் மூக்குமுட்ட கள்ளைக் குடித்துவிட்டு, சில அசிங்கமான பாடல்களைப் பாடிக்கொண்டு வழி எங்கும் திரிந்தார்கள். அதனால், பெண்கள் எப்படி வெளியே இறங்கி நடக்கமுடியும்?

புதிய கூட்டத்தினரின் வேஷமும் மொழியும் அவ்வூர் மக்களின் பரிகாசத்துக்கு இடமாயின.

எந்த "அண்ணாச்சிகளையாவது தனிமையில் காணும்போது, சிறுவர்கள் அவர்களிடம் ஓடிச்சென்று கிண்டல் செய்வார்கள். நரைத்த நீண்ட தாடியும் கருப்பு மேல் அங்கியுமாகப் பாதிரிகளும் ..பாதர்களும் போவதைக் காணும்போது, "பாதிராத்தியா, வெடியக்காலையா?" என்று கேட்டு அப் பிள்ளைகள் கூக்குரலிடுவார்கள். ஃபாதர் திரும்பி நின்று குழந்தைகளுக்கு "பிரியமுள்ள குழந்தைகளே! பரிகாசம் செய்வது பாவம். பரிகாசம் செய்யும் குழந்தைகளைக் கடிப்பதற்காகவே நரகத்தில் நான்கு தலைகள் உள்ள நாய் இருக்கிறது" என்று நல்லுபதேசம் செய்வார்.

மேல் காதில் கனமான வட்ட வடிவ வளையமும், இடுப்பில் முண்டின் முனையினால் ஆன ஒரு விசிறியாக நடக்கும் 'அக்காக் களையும், கழுத்தில் ஈயக்காசைக் கட்டித் தொங்கவிட்டுக்கொண்டு நடக்கும் 'அண்ணாச்சி'களையும் கேலியாகப் பார்த்து ஊர்க் காரர்கள் சிரிப்பார்கள்.

தொம்மன் வீட்டிற்கு மரக்கரண்டி விற்கச் சென்ற குஞ்சாண்டி ஆசாரி முகம் சுளித்து, மூக்கை சிந்தியவாறு திரும்பினான்.

"என்னடா, மூக்குல உள்ள அடைப்பு பூட்டுதா?" என்று மாட்டிவண்டிக்காரன் கணாரன் கேட்டான்.

குஞ்சாண்டி ஆசாரி, காறித்துப்பிவிட்டு, "அடேயப்பா! என்னா நாத்தம் சேச்சே! மாட்டுக்கறியக் காய வெச்சுத் தொங்கப் போட்டிருக்கானுங்க. இவனுங்க மாட்டுக் கறியத் திங்கறவனுங்க போலிருக்குப்பா!" என்று கூறினான்.

"டேய், கேளனோட செத்துப்போன புள்ளிப்பசுமாட்டக் குழி பறிச்சுப் பொதைச்சத தோண்டிட்டுப் போயி வெட்டிக்காய வெச்சக் கறிடா அது. ஒரு துண்டத்தை எடுத்து எனக்கும் வேணுமான்னு கேட்டாண்டா?"

"அட, என்ன ஜென்மம்பா?" என்று குஞ்சாண்டி மீண்டும் ஒரு முறை காறித்துப்பினான்.

"இவனுங்க பெருச்சாளியக்கூடப் புடிச்சி திம்பானுங்கப்பா, பறையனுங்களக் காட்டிலும் மோசம்பா"- கணாரன் தலை யாட்டிக்கொண்டே சொன்னான்.

"மனுஷங்களப் புடிச்சி தின்னாம இருந்தாப் போதும்பா."

"நேரம் கெடைச்சா அதையும் தின்னுடுவானுங்க"

கணாரன், வண்டியை முடுக்கிக்கொண்டு ஒரு வழியாகவும் குஞ்சாண்டி ஆசாரி தான் பார்த்த காட்சியை நினைத்து நினைத்து மனக்குமட்டலோடு காறித்துப்பியவாறு, வேறொரு வழியாகவும் பிரிந்து சென்றார்கள்.

குடியேறியவர்கள் பொதுவாகவே தரித்திரக்காரர்கள். கையிலிருந்த பணத்தை எல்லாம் அவர்கள் நிலங்களில் கசங்கி எறிந்து விட்டிருந்தார்கள். அவர்கள் ஆண்களும் பெண்களுமாகத் தடியைத் தண்ணீராக்கி வேலை செய்தார்கள். அதை அனுசரித்துச் சாப்பிடவும் வேண்டும். ஆனால், அவர்களின் உணவில் பழங் கஞ்சியும் மரவள்ளிக்கிழங்கின் துவட்டலும்தான் உள்ளன. தண்ணீரும் மோசம். மீன்கள், இறைச்சிகள் வாங்க முடிவதில்லை. காய்ந்த கருவாடுகள் கூட ஓர் அணாவுக்கு ஒன்றோ இரண்டோ

மட்டும்தான் கிடைக்கின்றன. அரிசி கூடக் கறுப்பு மார்க்கெட்டில் ஒரு சேர் பன்னிரண்டணாவுக்கு விற்கப்படுகிறது. உணவில் வைட்டமின்களின் குறையும், உணவுப் பதார்த்தங்களில் மாற்றம் இல்லைமையும் அவர்களை வலிமையில்லாமல் ஆக்கிற்று. குழந்தை களுக்குக் கிராணிக் கழிச்சலும், சொறி சிரங்கும் உண்டாயின. பெரியவர்களுக்கு வயிற்றில் கட்டியும், மஞ்சள்காமாலையும் அதிகமாயின. அவர்கள் இறந்த மாடுகளையும், 'பூமி மேல் ஊருகின்ற சகல உயிர்களையும்' உண்டு, வயிறை நிரப்பத் தொடங்கினார்கள்.

உடலுறவு மட்டும்தான் அவர்களின் பொழுது போக்காக இருந்தது.

மேடும் பள்ளமுமாகக் கிடக்கும் மலைநிலங்களின் அந்தச் சிரியன் கிறிஸ்துவர்களின் மூங்கில் கழிக் குடிசைகள், மூங்கில் புதைகளைப்போல் பெருகத் தொடங்கின.

விவசாயத்திற்குப் பின் சிலர் டீக்கடைகளையும், மளிகைக்கடை களையும் நடத்தினார்கள். கொச்சு வர்க்கி அங்கே, 'சிறுபுஷ்ப விலாசம் ஹோட்டல்' ஒன்றை ஆரம்பித்தார்கள். வர்க்கியின் கூட்டத்தில் வத்த சாக்கோ மராமத்துக் காண்ட்ராக்கடரானான். பாய், மூங்கில் தட்டி, சட்டி, கூடை, கரண்டி மற்றும் சில அத்தியாவசியமான துணிப் பொருள்களையும் வாங்கி வந்து வைத்து ஒரு கடையைத் தொடங்கினான்.

'பாம்படி தாமஸ்' என்றொரு ஹோமியோபதி டாக்கடரும் அங்கே போர்டு வைத்து விட்டான்.

## 24

பால், சாத்துவுக்கு முண்டு கொடுத்த செய்தியை, சாத்து ஊர் முழுவதும் சொல்லிக்கொண்டு திரிந்தான்.

"அவுங்கள்ளாம் ரொம்ப எரக்கக் கொணமுள்ள மொதலாளிங்க. கொழந்தைங்களைப் போல பேசறாங்க" என்று சாத்து அவர் களைப் பற்றின பிரச்சாரப் பணியைச் செய்தான்.

பதினைந்து நாட்கள் கழிந்ததும், பாப்பச்சன் மெதுவாகச் சாத்துவிடம் "பால் மொதலாளி எஸ்டேட்டுக்கு வேலக்கி வரமுடியுமா? தெனம் ஒரு ரூவா கூலி கெடைக்கும்" என்று கேட்டான்.

சாத்து அன்று முழுவதும் அதனைப்பற்றித் தீவிரமாக ஆலோசித்தான். மறுநாள் அவன் தனக்கு 'சொரம்' என்று கூறி

தன்னுடைய எஜமான் மலைக்கு வேலை செய்யப்போகவில்லை. அதேபோல், இரண்டாம் நாளும் தங்கி விட்டான். நான்காம் நாள் அதிகாலையில் அவன் மண்வெட்டியைத் தன தோளில் வைத்துக் கொண்டு நேராகப் பால் முதலாளியின் மலைக்கு நடந்தான்.

அன்று மதியம் பாப்பச்சன் சாத்துவின் கையில் புது ஒரு ரூபாய் நோட்டை வைத்தான்.

மறுநாள் சாத்துவோட கூட, மேலும் நான்கு பேர்கள் சேர்ந்து வேலைக்கு வந்தார்கள்.

"பால் மொதலாளி மலைக்கு வேல செய்யப்போனா, ஒரு ரூபாயும் மத்தியானக் கஞ்சியும் கெடைக்கும்!" என்ற பேச்சு ஊரெங்கும் பரவிற்று.

'பட்லாம் எஸ்டேட்'டுக்கு வேலையாட்கள் கும்பல் கும்பலாக வரத்தொடக்கினார்கள். அவர்கள் பழைய முதலாளியின் பணக்காரத்தனத்திடம் விடைபெற்று புதிய கூட்டத்தார்களின் பணத்திற்கு அடிமைகளாகிவிட்டார்கள்.

அவ்வூர் முதலாளிகள் குழப்பத்தில் ஆழ்ந்தார்கள். அவர்கள் கூலியைக் கூட்டிப் போட்டிக்குத் தயாராகாமலும் எதுவும் பேசாமலும் தங்கள் நேரத்தை எதிர்நோக்கிக் காத்திருந்தார்கள்.

இரண்டு வாரங்கள் கழிந்ததும் 'பட்லாம் எஸ்டேட்'டில் மத்தியானக் கஞ்சி நிறுத்தப்பட்டது.

"அரிசி கெடைக்கல, நியாய வெலைக்கு அரிசி கெடைக்கத் தொடங்கினதும் கஞ்சி தர்றோம்" என்று பாப்பச்சன் வேலையாட்களுக்குத் தெரிவித்தான். அன்று அவர்களுக்குக் கூலி மட்டும்தான் கிடைத்தது.

ஒரு மாதம் கழிந்தது.

பாப்பச்சன் அன்று எல்லோருக்கும் கூலியைப் பங்கிட்டுக் கொடுத்தான். எல்லோரும் நாணயங்களை எண்ணிப் பார்த் தார்கள். மீண்டும் மீண்டும் எண்ணிப் பார்தார்கள். அவர்கள் பைசாக்களை உள்ளங்கையில் பரப்பிப் பிடித்து பாப்பச்சனின் முகத்தை முறைத்துப் பார்த்து, "என்னாது, ஆறணாதான் இருக்கு" என்று கேட்டார்கள்.

"ஆறணாதான் கொடுத்தேன்" என்று பாப்பச்சன் கித்தாய்ப் பான குரலில் கூறினான்.

"அதென்ன மொதலாளி, ஒரு ரூவாதானே கூலி?"

"இல்லே, இனிமே ஆறணாதான் தர முடியும், மரவள்ளிக்கு வெலை கொறைஞ்சிட்டுது, அதுவுமில்லாம எங்க ஊர்லேந்து

எறநூறு வேலையாளுங்க பொறப்பட்டுட்டாங்க. நாளைக்கோ நாளன்னிக்கோ இங்க வந்துடுவாங்க. நீங்க இனிமே ஒங்களுக்குப் புடிச்சா வேலை செய்யலாம். புடிக்காட்டிப் போனா நின்றுக்கலாம். ஆறணாவுக்கு மேல ஒரு ஜல்லிக்காசு கூட அதிகமாகக் கூலி கொடுக்க எங்களுக்குக் கட்டுபடியாவாது."

இவற்றைக் கூறிவிட்டு பாப்பச்சன் திரும்பி நடந்தான்.

அன்று வேலைக்காரர்கள் முணுமுணுத்துக்கொண்டே பிரிந்து சென்றார்கள்.

இனிமேல் என்ன செய்வது என்று தெரியாமல், அந்த ஏழைகள் குழம்ப ஆரம்பித்தார்கள். அவர்களுடைய பழைய எஜமான்களின் மலைக்குத் திரும்பவும் சென்று, அவர்களிடம் முகத்தைக் காட்டவும் அவர்களுக்கக மனம் வரவில்லை. அந்த இடத்து உதவியும் பாதுகாப்பும் போய்விட்டன.

சிலர், எந்த இடத்திற்கும் வேலைக்குச் செல்லாமல் குடிசையிலேயே முடங்கினார்கள். ஐநூறு பேர்கள் எஜமான் முன் கீழே விழுந்து அழுது பிச்சை கேட்டு, மீண்டும் பழைய வேலையாளாகச் சேர்த்துக் கொண்டார்கள். சிலர் இவையெலலாம் தங்கள் "நேரம்" என்று கூறி சமாதானம் செய்துகொண்டு, பாலின் மலைக்கே ஆறணாக் கூலிக்காரர்களாக வேலையைத் தொடர்ந்தார்கள்.

ஒரு மாதம் கழிந்தும் கூட, திருவிதாங்கூரிலிருந்து புறப்பட்ட இருநூறு வேலையாட்கள் இன்னும் அங்கே வந்து சேர்ந்ததை யாராலும் பார்க்க முடியவில்லை.

பாப்பச்சன் ஒரு பெரிய பிரம்புத் தடியுடன், கூலிக்காரர்களின் இடையே சுற்றி, சுற்றி வந்தான். தடியை நிமிர்த்திப் பிடித்துக் கொண்டு, ஒரு நொடிகூட ஓய்வெடுக்க அவர்களை அவன் அனுமதிப்பது இல்லை.

"டேய், சோம்பேறிப் பசங்களா, சும்மா ஏண்டா நிக்கறீங்க... அங்கக் கொத்துங்கடா... கிளருங்கடா நாய்களா... சரியாச் செய்யலன்னா எலும்ப ஒடச்சிடுவேன்...." என்று பாப்பச்சன் கர்ஜிப்பான்.

அவன் அந்த ஏழைகளின் முதுகிலும், கால்களிலும் பிரம்புத் தடியால் அடிக்கவும் தொடங்கினான்.

அவர்கள் எல்லாவற்றையும் சகித்துக் கொண்டார்கள். யாரிடம் போய் என்ன சொல்ல முடியும்?

திருவிதாங்கூர்காரர்களின் தனி நிறத்தை, பாப்பச்சன் அவர்களுக்கு நன்றாகப் புரிய வைத்தான்.

## 25

மரியம், செல் பிடிக்க ஆரம்பித்த பழைய ஜாதிக்காய் பெட்டியில் உள்ள சாமான்களைத் தட்டிக் குடைந்தாள். அப்போது, அவைகளுக்கிடையே அவளுக்கு ஒரு தபால் கார்டு கிடைத்தது. ஏலியா மாமியின் விலாசம் எழுதப்பட்ட ஒரு புதுக்கார்டு அது.

தன் ஊரில் இருக்கும் ஏலியா மாமிக்கு, இன்னும் இங்கு வந்தபின் ஒரு கார்டு கூட அனுப்பவில்லை என்ற எண்ணம் அப்போதுதான் அவள் நினைவுக்கு வந்தது. பெட்டியிலுள்ள சாமான்களை யெல்லாம் சரி செய்து அடுக்கிவைத்த பின், அவள் தபால் கார்டைக் கையில் எடுத்துக்கொண்டு வராண்டாவிற்கு வந்து மேரிக்குட்டியை அழைத்தாள்.

"இதோ வர்றேம்மா" என்று மேரிக்குட்டி குடிசையின் பின்னாலிலிருந்து குரல் கொடுத்தாள். அவள் அங்கே ஒரு விளையாட்டு வீடு மண்ணால் கட்டிக் கொண்டிருந்தாள்.

"ஏலியா மாமிக்கு ஒரு கடுதாசி எழுதணும்டி" என்று மேரிக்குட்டி அருகில் வந்ததும் மரியம் கூறினாள்.

மேரிக்குட்டி ஒரு தாழம்பாயை விரித்து, அதில் முன்பக்கமாகக் குனிந்து உட்கார்ந்து கொண்டு, முன்னால் ஒரு பலகையின்மேல் கார்டை வைத்து ஒரு சிறிய காப்பியிங் பென்சில் துண்டைக் கையில் பிடித்து எழுதுவதற்குத் தயாரானாள்.

அவள் முதன் முதலாக, கார்டின் தலைப்பில் 'ஏசுமிஸிகா' என்று குறித்தாள்.

மரியம் வாசகங்களைச் சொல்லிக் கொடுத்தாள்:

"ஏலியா மாமிக்கு மரியம் எழுதுவது என்னவென்றால், மலவாருக்குப் போனப் பின்னால் குழந்தைகளும் நானும், குழந்தை களோட அப்பனும் சொகம். நாங்க இங்க ஐநூறு ஏக்கரு நெலம் சொந்தமா வாங்கியிருக்கோம்..."

மேரிக்குட்டி எழுதுவதை நிறுத்திவிட்டு, தலையை உயர்த்தி காப்பியிங் பென்சிலை நாக்கில் தொட்டுவிட்டு, "ஐநூறு ஏக்கரு ஏதும்மா? இருவது ஏக்கருன்னுதானே வர்கீஸ்ண்ணன் சொல்லிச்சு" என்று இடையில் கூறினாள்.

மரியம் மேரிக்குட்டியைக் கூர்ந்து நோக்கினாள்.

"சும்மாருடி மட்டிப்பொண்ணே. மாமி இங்க வந்து நெலத்தை அளந்தாடி பாக்கப்போறா. ஐநூறுன்னே எழுது. ஒரு சாண் நெலம் வாங்கிக்கினுதான் நாம இங்க இருக்கோம்னு மாமிக்குத் தோணனுமா?"

மேரிக்குட்டி 500 என்று பெரிதாக எழுதினாள்.

மரியம் மடியில் கையை வைத்துக்கொண்டு ஆலோசித்துத் தொடர்ந்து சொல்லிக் கொடுத்தாள்.

"இங்கிருக்கறவங்களுக்கு வெவசாயம்னா என்னன்னே தெரியல. நெலங்க கண்டபடிக்குத் தாறுமாறா கெடக்கு. இங்க நல்ல ஜாதி மரவள்ளிக் குச்சி கெடைக்கல. அங்கிருந்து வெள்ளை ரொட்டி அல்லது திருவனந்தபுரத்துக் குச்சிகளை வாங்கி மலவாருக்கு வர்ற ஆளுங்க கிட்ட...."

"இனிமே எழுத எடமில்லம்மா" என்று மேரிக்குட்டி, உதவ முடியாது என்பதுபோல் காப்பியிங் பென்சிலை வாயில் வைத்துக் கொண்டு சிரித்தாள்.

மரியம் மகளை உக்கிரமாகப் பார்த்து, "என்னடி, ரெண்டு வாசகம் எழுதுறத்துக்குள்ளயாடி கார்டு தீந்து போச்சு?" என்று கேட்டவள், அந்தக் கார்டை எடுத்துத் திருப்பித்திருப்பி பார்த்து ஏமாற்றத்துடன், "ஆனைத்தலை மாதிரி எழுதி எல்லாத்தையும் நாசமாக்கிட்டாளே!" என்று அங்கலாய்த்தாள்.

கோபம் தாளாமல் மேரிக்குட்டியின் முதுகில் ஒன்று கொடுத்தாள்.

ஏமாற்றத்துடன் தாடைக்குக் கையை முட்டுக்கொடுத்துக் கொண்டு, மரியம் சிலையாக உட்கார்ந்து விட்டாள்.

ஏலியா மாமிக்கு எழுதித் தெரிவிக்க வேண்டிய எவ்வளவோ விஷயங்கள் இன்னும் அவளிடம் கிடக்கின்றன. ஐநூறு ஏக்கர் நிலத்தின் விஷயம் மட்டுமில்லாமல், தங்கள் அந்தஸ்திலுள்ள வாழ்க்கை முறை, குழந்தைகளின் அப்பன் மாத்தன் முதலாளி யானது, பங்களாவைப்போல் ஒரு புது விட்டைக் கட்டியது, பதினைந்து வேலையாட்கள் அங்கே தினந்தோறும் வேலை செய்து வருவது போன்ற விஷயங்கள் பலவற்றையும் விவரித்து எழுதி, ஏலியா மாமியைப் பொறாமைப்பட வைக்கவேண்டுமென்று மரியம் உத்தேசித்திருந்தாள். ஏலியா மாமியின் குடும்ப விஷயங் களைப்பற்றியும் விசாரிக்க முடியவில்லை. அந்தக் குறிகெட்ட பெண்ணின் கைநீளம் எல்லாவற்றையும் குழப்பி விட்டது. எதுவானாலும் 500 ஏக்கர் நிலமென்ற செய்தியைக் கேட்டாலே, மீதியையெல்லாம் மாமியே ஊகித்துக்கொள்வாள் என்று மரியம் சமாதானப்படுத்திக் கொண்டாள்.

கடிதத்தை தபாலில் சேர்க்க, பட்டணத்திற்குப் போகும் ஆனைச்சொறிமாத்துவின் கையில் மரியம் கொடுத்தனுப்பினாள்.

மாமி, கார்டை வாசிக்கச் சொல்லிக் கேட்கும்போது, 500 ஏக்கர் நிலம் என்று கேட்டதும் ஆச்சரியத்துடன் வாயைப் பிளந்து பொறாமைப் படுவதையும், "வெள்ளை ரொட்டி" "திருவனந்தபுரம்" ரகம் மரவள்ளிக் குச்சிகளைக் கட்டுக்களாகக் கட்டி கொடுத் தனுப்புவதையும், மற்றக் காட்சிகளையும் மரியம் மனத்தால் கண்டு ரசித்துக்கொண்டிருந்தபோது, அந்த அப்பாவி 'திருவிதாங்கூர் அஞ்சல் கார்டு' சென்னை டி.எல்.ஓ. அலுவலகத்தில் செத்துக் கிடந்தது.

## 26

தாழைக்குன்னம் பெரியவர் சாச்சப்பன் நம்பியார் அந்திநேர ஜெபம் செய்து, விபூதி அணிந்துகொள்ள அமரும் போதுதான், மருமகன் குஞ்ஞிக்கிருஷ்ணன் வீட்டிற்கு வந்து சேர்ந்தான்.

பாதி மூடிய விழிகளால், பெரியவர் தன் மருமகனை நோக்கி விட்டு வேகமாக ஜெபத்தை முடித்து எழுந்து, சாய்வுப்படிமேல் வந்து உட்கார்ந்து கொண்டு, "குஞ்ஞிக்கிருஷ்ணா" என்று கௌரவமான குரலில் உரக்கக் கூப்பிட்டார்.

குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியார் வராண்டாவிற்கு வந்து, சாய்வுப் படித்து அருகிலுள்ள தூணில் சாய்ந்து நின்றான்.

"நீ இப்ப எங்கேருந்துடா வரே?" என்று பெரியவர் முகத்தைச் சாய்த்து, மருமகனை அடி முதல் முடி வரை கோபமாக உற்றுப் பார்த்தார்.

"நான் சாக்கோண்ணன் வூட்டுக்குப் போயிருந்தேன்" என்று குஞ்ஞிக்கிருஷ்ணன் அமைதியாகக் கூறினான்.

"ஆகாங்! நான் நெனச்சி மாதிரிதான் இருக்கு.......டேய், ஒனக்கு வெக்கமிருக்காடா? இந்த அண்ணாச்சிங்களோட சேராதேன்னு நான் ஒங்கிட்ட எத்தனை தரம்டா சொல்லியிருக்கேன்? அட குறிகெட்டவனே, என் வார்த்தைக்கு மதிப்பில்லையாடா? அந்த அண்ணாச்சிதான் ஒனக்குக் குருவா?" என்று பெரியவர் அலறினார்.

'நான் அவர என் குருவா நெனைக்கல. ஒரு நல்ல சிநேகித னாத்தான் நெனைக்கறேன்" என்று குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியார் அமைதியான குரலில் பதில் கூறினான்.

"சிநேகிதனா?" என்று தலையாட்டிய பெரியவர், "இருக்கு மிருக்கும், நல்ல சிநேகிதனாத்தான் கண்டுபுடிச்சிருக்கே. இங்கிருக் கறவங்கள ஒழிச்சிட்டு, நாட்டைப் புடிக்க வந்த கூட்டம்டா அது. ஏறக்கொறைய நாட்டைப் புடிச்சுட்டாங்க. இனிமே இந்த

ஊருக்காரங்களையும் முடிச்சாதாண்டா இவுங்க அடங்குவாங் கன்னு தோணுது" என்று கூறினார்.

"அவுங்கள அந்த மாதிரி நெனச்சி சண்டைப் புடிக்கிறது நல்ல தில்லே மாமா, கெட்டவங்களும் நல்லவங்களும் எல்லா சமுதாயத் திலும் இருக்காங்க...."

"இந்தக் கூட்டத்துக்குக் கெடுதல் செஞ்சா நமக்கு ஒண்ணும் பாதகமில்ல. இவுங்க ஒரு அக்கரமக்காரக்கூட்டம். கிட்டப் போவவே ஜாக்கிரதையா இருக்கணும் போலிருக்கு. எல்லாரும் இடுப்புல கட்டாரிக்கத்திய சொருகிக்கிட்டு இருக்கானுங்க."

குஞ்ஞிக்கிருஷ்ணன் அவருக்குத் தெரியாமல் சிரித்துக் கொண்டான்.

"இந்தக் கூட்டத்தாருங்க இடுப்பயெல்லாம் தேடிப்பார்த்த மாதிரி சொல்றீங்களே மாமா, சில சமயம் இடுப்புல நீங்ககூட கத்தியைச் சொருகிக்கிட்டு நடப்பதில்லையா மாமா?"

"என் சொந்தப் பாதுகாப்புக்காகச் செலசமயம் கத்தியக் கையில வெச்சிக்கிறதுண்டு."

"அதுபோலத்தான் அவுங்களும் சொந்த பாதுகாப்புக்காகக் கத்தி வெச்சிக்கிட்டு நடப்பாங்க போலிருக்கு. பழக்கமில்லாத ஊருதானே? எங்கேருந்தல்லாம் ஆபத்து வரும்னு அவுங்களுக்குத் தெரியுமா?"

"அவுங்க எதுக்காக இங்க வந்தாங்கன்னுதான் நான் கேக்கறேன்?"

"அவுங்க கஷ்டம் அவுங்கள இங்க தள்ளியிருக்கும். திப்பு சுல்தான் படை இங்க வந்த காலத்துக் கதைங்களைப் பத்தி நீங்க சொல்லறதில்லியா மாமா? கெழக்குப் பிரதேசம் முழுகம் ஜனங்க நெறஞ்ச கிராமங்களா இருந்துதுன்னும், திப்புவோட ஆக்கிர மிப்பு ஏற்பட்டபோது, எல்லாரும் வீடுவாசல்கள வுட்டெறிஞ் சிட்டு கூட்டங் கூட்டமாகத் தெக்குத் தெசைக்கு ஓடிப்பூட்டாங் கன்னும் மத்ததையும் சொன்னீங்கள்ள? அந்த ஆளுங்கள்ளாம் ரொம்பத் தூரத்தில் தெக்கே எங்கியாவது போயிக குடியேறி யிருந்திருப்பாங்க. அதப் போலதான் இன்னிக்கு இந்தத் தெக் கத்தியக் கிறிஸ்துவ ஜனங்களும் நம்மகூட வந்து சேந்திருங்காங்க. ஆனா, மற்றொன்றையும் நீங்க புரிஞ்சிக்கனும் மாமா? அவுங்க இங்க வெறுங் கையோட தங்கியிருக்க வந்தவங்க இல்ல. அவுங்க தங்களுடைய வாழ்க்கையில் சம்பாதிச்சதயெல்லாம் இங்க கொண்டாந்து போட்டு நெரந்தரமா வசிக்க வந்தவங்க. இந்தக்

கூட்டத்துக் கிட்ட பொதுவா ஒரு வெறுப்பு உங்களப்போல செல ஆளுங்களுக்கு எப்படி உண்டாச்சுன்னுதான் தெரியல."

"இவுங்க இங்க செய்யற செல அக்கரமத்தாலதான் இவுங்கக் கிட்ட வெறுப்புண்டாச்சு.. எதுக்கெடுத்தாலும் கைய நீட்டறதும், திருடறதும் தான் இவுங்க தொழிலா இருக்கு."

"சும்மா ஆதாரமில்லாம சொல்லக்கூடாது. எத்தனை அடிதடிய இவுங்க நடத்தியிருக்காங்க? ஒண்ணாவது சொல்ல முடியுமா மாமா?"

"பல பேரும் சொல்றததான் கேட்டிருக்கினே."

"ஆமாம், அதேபோலதான் பலபேரும் சொல்லிட்டுத் திரியுறாங்க. இப்ப நமக்கு நல்ல நேரமா இருக்கு. எந்தக் குத்தத்த யாறு செஞ்சாலும், அவைகள இந்த அண்ணாச்சிங்க தலையில கட்டிடலாம். அவுங்களத்தான் ஒரு கிரிமினல் வர்க்கமா வச்சிருக்காங்களே! நம்ம தொண்டியன் கொளங்கர சாத்துக்குட்டி நம்பியாரு தோட்டதிலேந்து வழக்கமா தேங்கா திருடு போய்ட்டு இருந்தது. இந்த அண்ணாச்சிங்கதான் திருடிட்டுப் போறாங்கன்னு நம்பியாரு ஊரெல்லாம் சொல்லிட்டு திரிஞ்சாரு. கடைசில திருடன களவும் கையுமா மாத்துங்கற அண்ணாச்சிதான் புடிச்சிக் கொடுத்தான். திருடன் யாருன்னு தெரியுமோ? சாத்துக்குட்டி நம்பியாரு மவன் பத்மநாபன்தான்......"

"ஆங்!..... அப்படியொரு சம்பவம் நடந்ததா? அது நான் கேள்விப்படலையே!"

"அது மட்டுமல்ல. அதேபோல பல சம்பவங்க நடந்திருக்கு. இந்தக் கூட்டம் வர்றத்துக்கு முன்னாடியும் இங்க திருட்டும் அடிதடியும், நடந்திருக்கில்ல? இன்னுங்கூட சொல்லப்போனா, இவுங்ககிட்ட உள்ள திருடனுங்களவிட, நம்மகிட்ட நெறையத் திருடனுங்க இருக்கானுங்க. எனக்குத் தெரியும்...இங்கக் குடியேறி வங்கள்ள நெறையப் பேருங்களும் தரித்தரர்களும், குக்கிராமத்து ஏழைகளும்தான். செல புத்திசாலிங்க இவுங்கள இவுங்க ஊர்லேந்து இழுத்துக்கிட்டு வந்துக்டானுங்க. ஊர்ல இருந்த தங்களுடைய குடும்ப வகையிலும் சொந்தச் சம்பாத்தியத்திலும் கெடச்ச கடைசிக் காசைக்கூட இவுங்க இங்க நம்ம காடுகள்ள போட்டு வச்சிருக்காங்க. கோடிக் கணக்குல பணத்த செலவு செஞ்சி காடுகளைத் திருத்திப் பயிரிட்டு நம்ம நாட்டை அபிவிருத்தி செய்ய ஒதவுற இந்தக் கூட்டத்துக்கிட்ட நாம அனுதாபமும் நன்றியும் காட்டலன்னாலும் வேணாம் -

அவுங்களப் பழிக்காம சும்மா இருந்தாலே போதும். நல்ல பக்கங்கள்ள நரியும், குள்ளநரியும், நடமாடறதவிட நம்பளப் போல உள்ள மனுஷங்க வசிக்கிறது நல்லதுன்னு புரிஞ்சிக்கிற நல்ல புத்தியாவது நமக்கு உண்டாவட்டும்."

பெரியவர் சிறிது நேரம் ஆலோசித்தார்.

"அப்போ, இவுங்கள்ளாம் நல்லவங்கன்னு நீ சொல்றியா?".

"நல்லவங்க மட்டுமே உள்ள ஒரு சமுதாயம், சொர்க்கத்துலதான் இருக்கும். சுத்த போக்கிரிகளும், முழுச் சோம்பேறிகளும், படு கஞ்சர்களும் இவுங்க மத்தியிலும் உண்டு. அவுங்களச் சுட்டிக்காட்டி அந்த சமுதாயம் முழுவதையும் குத்தம் சொல்லக் கூடாதுங்கறது என் வேண்டுகோள். என் சிநேகிதன் சாக்கோ விஷயத்தப்பத்திச் சொல்றேன்....அவன் அவுங்க ஊர்லே ஒரு பள்ளிக்கூட வாத்தியாரா, ஒரு வித சொக வாழ்வில் இருந்தான். அப்படி இருக்கும்போது குஞ்ஞித் தொம்மன்கிறவன் சாக்கோ வுக்கு இந்த மலவாரைப்பத்திச் சொல்லிச் சொல்லி மனசைக் கரைச்சி, சொத்துக்களையெல்லாம் விக்கச் செஞ்சி இங்க கூட்டாந் துட்டான். கொஞ்ச நெலம் அவனுக்கும் கெடைச்சது. பாக்கிப் பணத்தையெல்லாம் ஏஜெண்டு குஞ்ஞித்தொம்மன் எங்கியோ எடுத்துக்கிட்டு போயிட்டான். சாக்கோவோட இப்போதைய நெலமயக் கொஞ்சம் நெனைச்சிப் பாருங்க. பயிரு வைக்கப் பணமில்ல. கடங் கொடுக்க ஆளில்ல, ஊருக்கத் திரும்பிப்போகவும் மனமில்லை. ஆகாரத்துக்கும் வழியில்ல. மண்ணத்திங்க முடியுமா? பாருங்களேன்....அவுங்க பகையாளியும் பாதுகாப்பாளனும் அவுங்க மத்தியிலும்தான் இருக்காங்க."

"அப்படின்னா, சாக்கோ என்ன செய்யறான்?"-- பெரியவர் அனுதாபத்துடன் கேட்டார்.

"என்ன செய்ய முடியும்? தன்னத்தானே நொந்துக்கிட்டு நாளக் கழிக்கிறான். அந்தச் சாக்கோவப் பத்திதான், இடுப்புல கத்திய சொருவிக்கிட்டு நடக்கற அக்கரமக்காரன்னு நீங்க சொல்றீங்க."

"என்றாலும், அவுங்க ஒரு சுத்தமில்லாத வர்க்கம்தான்" என்று முகத்தைத் திருப்பிக்கொண்டு சொன்ன பெரியவர், "செத்துப் போன மாட்டுக்கறியக் காய வச்சித் திங்கற கூட்டம்" என்றும் கூறினார்.

"அவுங்களப் பத்தி வேறு கதியில்லாத பட்டினி கெடக்கும் ஏழைங்கன்னு சொல்லறதுதான் நல்லது. தரித்தரத்தாலதான் சுத்தம் கெடுது. பட்டினி, மனுஷனைத் திங்காததையும் திங்கச்

சொல்லுது. வங்காளப் பஞ்சக்காலத்தில் மனுஷன் நாயையும் பூனையையும் கூட புடிச்சித் தின்னக் கதையை நீங்க பத்திரிகையில படிக்கலியா மாமா? இந்தக் கூட்டத்தாரால் கறி வாங்க முடியாது. அவுங்க குடிசைக்குள்ள ஒருதரம் நொழைஞ்சிப் பாத்தா, தரித்திரமும் பட்டினியும் எப்படிப் பேயாட்டம் ஆடுதுன்னு தெரியும். காட்ல தாராளமா வெறகு கெடைக்கறதுனால அவுங்க எதையும் வெவிச்சித் திங்கறாங்க. இல்லன்னா, அந்தக் காய்ஞ்சி போன மாட்டுக்கறியக்கூட பச்சையாத்தான் திங்கவேண்டியதா இருக்கும்."

இதையெல்லாம். கேட்டதும், நம்முடைய சுத்த நல் ஆத்மாவான சாப்பன் நம்பியாருக்கு, மனதில் சொல்ல முடியாத ஒரு துன்பம் உண்டாயிற்று. அவைகள் ஒன்றையும் தான் கேட்டிருக்க வேண்டாமோ என்றுகூட அவருக்கு தோன்றி விட்டது.

"நீ போயி சாப்புடு" என்று கூறி மருமகனை உள்ளே அனுப்பினார். சாப்பன் நம்பியார், பிரேம் உடைந்த மூக்குக் கண்ணாடியைப் பஞ்சாங்கத்தின் உள்ளிருந்து வெளியே எடுத்து, லாந்தர் விளக்கின் திரியை உயர்த்தி, பாகவதத்தைப் பிரித்து வைத்துப் படிக்க ஆரம்பித்தார்.

## 27

மழைக்காலம் தொடங்கியது.

மலையிலுள்ள குழிகளிலும், கீழ் நிலங்களிலுள்ள தாழ்ந்த பள்ளங்களிலும் அழுக்குத் தண்ணீர் தேங்கி நின்றது. அதில் இலைகள் அழுகி நாறத்தொடங்கின.

அத்துடன் மலை ஜுரமும் (மலேரியா) புறப்பட்டது.

நனைந்து குளிர்ந்த கனத்த காற்றில், விஷக்கிமிகள் எங்கும் வியாபிக்க ஆரம்பித்தது. மங்கிய மலைச்சரிவுகளில் இருந்த திறந்த வெளியான பள்ளத்தாக்குகளிலுள்ள குடிசைகளுக்கு அவைகள் கொசு விமானங்களில் ஏறி விருந்துக்கு வரத் தொடங்கின.

நிலங்களில் வேலை செய்யும் வேலையாட்கள் சுருங்கத் தொடங்கினார்கள். குடிசைகளுக்குள் முக்கல், முனகல்கள் கேட்கத் தொடங்கின.

"ஹூம்...ஊ ஹூம்... ஹூம்...ஹூ ஹூம்...... ஊ ஊ.. அடி, கொஞ்சம் சுடு தண்ணி கொடேண்டி..... என்னப் புடிச்சிக்க.....டீ..... புடிச்சி அமுக்குடி!" என்றெல்லாம் கூவி சாக்கோச்சன் படுக்கையில் கிடந்து துள்ளினான்.

சூரியன், இரண்டு நாட்கள் ஜுரத்தை வைத்துக்கொண்டு நடமாடினான். மூன்றாம் நாள் அவனால் பாயிலிருந்து எழுந்திருக்க முடியவில்லை. நெஞ்சில் அரிசி வறுப்பதைப்போன்று ஓர் அனுபவம் ஏற்பட்டது. கஞ்சித் தண்ணீரைச் சூடாக்கிக் குடம் கணக்கில் குடித்தாலும், தீராத தாகம் அவனுக்கு ஏற்பட்டது.

மரியாம்மைக்கும் நடுக்கம் தொடங்கியது. மரியாம்மையின் கணவன் மாத்து, குடிசையிலிருந்த எல்லாப் பாயையும் பழந்துணி களையும் எடுத்துத் தன் உடம்பு முழுவதையும் மூடிக்கொண்டு, தரையெங்கும் உருண்டு கொண்டிருந்தான்.

பத்துப் பதினைந்து குடும்பங்கள் அவ்வாறு கஷ்டப்பட்டன. ஜுரம் வராதவர்களுக்கு, அவைகளெல்லாம் ஒரு பொழுது போக்காகத்தான் தோன்றியது.

வர்க்கியின் கூட்டத்தில் வந்த ஜேக்கப்பும், அவன் மனைவி ஏலியாவும், மகன் சைமனும், ஏலியாவின் தூரத்து உறவுக்காரியும் அநாதையுமான ஆனிக்குட்டியும் ஐந்து ஏக்கர் நிலத்தின் அதிபர்களானார்கள். அந்த அகதிகள் குடியிருப்பில் மிகவும் அழகான தோட்டம் அவர்களுடையதுதான். முள் மரங்களால் கட்டிய வேலியினால் சூழப்பட்ட தோட்டமும், சிறிய தொரு வயலும் இருந்தன. வயலில் நேந்திர வாழையும், எள்ளும் பயிரிட்டி ருந்தார்கள். தோட்டத்தில் பலவகையான காய்கறிகள் பயிரிடப் பட்டிருந்தன. நடுவில் புல் வேய்ந்த குடிசை, களிமண்ணால் மெழுகிய முற்றத்தில் கதலிவாழைகளும், பப்பாளி மரங்களும் தங்கள் அழகினால் எல்லை வைத்துக்கொண்டிருந்தன. அந்தப் பர்ணசாலையில் அவர்கள் அமைதியுடனும் திருப்தியுடனும் வாழ்ந்து வந்தார்கள்.

அந்தோணி எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் மாதா கோயிலுக்குப் போவான். ஐந்தாறு மைல்கள் சுற்று வட்டாரத்தி லுள்ள கிறிஸ்துவர்களில் ஏராளமானவர்களும்-ஆண்களும், பெண்களும் குழந்தைகளுமாக-அன்றைய தினம் அழகான ஆடைகளை அணிந்து, கோயிலில் கூட்டுப் பிரார்த்தனையில் பங்குகொள்ள வந்து கூடுவார்கள். அவர்களின் இடையே ஆனிக் குட்டியை அந்தோணி கண்டுபிடிப்பான், வெள்ளை நிறத்தில் உள்ள சுத்தமான தலைத்துணியை அணிந்து, அந்தப் பெண் மண்டி யிட்டவாறு பிரார்த்திப்பதை, அநுதாப அன்பை வெளியிடும் பாவத்துடன் அந்தோணி அவளைப் பார்த்துக்கொண்டு நிற்பான்.

பிரார்த்தனை முடிந்து பிரிந்து செல்லும்போது, அவள் கூச்சத்தில் மூழ்கி, ஒரு களங்கமில்லாமல் அவனைப் பார்த்துவிட்டு முகத்தைத் தாழ்த்திக்கொண்டு அப்பட்டமான ஒரு புன்னகையை உதிர்ப்பாள்.

ஆனிக்குட்டியின் அந்த மயக்கும் புன்னகையும், கருத்து விரிந்த விழிகளும் சாந்தம் நிறைந்த மலர்ந்த முகமும் அவன் இதயத்தில் ஒரு மறக்க முடியாத கனவாகப் பரிணமித்தது. வேதப்புத்த கத்தைப் பாராயணம் செய்யும்போது, கற்பனையில் தரிசித்த யாரோ ஒரு பாக்கியசாலியின் மறு உருவத்தை அவன் ஆனிக்குட்டி யிடம் தரிசித்தான். அந்த முகத்தைச் சுற்றிலும் ஓர் ஒளி வளையம் உள்ளதாக அவனுக்குத் தோன்றிற்று. கருத்து மின்னும் அட்டை யுடன் கூடிய வேதப் புத்தகத்தை மார்புடன் அணைத்து, சைமனின் கையைப் பிடித்துக்கொண்டு, முகம் குனிந்து மெல்ல மெல்ல நடந்துபோகும் அந்தப் பரிசுத்தமான பெண்ணை, தன்னுடைய தனிமைக்குக் கூட்டுக்காரியாக்கிக் கொள்ள அவன் மிகவும் தீவிரத்துடன் இருந்தான்.

ஒரு நாள் கோயிலிலிருந்து திரும்பும்போது, சைமன் ஓடி வந்து அந்தோணியின் கையைப் பிடித்துக் கொண்டு, "படிக்கிறத்துக்கு நாவலாவது புத்தகமாவது இருந்தா வாங்கியாரச் சொல்லி ஆனி அக்கா அனுப்பினா" என்று ரகசியமாகக் கேட்டான்.

அந்தோணியிடம் நாவலோ, கதைப்புத்தகமோ ஒன்றுமில்லை. அவன் தன் பெட்டியில் தேடி 'புண்ணியவான் சரித்திரங்கள்' என்றொரு புத்தகத்தையும், ஒன்றிரண்டு சுவிசேஷங்களையும் எடுத்து ஆனிக்குட்டி படிப்பதற்காகக் கொடுத்தனுப்பினான்.

## 28

அன்று மாலை நேரத்துடன் மழையும் நின்றது. ஆகாயம் அப்போதும் மூடிக்கொண்டுதான் கிடந்தது. மரத்தின் இலைகளி லிருந்து நீர்த்துளிகள் சொட்டு சொட்டாக விழுந்து கொண் டிருந்தன.

திடீரென அந்தப் பசுங்காடுகள் பிரகாசிக்க ஆரம்பித்தன. மழை விழுந்து நனைந்த பெரும் மரங்களில் லட்சோப லட்சம் மின் மினிப்பூச்சிகள் பளிச்சிட்டன.

கண்ணுக்குப் புலப்படாத மின்னொளிப் பிரவாகத்தில் தாளக்கதி நடவடிக்கைபோல், அந்தப் பிரகாசக் கூட்டங்கள் ஒன்றாக ஜொலித்தும் ஒன்றாக அவிந்தும் ஜாலவித்தை செய்து கொண்டிருந்தன.

அங்கிருந்த ஒவ்வொரு மரத்தின் உச்சியும் மரகத ஒளியாக மாறியது. அந்த மாணிக்க ஐந்துக்களின் பிரதிபலிப்பால், சேற்றுத் தண்ணீர் நிறைந்த பொதுவழிகள் சரிகைக் கரையுள்ள பட்டுக் கம்பளமாகத் தோன்றின.

மழைக்கால இருள் படர்ப்பில் ஆழ்ந்து கிடந்த அந்த மலைப்பிரதேசம், மின்மினிகளின் தொடர்ச்சியான பிரணவ லீலையினால் கந்தர்வ உலகமாயிற்று.

இருள் சுரங்கத்திலிருந்த வைரக்கற்களை வாரியெடுத்து, யாரோ அம்மானை ஆடிக்கொண்டிருந்தது போலிருந்தது. ஆயிரமாயிரம் வைடூரிய மாலைகளை மார்பில் அணிந்து கொண்டு, மழைக்கால இரவு நடனம் ஆடிக்கொண்டிருந்தது.

அந்தோணி, தன்னுடைய குடிசையின் வராண்டாவில் அமர்ந்து கற்பனையில் மூழ்கியிருந்தான்.

இருள்படர்ந்து ஈரமுள்ள சூழ்நிலையில், ஒளி வெள்ளத்தை உமிழும் மின் மினிகளின் அற்புதமான தெளிவு மிகுந்த மின்னல் களை அவன் ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான். அந்த ஆகாயவெளியைப் போலவே அவன் அந்தரங்கமும் சிலிர்த்தது.

அப்போது, மிருதுவான ஒரு கை, பின்னாலிலிருந்து அவன் கண்களை மூடியது. அவன் திடுக்கிட்டுப்போனான். கண நேரத்தில் அவன், தன் இடது கையினால் அருகில் வைத்திருந்த துப்பாக்கியை எடுத்துக்கொண்டு, வலது கையால் தன் விழிகளை மூடிய கையைத் தொட்டுப்பார்த்தான். வளையல் குலுங்கும் சப்தம் உண்டாயிற்று.

வளையல் குலுங்கிய கையைப் பலமாகப் பிடித்து இழுத்துவிட்டு நிமிர்ந்து பார்த்தான்.

மாதவி புன்னகைத்தவாறு பின்னால் நின்றாள்.

அந்தோணி துள்ளி எழுந்து அவளை ஒருமுறை உக்கிரமாகப் பார்த்தான். என்ன சொல்வதென்றே அவனுக்குத் தெரியவில்லை. பயங்கரமாக ஏதோ ஒன்று நிகழப்போகிறது என்ற உணர்வு மட்டும் அவனை விழுங்கியது.

"இங்க எதைப்பற்றி யோசிச்சுகிட்டு ஒக்கார்ந்திருக்கீங்க சார்?" அக்கேள்வியின் இனிமையான தொனி அந்தோணியை அமைதிப் படுத்தியது. அதுவும் 'ஸார்' என்னும் மிருதுவான பரிகாச அழைப்பு....

"நான் அந்த மின்மினிகளப் பாத்துக்கிட்டு ஒக்காந்திருக்கேன்," என்று சொன்னான் அந்தோணி. அப்போதும், அவன் அவளைச் சந்தேக எண்ணத்துடன்தான் பார்த்துக்கொண்டு நின்றான்.

சிறிது நேரம் கழிந்ததும், "இப்ப நீ வந்த காரணமென்ன மாதவி?" என்று கேட்டான்.

"ஓங்கிட்ட வரணும்னு தோணிச்சு அந்தோணி; அதான் காரணம். ஏன், ஓங்கிட்ட வரக்கூடாதா அந்தோணி?"

"நான் அப்பிடிச் சொல்லலியே" என்று கூறிய அந்தோணி லாந்தரின் திரியை உயர்த்தினான். மாதவியின் உருவம் தெளிவாகத் தெரிந்தது. கடும் சிகப்பு நிறத்தில் சிறியதும் குறுகியதுமான ஒரு ஜாக்கெட், கருப்பு கரையுள்ள நாட்டு முண்டு, இடுப்பில் கட்டியிருந்த நாட்டு முண்டுக்கும் ஜாக்கெட்டுக்கும் இடையில் கதலி வாழைப்பூவைப்போல அவள் வயிறு நிர்வாணமாகக் கிடந்தது. மைதீட்டிய கருமையாக்கிய விழிகளும், வெற்றிலை போட்டுச் சிவந்த உதடுகளும், கருத்து மின்னிய தலைமுடியும் அவளுக்கு அழகூட்டின. தலைமுடியை அவிழ்த்துப் பின்பக்கமாகத் தொங்கவிட்டிருந்ததால், அது அவளைத் திரைச்சீலையின் முன்னால் நிற்க வைத்திருப்பதுபோல் தோன்றியது. தன் சொந்த ஊரில் இருந்தபோது பார்த்த ஒரு நாடக நடிகையின் நினைவுதான் அவனுக்கு வந்தது. அவளை அந்தக் கோலத்தில் பார்த்தபோது அகாரணமான அந்தப் பயம் மீண்டும் அவனைப் பிடித்துக்கொண்டது.

நீ இப்ப இங்க ஒடியார்ரதுக்கு ஏதாச்சும் விசேஷம் உண்டான்னுதான் நான் கேக்கறேன்" என்று அந்தோணி அவள் முகத்தைப் பார்க்கத் தைரியமில்லாமல், அவள் காலடியைப் பார்த்துக்கொண்டே சொன்னான்.

"நீங்க இங்க தனியா வசிக்கிறதே எனக்கு விசேஷமாத்தான் இருக்கு" என்று பதில் கொடுத்தாள் மாதவி.

அதுக்கு என்ன அர்த்தம்? அந்தோணி மேற்கொண்டு என்ன சொல்வது என்று தெரியாமல் குழம்பினான்.

ஒரே அமைதி! அந்த அமைதியில் அவன் பயம் பிணத்தைப் போல் பெரிதாகத் தொடங்கியது.

மாதவி திரும்பிப் போகக்கூடியவளாகத் தெரியவில்லை. அவள் அவனருகில் கயிற்றுக் கட்டிலின் மேல் அமர்ந்தாள்.

அந்தோணி, மிகவும் தர்மசங்கடத்தில் அகப்பட்டுக்கொண்டான். அவள் முகத்தைப் பார்க்கவோ, அவளை உடனே அங்கிருந்து போக வேண்டுமென்று போகச்சொல்லவோ அவனுக்குத் தைரியமில்லை. அவள், தாளவோசை நடத்தும் மின்மினிகள்

நிறைந்த மரக்கூட்டங்களின் மேல் மீண்டும் கண்களை ஓட விட்டான்.

மின்னல் ஒளிக்கு மண்ணில் பிறந்த தங்கக் குழந்தைகளைப் போல் உள்ள மின்மினிகள், லீலா விநோதம் செய்யும் கண் கொள்ளாக் காட்சி மாதவியையும் தன் வயப்படுத்தியது. தங்கப் பொடிப் படலத்தால் மூடிக்கிடக்கும் ஆகாய வெளியை அவள் ஆசையுடன் பார்த்துக்கொண்டே, "ரொம்ப அழகான காட்சி" என்று கூறினாள்.

"அது என்னான்னு தெரியுமா?" என்று அந்தோணி கற்பனையில் மூழ்கியவாறு கேட்டான்.

"மின்மினிப்பூச்சி"

"மின்மினிதான். அவைகள் என்னா செய்யுதுன்னு தெரியுமா?"

"மின்னிக்கிட்டு இருக்குது"

"அவைகளுக்கு மின்னனும்னு தோணியிருக்கும்"

"இல்ல. அவைகள் காதல் நடனம் செய்யுது"

"காதல் நடனமா?" என்று கேட்ட மாதவி குலுங்கிச் சிரித்தாள்.

"ஆமாம். மின்மினிகளின் காதல் நடனம்தான் அங்க தெரியற காட்சி!" மின்மினிகளின் காதல் நடனத்தைப் பற்றித் தான் ஒரு மாத இதழில் படித்து பகுதிகளை நினைத்துக்கொண்டு, அந்தோணி தொடர்ந்து சொன்னான்.

"ஆமாம். ராத்திரி முழுக்க நடத்துற கம்பீரமான காதல் நடனம்தான் அது. ஒவ்வொரு ஆண் மின்மினியும் தனக்கு ஒரு ஜோடியத் தேடிப்புடிக்க, தன் பிரகாசத்தத் தாள வகையில உணர்த்திக்காட்டுது. அதுக்குப் பதிலா பொண் மின்மினியும் சம்மதத்துக்கு அறிகுறியா அதேபோல தன் பிரகாசத்த அதே தாளத்துல வெளிப்படுத்துது. அப்புடி அந்தக் காதல் நடனம் தொடர்ந்துக்கிட்டே இருக்கும். கடைசில வெடிவதற்கு முன்னால, அவைகள்ளாம் கூட்டத்தோட....."

இறுதி வார்த்தையை விழுங்கிக்கொண்டே அவன் அந்தப் பாடம் முழுவதையும் அவளுக்குச் சொல்லிக்கொடுத்தான்.

"அவைகள் கூட்டத்தோட என்ன செய்யும்?" என்று மாதவி ஒரு குறும்புச் சிரிப்புடன் கேலியாக நடித்துக்கேட்டாள்.

"அது ஒரு கெட்ட வார்த்தை; நான் சொல்லமாட்டேன்" என்று அந்தோணி தலையை ஆட்டிவிட்டுக் கீழே பார்த்தான்.

மாதவி சிரித்துவிட்டு யோசனையில் ஆழ்ந்தாள். இது ஒரு புதுச் செய்திதான். மின்மினிகள் கூட்டங்கூட்டமாக மின்னும்

காட்சியை, அவளள பல முறைகள் பார்த்து ரசித்ததுண்டு. என்றாலும், அந்தப் பிரகாசத்தில் காதல் விளையாட்டு உண்டென்று அவள் அறிந்திருக்கவில்லை. புதியதோர் ஆவேசத்துடன் அவள் அந்தப் பிரணவ உற்சவத்தைப் பார்த்துக்கொண்டே நின்றாள்.

காதல் லட்சியத்துடன் அந்த லட்சம் உயிர்களும் அப்போதும் கூட ஒளியை உமிழ்ந்துகொண்டுதான் இருந்தன. மலையோரம் முழுவதும் பொன்னொளி வளையத்தினால் சூழப்பட்டிருந்தன. ஆகாயத்தில் ஐந்நூறு நட்சத்திரங்கள் சாம்பல் துண்டுகளைப் போல் தோன்றின.

மாதவி திரும்பி அந்தோணியைப் பார்த்தாள். நாணத்துடன் கூடிய இன்பப் புன்னகையை உதடுகளுக்கிடையில் மறைத்துக் கொண்டு, அவள் அவனிடம், "இந்த ஆண் மின்மினியப்போல நீயும் எப்போவாச்சும் ஒரு பொண்ணுக்கு முன்னால மின்னியதுண்டா அந்தோணி?" என்று கேட்டாள்.

"அசட்டுத்தனமாகப் பேசாதே" என்று கோபமாகச் சொன்னான் அந்தோணி.

அவள் அதே புன்னகையை உதிர்த்வாறு அவனைக் கூர்மையாகப் பார்த்தாள். அவளுடைய கண் இமைகள் விட்டுவிட்டு மூடித்திறந்ததில் அவள் விழிகள் மின்மினியைப்போல் வெளிச்சத்தில் மின்னின.

அந்தோணி அவளை ஒரு முறை உற்றுப்பார்த்தான். அந்தக் கண்கள் அவன் இதயத்துக்குள் சிறகடித்து வருவதுபோல் அவனுக்குத் தோன்றியது...

ஒரு வௌவால் அந்தக் குடிசையின் வராண்டாவில் கொஞ்சநேரம் சுற்றிச் சுற்றிப் பறந்தது. பின், சிறகடித்து இருளுக்குள் ஓடி மறைந்தது.

"மாதவி, நீ இங்கேயிருந்து சீக்கிரமாகப் போயிடு" என்று அந்தோணி தைரியத்தை வரவழைத்துக்கொண்டு சொன்னான்: "நேரங்கெட்ட நேரம்—சித்தப்பாவோ வேற யாரோ வந்துட்டா..."

"வந்துட்டா..." என்று மாதவி இமைகளைச் சிமிட்டிக்கொண்டு கேட்டாள்.

"நீயொரு பொண்ணாச்சே?"

"ஓஹோ ஹோ------ அத இப்பவாச்சும் புரிஞ்சிக்கிட்டீங்களே!"

அந்தோணி அவளுடைய உதடுகளை உற்றுப் பார்த்தாள். காந்தாரி மிளகைப்போல் உள்ள உதடுகளிலிருந்து, எரிச்சல் அசையக்கூடிய வார்த்தைகள் புறப்பட்டன.

"அப்படின்னா, நான் போய்டறேன் சார்" என்று மாதவி எழுந்து கொண்டாள்.

"பயமாயிருந்தா, நானும் கொஞ்ச தூரம் கூட வறேன்"

"இப்ப நீதானே அந்தோணி பயங்காட்டற?" அவள் தன் முகத்தைத் திருப்பி கழுத்தை ஒரு வெட்டு வெட்டிவிட்டு, முற்றத்தில் இறங்கி வாழைக் கூட்டங்களுக்கிடையில் மறைந்தாள்.

அங்கே அந்தக் காட்சி அது போல் முடிந்த நேரத்தில், வெகு தொலைவிலுள்ள ஜானுடைய பங்களாவில் பாலும், வர்க்கியும், செரியானும், வர்க்கீஸும் சேர்ந்து கம்பீரமான சீட்டாட்டத்துக்குத் தயார் செய்து கொண்டிருந்தார்கள். பத்து ரூபாய் நோட்டுக் கட்டுகள் மேஜைமேல் கிடந்தன. விளையாடியதில் கிடைக்கும் பணம் முழுவதும் குடித்தே தீர்க்கவேண்டும் என்பதுதான் அவர்களின் சபதமாகும்.

சீட்டுக்கள் கலைத்து எறியப்படுகின்றன; பங்கிடப்படுகின்றன; கேள்விகள் கேட்கப்படுகின்றன; விளையாட்டு தூள் பறக்கின்றது. சிகரெட்டுப் புகையால் அறை மங்குகின்றது. வெற்றிக் கொண்டாட்டம் முழங்குகின்றது. நோட்டுக்கட்டுகள் இடம் மாறுகின்றன. பந்தயம் அதிகமாகின்றது; பேராசை பெருகுகின்றது... ஏறக்குறைய சூரியோதயம் வரை அந்த விளையாட்டு தொடர்ந்து கொண்டே இருக்கின்றது.

அன்று, வர்க்கியின் மடியிலிருந்து முன்னூறு ரூபாயை எடுத்துக் கொண்டு ஜான் 'பாட்டில்கள்' வாங்குவதற்காக நகரத்திற்குப் புறப்பட்டான்.

## 29

வேறு வழியில்லை என்ற கட்டத்தில், தறமூட்டில் சாக்கோவைக் குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியார்தான் காப்பாற்றினான்.

குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியார், சாக்கோவுக்கு ஆயிரம் ரூபாய் கொடுத்தான். இருவரும் ஒன்றாகச் சேர்ந்து கூட்டு விவசாயம் ஆரம்பித்தார்கள்.

சாப்பன் நம்பியாரின் சம்மதத்துடன் தான், குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியார் சாக்கோவுடன் சேர்ந்து விவசாயத்தை ஆரம்பித்தான். ஆனால், அங்கே இருந்த வேறு சிலருக்கு அந்த ஏற்பாடு அவ்வளவாகப் பிடிக்கவில்லை.

அவர்கள் குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியாரிடம்,"அவன் திருவிதாங் கூருக்காரன். நீ ஜாக்கிரதையா இருந்துக்கோ" என்று அறிவுரை கூறினார்கள்.

"நஷ்டம் வந்தாலும், லாபம் கெடைச்சாலும் பணம் இங்கியே தானே இருக்கப்போவுது? சாக்கோ அத திருவிதாங்கூருக்குக் கொண்டுபோவ மாட்டான். இனிமே கொண்டு போனாலும் திருவிதாங்கூரும் கேரளத்துலதானே இருக்கு?" என்று குஞ்ஞிக் கிருஷ்ணன் அவர்களுக்குத் திருப்பி பதில் சொன்னான்.

"ஆங்...ஆங்... நாங்க பார்க்கறோம்".

ஆனால், அவர்கள் நினைத்ததுபோல் ஒன்றையும் பார்க்கமுடிய வில்லை. சாக்கோவும் குஞ்ஞிக்கிருஷ்ணனும் சேர்ந்து செய்த வேலை வெற்றிகரமாக நடந்தது. மரவள்ளிக்கிழங்கு விற்ற வகையில் மட்டும் ஒவ்வொருவருக்கும் அந்த வருஷம் ஐநூறு ரூபாய் லாபம் கிடைத்தது. அவர்கள் விவசாயம் மிகவும் பெருக ஆரம்பித்தது.

சாக்கோ, சாப்பன் நம்பியாரின் வீட்டுக்கு அடிக்கடி வரத் தொடங்கினான். பெரியவருக்கும் நாளாக நாளாக சாக்கோவின் மேல் அன்பு வளர்ந்தது. சாக்கோவின் உலக ஞானம் அடங்கிய பேச்சுக்களும், விவசாயம் சம்பந்தமான தனிப்பட்ட அறிவும் சாப்பன் நம்பியாரைக் கவர்ந்தன. சில சமயம், அவர்கள் மத விஷயங்களைப் பற்றியும் வாதப் பிரதிவாதங்கள் நடத்துவார்கள். சாக்கோ ஒரு முற்றிய கிறிஸ்துவனாக இருந்தான். எதைப் பற்றியும் புதுப்புதுச் செய்திகளை அறிந்து கொள்வதிலும், தன் அறிவை மற்றவர்களுக்குப் பயன்படும் விதத்தில் பகிர்ந்து கொடுப்பதிலும் அவன் திறமைசாலியாக இருந்தான்.

அதனால், சாப்பன் நம்பியாரால் ஒரு நாள் கூட சாக்கோவைப் பார்க்காமல் இருக்க முடியவில்லை. இரவு எட்டு ஒன்பது மணி வரையிலும்கூட, சாப்பன் நம்பியாரும் சாக்கோவும் சாய்வுப்படி மேல் உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பார்கள். அதன் பிறகு சாக்கோ விடைபெற்று வீட்டிற்குச் சென்று பிரார்த்தனை சொல்லிவிட்டு, இரவுச் சாப்பாட்டை முடிப்பான், சாப்பன் நம்பியார் பாகவத பாராயணத்தில் மூழ்கியிருப்பார்.

## 30

கட்டுமான வேலை நடந்து கொண்டிருக்கும் கிறிஸ்துவக் கோயிலின் அருகில்தான் பாதிரிகளின் இருப்பிடமும் இருந்தது. புதியதாகக் கட்டிய அழகான பங்களா, சுற்றிலும் பூஞ்செடிகள்.

முதலில் விருந்தினர் அறையைத்தான் கடந்து செல்ல வேண்டும். அழகாக அலங்கரித்து வைக்கப்பட்டுள்ள விசாலமான அறை. குளிர் காற்றைத் தடுப்பதற்காகக் கனமான கண்ணாடிகளும், உச்சி வெயிலின் உக்கிரத்தைக் குறைப்பதற்காக நீலத் திரைச்சீலைகளும் ஜன்னல்களில் பதிக்கப்பட்டிருந்தன. அறைத்தரையில் கனமான கயிற்றுப் பாய் - சித்திர வேலைப்பாடுகள் அடங்கிய ரோஸ்நிறக் கயிற்றுக் கம்பளம்-விரிக்கப்பட்டிருந்தது. குஷன் நாற்காலிகள், சோபாக்கள், முதலியவைகளின் நடுவில் ஒரு வட்டமேஜை மேல், புதுமலர்களால் கட்டிய ஒரு பூச்செண்டு வைக்கப்பட்டிருந்தது. இளம்பச்சை நிறம் பூசப்பட்ட சுவரில், கிறிஸ்துவப் புண்யாத்மாக்களின் படங்கள் தொங்கிக்கொண்டிருந்தன.

விருந்தினர் அறையின் உள்வாயில் திரைச்சீலையை நீக்கி கடந்து சென்றால் சிறியதோர் இடைவழி உள்ளது. அதன் இரு பக்கங்களிலும் படுக்கையறைகள். ரோஸ்வுட் கட்டிலும், பட்டு மெத்தையும், வெல்வெட் தலையணைகளும் நீலக்கம்பளியும் எல்லாம் கட்டிலின் பந்தக்காலில் கட்டித் தொங்கிக்கொண டிருக்கும் கொசுவலையினுள்ளே மங்கலாகத் தெரியும்.

படுக்கையறைகளை ஒட்டியவாறு, விசாலமான படிப்பறையும் நூலகமும் நிலை கொண்டிருந்தன. அழகாக பைண்டு செய்த மதப் புத்தகங்கள் மூன்று நான்கு கண்ணாடி அலமாரிகளில் அடுக்கி வைக்கப்பட்டிருந்தன. நீலநிறத் துணி விரிக்கப்பட்டிருந்த பெரிய தொரு மேஜை மேல், வெளி நாட்டிலிருந்து வெளிவரும் சில மதச்சார்பான மாத இதழ்களும், திருவிதாங்கூர் பத்திரிகைகளும் ஒரு புறம் வைக்கப்பட்டிருந்தன.

அவைகளுக்குப் பின்புறமாக, சாப்பாட்டு அறையும் பண்டக அறையும், வேலைக்காரர்களின் அறையும், மற்றவைகளும் அடுத் தடுத்து இருந்தன. முற்றத்தில் கம்பி வலையால் கட்டப்பட்டிருந்த ஒரு கோழிக்கூண்டில் பலவகையான ஜாதிகளில் பெரியதாகவும், பல நிறங்களிலும் உள்ள கோழிகள் தீனியைக் கொத்திப் பொறுக்கியவாறு, கொக் கொக்கென்று கத்திக்கொண்டு சுற்றிச் சுற்றி நடந்து கொண்டிருந்தன.

காட்டுப் பிரதேசத்தின் தொந்தரவுகளிலிருந்து ஒதுக்குப் புறமாக உள்ள அந்த அழகான கட்டிடத்தில், ஃபாதர் சைமனும், ஃபாதர் சள்ளிப்பரம்பனும், ஒரு பிரதரும் வசித்து வருகிறார்கள்.

சாப்பாட்டு அறையில், தூய வெள்ளைத் துணி விரிக்கப்பட்ட உணவு, மேஜையின் இரு பக்கங்களிலுமாக அவர்கள் உணவு

உண்ண அமர்ந்துள்ளார்கள். அவர்களுடன் இரண்டு விருந்தினர்கள் இருந்தார்கள்.

பிளேட்டுகளும், பீங்கான்களும், கத்தி, முள் கரண்டிகளும் துடைத்து மினுக்கப்பட்டு மேஜை மேல் பரப்பி வைக்கப்பட்டிருந்தன. அவைகளுக்கு முன்னால் ரொட்டியும், பாலாடைக் கட்டியும், பெரிய கோப்பைகளில் இறைச்சியும், பேசினில் வறுத்த கறியும், ஆம்லெட் முதலானவைகளும், சாஸும், சூப்பும் உலர்ந்த பழங்களும் என்று ஏராளமான, வயிற்றின் தேவைக்கு மீறிய-- நாக்கின் ருசியை மட்டும் அடிப்படையாகக் கொண்ட மேற்கத்தியர் கண்டுபிடித்த சமையல் பதார்த்தங்கள் அனைத்தும் அங்கே வைக்கப்பட்டிருந்தன. அத்துடன் ஒரு பாட்டில் திராட்சை ஒயினும் இருந்தது.

பேசினிலுள்ள சூப்பை ஸ்பூனால் மொண்டு குடித்துவிட்டு, உணவுக்குழல் வழியைத் தெளிவாக்கி, ஒரு காரத்துண்டைக் கையில் எடுத்து ஒடித்து வாயில் போட்டு மென்றவாறு, ஃபாதர் சைமன் சாப்பிட ஆரம்பித்தார். நண்பர்களும் சாப்பிட ஆரம்பித்தார்கள். ஆட்டின் தொடையை மசாலா சேர்த்து நெய்யில் வறுத்த, அடுக்கி வைத்த பிளேட்டிலிருந்து, ஒரு பெரிய துண்டை இடுக்கியால் இறுக்கி எடுத்து, ஃபாதர் சள்ளிப்பரம்பன் கத்தியானாலும் முள்ளாலும் தன் ஆக்கிரமிப்பைத் தொடங்கினார்.

ஆவியில் வேகவைத்த ஆட்டின் இதயம், நெய்யில் வறுத்த நாக்கு, கோழி முட்டையினால் செய்த 'காளைக்கண்' கட்லட் என்னும் அற்புதமான ஐட்டங்களின்பால் ஃபாதர்களினுடையதும் விருந்தினர்களுடையதுமான கைகள் நீண்டன.

வறுத்த அட்டிறைச்சியை மென்றவாறு ஃபாதர் சைமன் விருந்தினர்களைப் பார்த்து, "இங்கே நல்ல ஆட்டிறைச்சி கிடைப்பதில்லை. கோட்டயம் கொட்ட நாடுகளிலுள்ள ருசியே தனிதான்!" என்று கூறினார்.

விருந்தினர்களில் ஒருவன், "எப்படியிருந்தாலும் ஃபிரிப்பரேஷன் பேஷாக இருக்கிறது" என்று அபிப்ராயப்பட்டான்.

"சாக்கோ ஒரு கெட்டிக்கார குக்" -- ஃபாதர் ஸைமன் மற்றொரு துண்டை ஆக்கிரமித்துக்கொண்டே,"அவன் ஆனைமலையிலே ஒரு துரையோட குக்காக இருந்தான். முதல் தரமான இங்கிலீஷ் டிஷ்களைத் தயாரிக்க அவனுக்குத் தெரியும்" என்று சொன்னார்.

தன்னுடைய சமையல் திறமையை அனுபவித்தி பின் அபிப்ராயம் சொல்லட்டும் என்னும் பாவத்தில், சாக்கோ

விருந்தினர்களின் பீங்கான்களில் ஒரு வறுத்த ஆட்டுத்தொடையை வைத்தான்.

அங்கேயிருந்து சுமார் இரண்டு மைல் தூரத்திலுள்ள ஒரு குன்றின் சரிவில் இருக்கும் குடிசையில், தொம்மன் கஞ்சிக் காய்ச்சிக்கொண்டிருந்தான். அருகில் ஒரு பாயில் இரண்டு குழந்தைகள் செத்து விரைத்த தவளைகளைப்போல், கைகால்களை அகற்றி நிர்வாணமாக மல்லாந்து கிடந்தார்கள்.

தொம்மன் அடுப்பின் அருகில் அமர்ந்து கொண்டு என்னவோ, சொந்த விஷயத்தைச் சொல்லி அதனை ஒருமுறை மெதுவாக முத்தமிட்டான். அடுப்பில் எவ்வித சலனமும் உண்டாகவில்லை. நனைந்து போன அந்த அடுப்பில் தீப்பிடிக்கவில்லை. தொம்மன் பல தடவை முட்டிப் போட்டு நமஸ்கரித்து, கர்த்தரின் நாமத்தைச் சொல்லியும் கூட'உள்ளே ஒன்றும் பிரசாதம் இல்லை' என்ற மட்டில் இருந்தது. ஓலைத் துரும்பில் மண்ணெண்ணெய் ஊற்றித் தள்ளிப்பார்த்தான். அடுப்பு சில கனவு முணுமுணுப்புகளை மட்டும் வெளியிட்டுவிட்டு மீண்டும் தூங்கத் தொடங்கிவிட்டது.

இது போன்று பல அக்கினிப் பரீட்சைகளை நடத்திய பின், கடைசியில் எப்படியோ அடுப்பு சூடேறி, தீ கொழுந்து விட்டு எரிந்தது. கலயத்திலுள்ள தண்ணீர் சூடாவதற்குக் காத்திராமல் அவன் ஐந்தாறு பிடி அரிசியை வாரிப்போட்டு, அடுப்பில் குச்சிகளைத் தள்ளினான்.

சிறிது நேரம் கழித்ததும் அரிசி வெந்து பூக்கத் தொடங்கியது. அவன் கஞ்சிக்கலயத்தைக் கீழே இறக்கி வைத்து, அதில் கொஞ்சம் உப்பைத் தூவி விட்டுக் கிளறினான். குழந்தைகளை உலுக்கி எழுப்பினான். வராண்டாவில் இருந்து ஆறு வயதுச் சிறுவன் ஒருவனும் அங்கே வந்து சேர்ந்தான்.

தொம்மன் ஒரு பெரிய மண் சட்டியில் கஞ்சியை ஆற்றிப் பங்கிட்டான். தொம்மனும் அவன் குழந்தைகளும் கரண்டியினால் கஞ்சியை வெளியே எடுத்துக் குடிக்கத் தொடங்கினார்கள்.

கஞ்சி குடித்து முடித்ததும், தகப்பனும் பிள்ளைகளும் புறப்பட்டார்கள். ஓர் அழுகிய மழையும் கூடவே பெய்யத் தொடங்கியது.

ஆறு வயது ஔசேப்பும், நான்கு வயது இட்டூப்பும் அன்னியோன்னியமாகத் தோளோடு தோள் சேர்த்துக் கழுத்தைக் கட்டிப் பிடித்துக்கொண்டு நடந்தார்கள். ஔசேப்பு பெரியதொரு சேப்பம் இலையைத் தலைக்குமேல் குடையாகப் பிடித்துக்

கொண்டிருந்தான். நான்கு மாதமே சென்ற ஓர் இளங்குழந்தையை மார்போடு சேர்த்து அணைத்தவாறு, தொம்மன் சிரமப்பட்டுப் பின்னால் நடந்தான். தொம்மனின் தலையில் எட்டுக்கால் பூச்சி வலையைப்போல் பழையதொரு தொப்பிக்குடையும் இருந்தது.

மழைச்சாரல் முழுவதையும் தங்கள் மேல் தாங்கிக்கொண்டு அவர்கள் நடந்தார்கள். மலை அட்டைகள் கூட்டத்தோடு கூட்ட மாக அலறிக்கொண்டிருந்தன. மலைச்சோலைகளின் வழியாகச் சிவந்து குழம்பலான மலைவெள்ள விழுந்து ஓசை எழுப்பிக் கொண்டிருந்தது. காடுகள் வளர்ந்து மூடி மறைத்த ஒற்றையடிப் பாதை மீது அந்த இரண்டு இரட்டை உருவங்களும் நகர்ந்து கொண்டிருந்தன.

அவர்கள் ஃபாதர் சைமனின் பங்களா முற்றத்தையடைந் தார்கள். பங்களாவின் வெளியிலோ, விருந்தினர்களின் அறை யிலோ யாரையும் காணாமல் தொம்மன் முற்றத்திலேயே சங்கடத் துடன் நின்று விட்டான்.

சிறிது நேரம் கழிந்ததும் ஒரு பெரும் மழை புறப்பட்டு வரும் ஆரவாரத்தைத் தூரத்திலேயே கேட்டுவிட்டு, அவன் குழந்தை களை வேகமாகத் தள்ளி நடத்தி, பங்களாவின் வெளி வராந்தா விற்குச் சென்று அந்த வர்ணத் தூண்களைப் பிடித்துக்கொண்டு நின்றான்.

தொம்மன் அந்தப் பங்களா முழுவதையும் ஒருமுறை நோட்டம் விட்டான். இயற்கையின் சிறு சிறு தொந்தரவுகளிலிருந்தும் கூட பத்திரப்படுத்தி வைக்கப்பட்டுள்ள அதியற்புதமான அந்த வன பவனம் அவனைப் பொறாமைப்பட வைத்தது. அநியாய சிந்தனையில் தான் மூழ்கி இருக்கின்றோம் என்ற உணர்வு வந்தபோது, அவன் அனுதாபத்துடன் சமாதானப்படுத்திக் கொண்டான்: 'அவர்கள் தெய்வத்தின் சொந்தக்காரர்கள்! ஆதலால் அவர்கள் என்றைக்கும் சுகமாக இருக்கவேண்டும்!'

இட்டூப்பு ஒருமுறை கைகால்களை நீட்டிச் சோம்பல் முறித்தான். தொம்மன் குழந்தையின் முகத்தைப் பார்த்தான். குழந்தைக்குக் கடும் ஜூரம் அடித்துக்கொண்டிருந்தது.

"அப்பா....படுக்கணும்.....படுக்கணும்பா......." கலங்கி மயங்கிய கண்களை மெதுவாகச் சிமிட்டிக்கொண்டு இட்டூப்பு பேசினான்.

தொம்மன் உதவியற்றவனாக சுற்று முற்றும் பார்த்தான். மழை ஒரேயடியாகப் பொழிந்து கொண்டிருந்தது. சுவரின் ஓரம் நனைந்து கொண்டிருந்தது. தொம்மன் கைக்குழந்தையை

மார்போடு அணைத்தவாறு, தரையில் சுவரோடு சுவராகச் சேர்ந்து உட்கார்ந்து கொண்டான். இட்டூப்பைத் தன் மடியில் சாய்த்துப் படுக்கவைத்து அவனுடைய பிஞ்சுக்கால்களைத் தடவிக் கொடுத்தான்.

உடம்பு முழுவதும் சிரங்கு பொங்கி, அதைச் சதாநேரமும், சொறிந்து கொண்டும் பிராண்டிக்கொண்டும் இருந்தான் ஔசேப்பு. அவன் ஃபாதரின் பூந்தோட்டத்திலுள்ள பெரிய ரோஜாப் பூக்களை ஆவலுடன் பார்த்துக்கொண்டே, நகங்களால் தன் தொடையில் பாலிஷ் செய்து கொண்டிருந்தான்.

அரைமணிநேரம் கழிந்ததும் ஃபாதர் சைமன் சாப்பிட்டுவிட்டு, உலக்கைத்துண்டு போல் உள்ள ஜாவா சுருட்டை வாயில் கடித்துக் கொண்டு, வராண்டாவிற்கு வந்து ஒரு கான்வாஸ் நாற்காலியில் சாய்ந்து படுத்தார்.

மடியில் கிடந்த இட்டூப்பை இடது தோளுக்கு மாற்றிய தொம்மன், எழுந்து வராண்டாவில் கீழ்ப்படியில் ஒரு மூலையைப் பிடித்துக்கொண்டு முகத்தைக் காண்பித்தான்.

"யார் நீ?" - ஃபாதர் புகைவிட்டுக்கொண்டு கேட்டார்.

தொம்மன் தன் வரலாறு முழுவதையும் ஃபாதருக்கு விவரித்து எடுத்துக் கூறினான்.

ஓராண்டிற்கு முன்புதான் அவன் திருவிதாங்கூரிலுள்ள ஆரக்குழை என்ற இடத்திலிருந்து மலபாருக்கு வந்தான். ஊரில் தன் பொருள் வகைகளை விற்றதில் அவனுக்கு 700 பிரிடிஷ் ரூபாய்கள் கிடைத்தன. மனைவியும், தம்பி செரியானும், நான்கு குழந்தைகளுமாக ஏழுபேர்கள் புறப்பட்டார்கள். இங்கே வந்து அவர்கள் இருபது ஏக்கர் நிலம் வாங்கி குடிசைக்கட்டிப் பயிரிடத் தொடங்கினார்கள். நான்கு மாதங்கள் கழிவதற்குள்ளேயே மூத்த குழந்தை ஜுரம் கண்டு இறந்தது. அதன் பிறகு இரண்டு மாதங்கள் கழிந்ததும் செரியானும் மலேரியாவினால் இறந்தான். சென்ற மாதம் ஒரு குழந்தையைப் பெற்றுவிட்டு, அவன் மனைவியும் இறந்தாள். பயிர்களையெல்லாம் பன்றி புகுந்து நாசமாக்கி விட்டன. எல்லாமே நஷ்டமாகி விட்டன. கடனும் ஏற்பட்டு விட்டது. ஆகாரத்திற்கும் வழியில்லை. அவனுக்கும் மலை ஜுரம் பிடித்திருக்கின்றது. இளங்குழந்தைக்குத் தாய்ப்பால் கொடுக்கக்கூட யாருமில்லை. இட்டூப்பிற்கும் ஜுரம் தொடங்கி இருக்கிறது. இனிமேல் அவர்களும் இங்கே கிடந்து சாக முடியாது. அதனால் திரும்பவும் சொந்த ஊருக்கே செல்ல வேண்டும். யாரும்

உதவுவதாக இல்லை. அவனுக்கு உதவி செய்யக்கூடியவர்களும் மிகவும் கஷ்டத்திலுள்ளார்கள். ஃபாதர்தான் கருணைகூர்ந்து 100 ரூபாய் கொடுத்து உதவ வேண்டும். ஒரு முஸ்லிமுக்கு 50 ரூபாய் கொடுக்கவேண்டும். மீதி 50 ரூபாயைக் கொண்டு எப்படியாவது ஊருக்குப்போய்ச்சேர வேண்டும்.

தொம்மனின் அனுதாபத்துக்குரிய கதையை ஃபாதர் முதலிலிருந்து கடைசிவரை மிகச் சிரத்தையுடன் கேட்பதுபோல் பாவனை செய்து கேட்டார்.

தொம்மனின் வறண்ட இதயம். ஃபாதரின் கருணை நிறைந்த கண்களில் தொக்கிக்கொண்டு கிடந்தது.

கண்ணீருடன், "கர்த்தரப்போல ஒங்கள நெனச்சிக் கேக்கிறேன்... இந்த ஏழையயும், கொழந்தைகளையும் காப்பாத்தணும். சொந்தக்காரங்கள்ளாம் இந்த நாசமான ஊருல மண்ணுக்கு கீழப்பூட்டாங்க. இங்க எல்லாமே வெஷம், வெஷம், வெஷம்தான்! ஒரு நிமிஷத்துக்குள்ள இங்கருந்து போயிட்டா அதுவே நான் செஞ்ச புண்ணியம் தான்..." என்று அவன் சொல்லி முடித்தான்.

தொம்மனின் தோளில் மரத்தவளையைப்போல் கிடந்த குழந்தை அவன் முலைக்காம்புகளில் பால் குடிக்க முயற்சித்தது. இட்டூப்பு உணர்வில்லாமல் அடுத்தத் தோளில் குழைந்துபோய்க் கிடந்தான்.

ஃபாதர் தன் நரைத்த தாடியை தடவிக்கொண்டே கீழே பார்த்துச் சாந்தமான குரலில் சொன்னார்:

"நான் எங்கேருந்து பணம் கொடுக்க முடியும்? கோயில் வேல பூர்த்தியாவல. அதுக்கு நெனச்சதவிட நாலு பங்கு பணம் அதிகமா வேணும் போலிருக்கு. இந்தப் புது எடத்தில ஒரு வழியாவும் வருமானம் வர்றதாத் தெரியல. அதனால், கெடைக்கற ஒவ்வோர் பைசாவும் கோயில் வேலைக்குத்தான் ஒதுக்கி வெச்சிருக்கு. நீ கர்த்தர நம்பிக்கிட்டு இங்கேயே தங்கு!"

தொம்மனின் இதயம் வீழ்ந்தது.

அவன் அழுதுகொண்டே, "எப்படி நான் இனிமேயும் இங்க தங்க முடியும்? வெவசாயத்த மொதல்லேந்தே தொடங்கணும். அதுக்குப் பணம் வேணும். எங்கிருக்குப் பணம்? நாலரிசி வாங்கக்கூட பைசா இல்ல. இந்த மழைக்காலத்துல நான் என்னா செய்யறது. அட, சொந்த வேலய ஒதறிட்டு எங்கியாச்சும் கூலி வேலைக்காச்சும் போவலாம்னாலும், மம்முட்டிய எடுத்து வெட்டக்கூட இப்ப என்னால முடியல..." என்று கூறினான்.

"கர்த்தர நம்பு. எல்லாம் சரியாவும்" என்று மட்டுமே ஃபாதரால் சொல்ல முடிந்தது.

மழையின் பேரோசை நிலைத்திருந்தது. தொம்மன் தன் தோளில் கிடந்த குழந்தைகளைக் கட்டிப் பிடித்து, ஔசேப்பினையும் கூட்டிக்கொண்டு தன் குடிசைக்குத் திரும்பினான். நிச்சயமற்ற தன்மைக்கு— அந்தகாரத்துக்கு— பயங்கரத்துக்கு— அவன் திரும்பினான்.

ஒரு நடுக்கத்துடன் அவன் தன் குடிசைக்குள் நுழைந்தான்.

வராண்டாவில் மழை வெள்ளம் குளம்கட்டி நின்றது. இராவணத்தில் கட்டித் தொங்கவிட்டிருந்த மூங்கில் தட்டிகள் காற்றில் அறுந்து விழுந்துபோய் இருந்தன. ஒரு பெரிய மஞ்சள் பாம்பு ஓலைக்கதவின் ஓட்டை வழியாக உள்ளே ஊர்ந்து போயிற்று—

மாதா கோயிலின் வேலை பாதி முடிவதற்கு முன்பே, அதன் அருகில் உள்ள மயானத்தின் பரப்பளவை அதிகரிக்க வேண்டியதாயிற்று.

மரணத்தின் கூட்டல் குறியைப் போலச் சிலுவைகள் அங்கே அதிகரிக்கத் தொடங்கின.

ஒரு புதிய மரச்சிலுவையின் கீழே தொம்மனும், அதற்கு அருகில் உள்ள சிறிய சிலுவையின் கீழே இட்டூப்பும் புதையுண்டு கிடந்தார்கள்.

தொம்மனின் கைக்குழந்தையைக் காட்டு நரி கடித்து இழுத்துக் கொண்டு போய்விட்டது. சிரங்கு பிடித்த ஔசேப்பை, பாதர் சள்ளிப்பரப்பன் மாரிக்குன்னில் உள்ள அனாதை இல்லத்தில் சேர்த்துவிட்டார்.

தொம்மனின் குடிசையும் நிலமும் பழையபடி காட்டு ஆட்சியில் மூழ்க ஆரம்பித்துவிட்டன.

## 31

ஒரு ஞாயிற்றுக்கிழமை.

மரியம், மேரிக்குட்டியையும் ஜானியையும் குளிப்பாட்டிச் சுத்தம் செய்து, புதுச் சட்டைகளை அணிவித்து சேர்த்து நிறுத்தினாள். அவளும் குளித்துவிட்டு, வெள்ளைத் துணியால் விசிறி மடித்து உடுத்திக்கொண்டு, புதுச்சட்டையை அணிந்து, ஒரு புதுமுண்டை மேலே போட்டுக்கொண்டு குழந்தைகளுடன் மாதா கோயிலுக்குப் புறப்பட்டாள்.

அவள் குழந்தைகளை அழைத்துக்கொண்டு, தவறாமல் எல்லா ஞாயிற்றுக்கிழமைகளிலும் மாதா கோயிலுக்குச் செல்வதுண்டு.

மாதா கோயிலில், "கன்னிமாதாவே, சுத்த மரியாளே—இந்த அடிமைகளோட எளிய பிரார்த்தனையை ஏற்றுக்கொள்ளுங்கள். கொழந்தைகளும் இவைகளோட அப்பனும் என்னிக்கும் சொகமா இருக்க அருள்புரியணும்—எங்க வெவசாயம் அதிகரிச்சு, நாங்க அதிக நெலங்களுக்குச் சொந்தக்காரங்களாகவும் போது, இந்த அடிமை வேண்டுதல முடிக்கிறேன்—கோயில்ல இந்த அடிமைங்க வகையறா பெரிய வெள்ளிச் சிலுவைய நட்டு வைக்கும்....." என்று அவள் பிரார்த்திப்பாள்.

ஆமாம், செல்வநிலை அதிகரிக்கும்போது கோயிலுக்கும் பெரிய வெள்ளிச்சிலுவை ஒன்றைக் காணிக்கையாகச் செலுத்த வேண்டுமென்பது மரியத்தின் மிகப் பெரிய ஆசை. பலி பீடத்தில் மெழுகுத் திரிகளின் கூட்டுப் பிரகாசத்தில் அவளுடைய பெரிய வெள்ளிச் சிலுவை ஒளிர்ந்து கொண்டிருக்கும் காட்சியைத் தன் மனத்துக்குள் தரிசித்தாள் மரியம்.

பிரார்த்தனைக்கு வருபவர்கள், "அது பள்ளிப்பிரம்பில் மாத்தன் மனைவி மரியத்தோட சிலுவ—" என்று அந்தச் சிலுவையைச் சுட்டிக்காட்டிப் பேசுவார்கள்.

மரியத்தின் காலம் முடிந்ததும் அங்கு வரும் மக்கள் அதைப் பார்த்ததும் மரியத்தை நினைத்துக்கொள்வார்கள். ஜானியும் மேரிக்குட்டியும் - அவர்கள் பெரியவர்களாகித் தங்கள் குழந்தைகளைக் கையில் பிடித்து அழைத்து வருவார்கள் - அந்தச் சிலுவையைத் தங்கள் குழந்தைகளிடம் காட்டி, "அது ஒங்க பாட்டி செஞ்சி வெச்ச சிலுவை" என்று கூறி அவர்களுக்குப் புரிய வைப்பார்கள்.

இரத்தம் புரண்ட சிலுவையைச் சுமந்து நிற்கும் இயேசுவும், ஒளி வட்டத்துடன் கூடிய கன்னி மரியாளும், புண்ணியாத்மாக்களும் உள்ள உருவங்களுக்கு முன்னால், மரியத்தின் கற்பனை நினைவு என்றும் சுழன்று கொண்டிருக்கும்.

ஆனால் மாத்தனின் எண்ணங்கள் வேறாக இருந்தன. பிடித்துத் தள்ளினாலும், கட்டி இழுத்துச் சென்றாலும் அவன் கோயிலுக்குச் செல்வதில்லை; கோயிலுக்கு அருகில் கூடப் போவதில்லை.

மாத்தன் மிகவும் பயப்படக்கூடிய இடங்கள் இரண்டு. ஒன்று, போலீஸும், போலீஸ் ஸ்டேஷனும். மற்றது கோயில், போலீஸ்காரர்களை நினைக்கும்போது அவர்களின் தலையிலுள்ள

தொப்பியும், கோயிலை நினைக்கும்போது அதன் உச்சியில் உள்ள சிலுவையும் அவனைக் கூர்ந்து பார்க்கும். முன்பொரு முறை சுத்தாட்டுக் குளத்தில் ஒரு 'போலீஸ்காரத் தடியன்' ஒரு காரணமும் இல்லாமல் மாத்தனின் கன்னத்தில் ஒரு அடி கொடுத்தான். அன்று முதல் அவனுக்குப் போலீஸ்காரர்களிடம் பயம் பிறந்தது. போலீஸ் காரர்கள் தன்னை எங்கே கண்டாலும், தன் கொழுத்துள்ள கன்னம் அவர்கள் அடிப்பதற்குத்தான் உள்ளது என்ற உறுதியான நம்பிக்கை அவனுக்குப் பிறந்து விட்டது. அதன் பிறகு, போலீஸ் என்று யாராவது சொல்வதைக் கேட்டாலே போதும், மாத்தன் பிணத்தைப்போல் மறைந்து விடுவான்.

அவனுக்குத் தெய்வத்திடம் நம்பிக்கை இல்லாமலில்லை. ஆனால், தெய்வ நம்பிக்கையில்தான் அவனுக்கு மிகவும் பயம். தன்னுடைய குறும்புத் தனங்களையும் திருட்டு நடவடிக் கைகளையும் உற்றுப் பார்த்து, கடுமையான தண்டனையைக் கொடுக்க நேரம் பார்த்துக் கொண்டிருக்கும் கொடூரமான தந்தையைப்போல், அவன் தெய்வத்தையும் பார்க்கிறான். அதனால்தான் தெய்வத்தின் இருப்பிடம் என்று சொல்லப்படும் கோயிலின் சுற்றுப்புறத்திலிருந்தும்கூட மாத்தன் ஒதுங்கி விடுகிறான். மாதாகோயிலை விட கோயிலின்மேல் நடப்பட்டி ருக்கும் சிலுவையிடம்தான் அவனுக்குப் பயம் அதிகம். சிலுவை யைக் காணும்போதெல்லாம், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் உண்டான ஒரு மாபெரும் தியாக உணர்வு ஒன்றும் அவன் நினைவுக்கு வராது. சுடுகாடும் பிணங்களும்தான் உயிர் பெற்று எழுந்து வரும். இறந்தவனின்மேல் குத்திவைக்கப் பட்டிருக்கும் ஓர் உருவமாகத்தான் அவன் சிலுவையைத் தரிசிக்கின்றான்.

போலீஸ்காரர்களின் சிவப்புத் தொப்பி அடிதடிக்கும், கோயிலின் சிலுவை மரணத்திற்குமான சின்னங்களாக, அவன் மனதில் உறுதியாக நிலைத்திருந்தன.

காலக்கிரமத்தில், அவனுக்குச் சிலுவையிடம் உள்ள பயம் ஒரு வகை நீசத்தனமான பகையாகப் பரிணமித்தது. அதனால், அவன் தூரத்தில் நின்றுகொண்டு சிலுவையைப் பார்த்துப் பழிப்புக் காட்டினான். கல்லை எடுத்து அதன்மேல் எறியத் தொடங்கினான்.

ஒரு நாள், மாத்தன் சிலுவையின்மேல் கற்களைப் பொறுக்கி எறியும் போது, ஃபாதர் சள்ளிப்பரப்பன் பின்னாலிருந்து அவனைப் பிடித்துத் தடுத்தார்.

"அட, மகாபாவி! நீ சிலுவ மேலா கல்லை எறியற?" என்று ஃபாதர், மாத்தன் கையிலிருந்த கற்களை பிடுங்கிப் பதற்றத்துடன் அவனை உற்றுப் பார்த்தார்.

"நான் சிலுவ மேல ஒக்காந்திருந்த கழுகத்தானே ஓட்டினேன்!" என்று மாத்தன் கீழுதட்டை மேல்நோக்கி நீட்டி, முகத்தைச் சாய்த்து தூரத்தில் எங்கேயோ பார்த்துக்கொண்டு பதில் கூறினான்.

"கழுகா? -- கழுகு அங்க காணலியே! என்று ஃபாதர் அவனைச் சந்தேகத்துடன் பார்த்தார்.

"நான் தொரத்தன பின்னால் காண முடியுமா?"

ஃபாதரால் பிறகு ஒன்றும் பேசமுடியவில்லை

"நீ எங்கருக்கே? ஒன்ன ஒரு தடவகூட கோயில்ல பாக்கலையே?"

"நான் குளியன் மலயில இருக்கேன்."

"நீ ஏன் கோயிலுக்கு வர்றதில்ல?"

"உடுக்கத் துணியும் போட்டுக்க சட்டையும் இல்ல--"

"ஓஹோ! அப்படின்னா, எங்ககூட வா -- நான் பழைய சட்ட தரேன்."

ஃபாதரும் மாத்தனும் முன்னும் பின்னுமாக நடந்தார்கள்.

"நீ கூலி வேல செய்யறயா இல்ல சொந்தப்பயிரு வெக்கறயா?" நடந்து செல்லும்போதே ஃபாதர் கேட்டார்.

"ஒண்ணும் செய்யாமத்தான் இருக்கேன்".

"ஏன், ஒனக்குச் சொரமா?..."

"ஊஹூம்".

"பின்ன என்னா?"

"வயித்து வலி வந்துட்டா சகிக்க முடியாது."

"எவ்வளவு காலமா இருக்கு?"

"அஞ்சு வருஷமா இருக்கு!"

"நீ தெனந்தோறும் கோயிலுக்கு வந்து பிரார்த்திச்சுக்க. வலி சொகமாயிடும் என்னா?"

பதிலில்லை. ஃபாதர் திரும்பிப் பார்த்தார். மாத்தனுடைய துரும்புகூட அங்கே இல்லை. அவன் வேறு திசையில் திரும்பியோடி மறைந்து விட்டிருந்தான்.

## 32

இரவானால் போதும்; மாதவி கிழக்கேயுள்ள குன்றுச்சரிவை அடிக்கடி பார்த்துக்கொண்டே இருப்பாள்.

அந்தோணியின் குடிசை வெளிச்சம் அவளைக் குழப்பத்தில் ஆழ்த்தும். அந்தச் சிறு தீப ஒளியைச் சில சமயம் புன் முறுவலுடன், சில சமயம் ஏமாற்றத்தின் பெருமூச்சுடனும் மற்றும் சில நேரங்களில் கோபத்தின் உக்கிரத்துடனும் அவள் பார்த்துக் கொண்டிருப்பாள். இருளினூடே நெளிந்து செல்லும் கடைக்கண் பார்வைகளில் ஆசைகள் அலை வீசிக் கொண்டிருந்தன. அதனைத் தொடர்ந்துள்ள சிந்தனைகளின் மகிழ்ச்சியில் உள்ளம் துடித்துக் கொண்டிருந்தது.

ஆனால், அந்த வெளிச்சத்தின் சுற்றுச் சூழ்நிலை, இவைகள் ஒன்றையும் அறிந்திருக்கவில்லை. இருள் சூழ்ந்து சூனியமாகக் கிடக்கும் அந்த மலைச்சரிவில் இனந்தெரியாத எதனுடைய அறிவிப்பையோ தெரிவிப்பதுபோல், அந்த லாந்தர் வெளிச்சம் நிச்சலனமாக நிலை கொண்டிருந்தது.

அந்த விளக்கின் அருகில் உள்ள உருவம், பைபிளைத் தனக்கு முன்னால் விரித்து வைத்துப் படித்துச் சிந்தித்துக் கொண்டிருந்தது.

'பாதிரியின் பரிசுத்த வாழ்வு - அதுதான் என் லட்சியம். கர்தரின் தெய்வீக அறிவிப்பாளனாக, பாவிகளையும், ஏழைகளையும் திருப்திப்படுத்தவும், கெட்ட எண்ணங்களைத் தகர்க்கவும் வழி காட்டும் பிரம்மச்சரிய வாழ்வுக்குள் பிரவேசிக்கூடிய படிகளையும் நான் கண்டுபிடித்துவிட்டேன்......'

அந்த முகம், சிலுவையில் அறையப்பட்ட இயேசுவின் ஓவியத்துக்கு நேராக உயர்ந்தது.

"பாவிகளுக்காக ஜீவஇரத்தம் சிந்திய புண்ணியாத்மாவே! அடியேன், இதோ தங்களின் திருநாமத்தில் வாழ்கிறேன். மனிதர் களின் பாவங்களை முள்கிரீடத்தினால் ஏற்றுக்கொண்ட அந்தத் தியாகச் செய்தியின் சிந்தனாமிர்தத் துளிகளை இந்தச் சிறிய தாசனுக்கும் பகிர்ந்து தாருங்கள்."

அந்த உருவம் கண்களை மூடி, குனிந்து முட்டி போட்டு அமர்ந்து பிரார்த்தித்தது.

மேற்குக் குன்றில் குடியிருக்கும் போதை மிகுந்த ஒரு இளம் இதயத்திலிருந்து வஞ்சக வடிவங்களின் ஈசல்கள் பறந்து வந்து, அந்த வெளிச்சத்தை வளையமாகச் சுற்றிச் சிறகுகளைச் சுருக்கிக்கொண்டு விழுவதைத் தியானத்தில் மூழ்கியுள்ளவனான அந்தச் சிறு முனிவன் அறிவானோ?

அந்தோணி பிரார்த்தனையை முடித்துவிட்டு, மீண்டும் அந்தப் புனித கிரந்தத்தை நிமிர்த்தி விரித்து வைத்துப் படிக்க அரம்பித்தான்.

"உன் பக்கத்து வீட்டுக்காரனின் மனைவியை நீ மோகிக்காதே! உன் பக்கத்து வீட்டுக்காரனின் வீட்டையும், அவனுடைய தோட்டத்தையும் அவனுடைய திராட்சைத் தோட்டத்தையும், அவனுடைய வேலைக்காரனையும், அவனுடைய வேலைக்காரியையும், அவனுடைய காளையையும், அவனுடைய மட்டக் குதிரையையும், அவனுடைய யாதொன்றையும் நீ ஆசைப்படாதே!..."

அந்தப் பாகத்தின் ஒவ்வொரு வார்த்தையையும் உரக்க, நிதானத்துடன் உச்சரித்துத் தலையாட்டிக்கொண்டே மீண்டும் மீண்டும் அவன் படித்தான்; அதே சிந்தனையில் ஆழ்ந்தவனாகத் தலை நிமிர்ந்தான்.

மேற்குக் குன்றின் சரிவில் அப்போதும் அந்த விளக்கு எரிந்து கொண்டிருப்பதை அவன் கண்டான். அது திருவாதிரை நட்சத்திரத்தைப்போல் பிரகாசத் துளியாக இருந்தது.

மாதவி இன்னும் தூங்கவில்லையா?

அந்தத் தீப ஒளி அவனிடம் பல எண்ணங்களையும் உணர்த்தியது. அந்தோணி சிறையிட்டு நிறுத்தும் ஆத்மீகச் சிந்தனைகளை இனந்தெரியாத ஓர் உள்ளத்துடிப்பு சலசலக்க வைக்கின்றது. ஏதோ ஒரு சேற்றுத் தடாகத்தில் கெட்டுப்போன உஷ்ணக் காற்று ஒளிர வைக்கும் சிதறிய தீபம்தான் அங்கே காணும் வெளிச்சமென்றும், அது தன்னை வழி தவற வைத்து, ஆபத்தில் தள்ளி விடுமென்றும் அவனுக்குப் புரிந்தது.

அவன் தலை குனிந்து மீண்டும் படிப்பைத் தொடர்ந்தான்.

எவ்வளவு நேரம் அவன் அவ்வாறு படிப்பில் மூழ்கியிருந்தான் என்று அறிய முடியவில்லை. தலை நிமிர்ந்தபோது மேற்குக் குன்றின் தீக்கண் மங்கி மறைந்து விட்டிருந்தது. நடுநிசிப் பறவைகள் மரக்கிளைகளில் கூக்குரலிட்டுக் கொண்டிருந்தன.

அந்தோணி, தூங்குவதற்கு முன்னால் வழக்கமான கடைசிப் பிரார்த்தனையை முடித்தான். பிறகு, படுக்கையை விரித்துப் படுத்துக்கொண்டு போர்வையால் தன் உடல் முழுவதையும் மூடிக் கொண்டான்.

வழக்கம்போல், விடிவதற்கு மூன்று மணி நேரம் இருக்கும்போதே அவன் தூக்கம் கலைந்து எழுந்து உட்கார்ந்தான்.

விடிவதற்கு முன் உள்ள குளிர்ந்த அமைதியில் இயற்கை மூழ்கி நின்றது. சந்திரன் இன்னும் மறையவில்லை. நிலாவிற்கு மாற்று அதிகரித்ததுபோல் தோன்றியது.

அவன் விளக்கின் திரியை உயர்த்தி, போர்வைக் குள்ளிருந்து முகத்தை மட்டும் வெளியே காட்டி, புத்தகத்தை விரித்துப் படிக்கத் தொடங்கினான்.

சிறிது நேரம் கழிந்ததும் மேற்குக் குன்றிலிருந்து, தண்ணீர் இறைக்கும் போது எழும் கிணற்று இராட்டின உருளையின் சப்தம், குளிர் வீசும் சூழ்நிலையிலும், குழைவாகக் கேட்டது. அவன் கண்கள் அவனை அறியாமலேயே அங்கே பாய்ந்தன. நிழல்கள் மட்டும்தான் தெரிந்தன. அவன் சுற்றுமுற்றும் உற்றுப் பார்த்தான். வராண்டாவில் வளைத்துக்கட்டியுள்ள கொடிக்கம்பில் தொங்கப் போட்டிருக்கும் வெள்ளைத் துணி மேல், முற்றத்திலிருந்து பப்பாளி மர இலைகளின் நிழல்கள் சாத்தானின் உள்ளங்கைப் போல் பதிந்து கிடந்தன...

விடிவெளிச்சம் மெல்ல மெல்லப் பரவிக் கொண்டிருந்தது. கட்டியாகிவிட்ட, நிலைவைப்போலுள்ள மூடுபனி, இளம் நீல நிறத்தில் மலையுச்சியிலிருந்தும் பசுங்காடுகளை மூடிக்கொண்டு கிடந்தது. அந்த மங்கலினூடே மேற்குக் குன்றிலிருந்து ஒரு புகை மூட்டம் ஆகாயத்தில் உயர்ந்தது. மதவி அடுப்பைப் பற்ற வைத்துவிட்டாள்.

அந்த மங்கல் மெல்ல நீங்கத் தொடங்கியது. மேற்குக் குன்றின் சரிவில், ஒரு மூங்கில் புதரின் மேல்பாகம் மயில் தோகையைப் போல் தெளிவாக நின்றது. அதனருகில், அந்தப் புல் வேய்ந்த மாளிகை வீடும் இருந்தது. அவைகளுக்கு இடையே தெளிவான புகை மூட்டம் உயர்ந்து கொண்டிருந்தது.

அந்தோணி, விடியற்காலைக் கனவைப்போல் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

வெளியில் காடுகளும் வயல்களும் எல்லாம் ஒரு கண்ணாடியின் பிரதிபலிக்கும் காட்சியைப்போல் தெளிந்து வந்தன.

அந்த வயல் வரப்புகளினிடையே ஒரு வெள்ளை உருவம் அந்தோணியின் குடிசைக்கு நேரே வருவதை அவன் கண்டான். அவன் கண்கள் மலர்ந்தன. மாதவியல்லவோ வருகிறாள்!

மாதவி குன்றில் ஏறத் தொடங்கினாள். அவள் முற்றத்தில் வந்து நின்றாள். கையில் ஒரு கூஜா இருந்தது. அதில் பால் இருக்கும்.

தும்பைப் பூவைப்போல் புன்னகை புரிந்து கொண்டு அவள் அந்தோணியை நோக்கினாள்.

"பால் வேணாமா சார்?" - அந்தோணியின் பாஷையை அனுசரித்து அவள் கேட்டாள்.

அந்தோணி கௌரவமாக உட்கார்ந்திருந்தான்.

"பால, அடுப்புல இருக்கிற அலுமினியப் பாத்திரத்துல ஊத்திடு". அவன் பைபிளின் தாள்களைத் திருப்பிக்கொண்டு தாழ்ந்த குரலில் கூறினான்.

மாதவி அடுக்களைக்குச் சென்றாள். அங்கே சட்டிகளும் கலயங்களும் எல்லாம் தாறுமாறாகக் கிடந்தன. அவள் ஒரு கலயத்தின் மூடியைத் திறந்து பார்த்தாள். பழைய கஞ்சி இருந்தது. மற்றொன்றில் வெந்த மரவள்ளிக்கிழங்கின் மிஞ்சியவைகள் ஒட்டிக்கொண்டிருந்தன.

அவள் பாத்திரங்களையெல்லாம் அடுக்கி வைத்துவிட்டு, சில பாத்திரங்களைக் கழுவி, அறையை பெருக்கிச் சுத்தம் செய்து, அடுப்பில் தீமூட்டிப் பாலைக் காய்ச்சத் தொடங்கினாள்.

அந்தோணி கூச்சத்துடன், இடையிடையே அடுக்களைக்குக் கண்களை அனுப்பியவாறு வராண்டாவிலேயே உட்கார்ந்து இருந்தான்.

அடுக்களை வேலையையெல்லாம் சரி செய்துவிட்டுக் கூஜாவை எடுத்துக்கொண்டு வெளியே சென்றாள் மாதவி. அந்தோணி நன்றி உடன் அவளைப் பார்த்தான்; அவ்வளவுதான். அவன் ஏதாவது பேசலாமென்று அவள் நினைத்தாள். ஆனால், அவன் ஒன்றும் பேசாமல் மண்டுவைப்போல் அப்படியே உட்கார்ந்திருந்தான்.

அவள் முற்றத்தில் இறங்கியபோது, அந்தோணி அவளை அழைத்தான். அவள் திரும்பி நின்றாள்.

"மாதவி, நீ நாளையிலேந்து பால் கொண்டாரவேணாம்."

அந்தோணி கீழே பார்த்துக்கொண்டே சிறிது இடறலுடன் கூறினான்.

"நான் கொண்டார வேணாமா, இல்ல பால் வேணாமா என்ன சொல்ற?"

மாதவி அவனுக்கு நேரே தலையைச் சாய்த்துப் பார்த்துக் கொண்டு கேட்டாள்.

என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் அந்தோணி விழித்துக்கொண்டிருந்தான். அந்தோணி யோசித்துக் கூறும் பதிலைக் கேட்கக் காத்துக் கொண்டிருக்காமல் மாதவி நடந்தாள்.

திடீரென அவள் பார்வை முற்றத்திலிருந்து பப்பாளி மரத்தின் உச்சியில் பதிந்தது. அதன்மேல் உட்கார்ந்திருந்த ஒரு மலைக்காகம், பழுக்க ஆரம்பித்த பப்பாளிக் காயை வேகமாகக் கொத்திக்கொண்டிருந்தது. அவள் கூஜாவைக் கீழே வைத்துவிட்டு, நான்கு புறமும் திரும்பித் திரும்பிப் பார்த்தாள். ஒரு நீண்ட மூங்கில் கழி தோட்டத்தில் கிடப்பதைப்பார்த்து விட்டு, அதைக் கையில் எடுத்து மரத்தின் உச்சிக்கு உயர்த்தினாள். காகம் பறந்துவிட்டது. அவள் பழத்தைக் குத்தி கீழே விழவைத்து, அதைக் குனிந்து கையில் எடுத்துக்கொண்டு அந்தோணியின் அருகே நகர்ந்தாள்.

அந்தோணி அவள் இருப்பை அறியாத பாவனையில், கால் முட்டிகளில் முகத்தைப் புதைத்துக்கொண்டு பேசாமல் இருந்தான்.

"அந்தோணி, கத்தியிருக்கா?" அவள் உரத்த குரலில் கேட்டாள். அந்தோணி பேசவில்லை.

அந்தோணியின் கட்டிலுக்குக் கீழே ஒரு வேட்டைக்கத்தி கிடந்தது. அவள் அதை எடுத்துப் பப்பாளிப் பழத்தின் தோலைச் செதுக்கி, பழத்தை நறுக்கி, ஒரு துண்டை வாயில் போட்டு ருசி பார்த்தாள்.

"காக்கா கொத்திய பழத்துக்கு நல்லா ருசி இருக்கு!" அவள் பழத்தை கடித்து மென்றுகொண்டே சொன்னாள். அவள் மற்றொரு துண்டைச் செதுக்கி, அந்தோணியின் முகத்துக்கு நேரே நீட்டினாள்.

"எனக்கு வேணாம்" என்று சொல்ல அந்தோணி முயன்றான். என்றாலும் அவன் அதைச் சொல்லவில்லை. அதைச் சொல்ல நாக்கு எழும்பவில்லை. அவன் அந்தப் பழத்துண்டைக் கையில் வாங்கித் தன் அருகே வைத்தான்.

மாதவி மேலும் ஒரு துண்டைத் தன் வாயில் போட்டுக் கொண்டாள்.

"முத்தத்துல கெடக்குற பழத்தைக் காக்கா கொத்தித் தின்னாலும், ஒனக்கு வேணாமா அந்தோணி?"

அந்தோணி ஒன்றும் பேசவில்லை.

"ஏன் திங்கல பழத்த? அது ஒதுக்கப்பட்ட பழமாவா இருக்குது?" அவள் ஓர் அர்த்தமற்ற சிரிப்பைச் சிரித்தாள்.

அந்தச் சிரிப்பு அந்தோணிக்குக் கோபத்தை உண்டாக்கியது. அது ஒரு விபச்சாரியின் சிரிப்பு.

மாதவியின் முகத்தைப் பார்க்க அவன் துணியவில்லை. அந்தக் கண்கள்! அவைகளில் அவனை மயக்குகிற விஷம் உண்டு.

அவன் தைரியமில்லாதவன். அவன் மனதின் மண் மதில்களை அரித்துக் கீழே விழ வைக்கும் அலைகள் அந்தச் சிரிப்பில் உயர்ந்து வந்தன. மாதவியின் சிரிப்பில் பாப அழைப்புகளின் கொடிகள் பறந்து விளையாடுகின்றன. எச்சரிக்கையாக இருக்கவேண்டும். அவன் நாளைய பாதிரி.

"சரி புண்ணியாத்மாவே, அப்புறம் பாக்கலாம்——" அவள் கூஜாவைக் கையில் எடுத்துக்கொண்டு நடந்தாள்.

"ஐயோ பாம்பு!" என்று சத்தம் போட்டு அவள் அங்கே சட்டென்று நின்றாள். ஒரு கொம்பேறி மூக்கன் பாம்பு பப்பாளி மரத்தின் வேர் வழியாக இழைந்து போய்க்கொண்டிருந்தது.

அன்று மாலை மயங்கிற்று.

கிருஷ்ணன் நம்பியார் கிழக்கத்தியக் காடுகளுக்கு போயிருந் தார். நான்கு நாட்கள் கழிந்தபின்தான் அவர் திரும்பி வருவார். மாதவியின் மாமி சாப்பிட்டுவிட்டுத் தூங்குவதற்குப் படுத்து விட்டாள். மாதவியும் தன் அறைக்குள் நுழைந்து கொண்டாள்.

கிழக்குக் குன்றிலுள்ள விளக்கு பிரகாசித்தது. மாதவி ஜன்னல் வழியாக அங்கே பார்த்தாள். ஏகாந்தமான ஒரு நட்சித்திரத்தைப் போல் அந்தோணியின் விளக்கொளி மின்னிக்கொண்டிருந்தது.

மாதவி மெல்ல அறையிலிருந்து வெளியே வந்து வாசல் கதவைப் பத்திரமாக அடைத்துவிட்டு முற்றத்தில் இறங்கி, அங்கேயே சிறிது நேரம் சந்தேகத்துடன் நின்றாள். பிறகு அவள் மெல்லப் படிக்கட்டில் இறங்கி, வயல் வழியாகக் கிழக்குக் குன்றைக் குறி வைத்து நடந்தாள்.

வயலைக் கடந்து அந்தக் காட்டின் ஒரு எல்லையை அவள் அடைந்தாள். திடீரென ஒரு குரங்கின் கூக்குரலைக் கேட்டு அவள் நாலாபுறமும் நோக்கினாள். காட்டினுள்ளே ஒரு மரத்தின் உச்சியிலிருந்து இரண்டு குரங்குகள் தொடர்ந்தாற்போல் கிறீச்சிட்டுக் கொண்டே தாவித்தாவி ஓடிக்கொண்டிருந்தன.

அவள் திக்பிரமையுடன் அங்கேயே சிறிதுநேரம் தைரியமாக நின்றாள். அடுத்த புதரில் எங்கேயே நரியின் நடமாட்டம் உள்ள தென்று அவளுக்குப் புரிந்து விட்டது. நரியின் நடமாட்டத்தைக் கண்டு கொண்டால்தான், குரங்குகள் இரவில் அவ்வாறு கிறீச் சிட்டுக் கலாட்டா செய்யும். தன் கூட்டாளிகளுக்கு நரியினால் வரும் ஆபத்தைப்பற்றி முன்னெச்சரிக்கை கொடுத்தும், நரியின்

போக்கை லட்சியமாக்கியும் மரக்கிளைகளின் வழியாக அந்த விரோதியைப் பின்தொடர்ந்தும் குரங்குகள் கிறீச்சிட்டுத் தாவிக் கொண்டே இருக்கும்.

மாதவி திகைத்து நின்று விட்டாள். சுற்றிலும், இருளும் மரக்கூட்டங்களும் கவிந்திருந்தன. ஆகாயம் மழை மேகத்தால் மூடப்பட்டிருந்தது.

அவள் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு முன்னால் நடந்தாள். குரங்குகளின் கத்தல்கள் காட்டிலுள்ளே, இவளை விட்டு விலகி விலகிச்சென்றன. அவள் காட்டின் மறுபக்கத்தில் உள்ள சிறிய வெட்ட வெளியை அடைந்தாள். அந்தோணியின் குடிசையில் எரியும் விளக்கு, ஒரு பெரிய நட்சத்திரத்தைப்போல் தெளிவாகத் தெரிந்தது. அந்த மண் விளக்கு உலகம் முழுவதுக்கும் பிரகாசிப்பதாக அவளுக்குத் தோன்றியது. அந்தப் பிரகாசம்? - அதுதான் அவள் லட்சியம்! அவள் காட்டைக் கடந்து எப்படியோ அந்தோணி பயிரிடும் நிலத்தை அடைந்து விட்டாள். கிழங்குச் செடிகளின் கிளைகளில் கால் இடறியபோதுதான் அவளுக்கு ஆசுவாசமாயிற்று.

அவள் மெதுவாக குன்றிலேறி, அந்தோணியின் குடிசை முற்றத்திலிருந்த அந்த மரத்தின் மறைவில் மறைந்து நின்றாள்.

அந்தோணி கயிற்றுக்கட்டிலில் குனிந்து உட்கார்ந்துகொண்டு பைபிளை விரித்து வைத்து உரத்துப் படித்துக் கொண்டிருந்தான்.

"....தெய்வமான கர்த்தர் ஆதாமை அழைத்து அவனிடம் "நீ எங்கே இருக்கின்றாய் ஆதாம்?" என்று கேட்டருளினார்.

"ஆதாம் சொன்னாள்: தோட்டத்தில் நான் உங்க குரலைக் கேட்டேன். ஆனால், நான் நிர்வாணமாக இருந்ததால் மறைந்து கொண்டேன்".

"கர்த்தர் அவனுக்கு அருளினார்: நீ நிர்வாணமானவனென்று உன்னிடம் தெரிவித்தது யார்? சாப்பிடாதே என்று நான் உன்னிடம் கட்டளையிட்டிருந்த மரத்திலிருந்துதான் நீ பழம் புசித்திருக்கிறாய்".

"அதற்கு ஆதாம் சொன்னான்: தாங்கள் என்னிடம் இருப்பதற்காக அனுப்பிய பெண்தான் அந்த மரத்திலிருந்து பறித்து எனக்குக் கொடுத்தாள். நான் அதைப் புசிக்கவும் செய்தேன்'.

அந்தோணி அந்த வாக்கியத்தின் இறுதி பாகத்தைச் சுட்டு விரலால் அழுத்திக் கொண்டு, தலையை நிமிர்த்தி என்னவோ ஆலோசித்தான்.

அன்று காலையில் நடந்த நிகழ்ச்சிகளையெல்லாம் அவன் தெளிவாக நினைத்துப் பார்த்தான். அவனுடைய ஆதன் தோட்டத்தில் ஊர்ந்து வந்த பாம்பு! அந்த ஏவாள் அவனுக்குக் கொடுத்த பழம்! அவன் அதை புசிக்கவும் செய்தான். ஒதுக்கப் பட்ட பழம் என்பது அவனுடைய முறையீடு! பைபிளில் சொல்லி யிருப்பதைப் போல் எல்லாமே ஒத்து வந்திருக்கின்றன. என்னவோ நிகழப்போகிறது! அகாரணமான பயம் அவன் மனதை நடுங்க வைத்தது, சிந்தனைகளை இருட்டடித்தது. அவன் முற்றத்தைக் கூர்ந்து நோக்கினான்.

அத்தி மரத்தின் மறைவில் யாரோ நிற்கின்றார்கள். சாத்தானாக இருக்குமோ?

"யாரது?" - அந்தோணி விளக்கத் தூக்கிப் பிடித்துக்கொண்டு உரக்கக் கேட்டான்.

"நான்தான்; ஒங்ககூட இருக்க வந்த பொண்ணு."

மாதவி கள்ளச்சிரிப்பு சிரித்தவாறு, மரத்தின் மறைவிலிருந்து முற்றத்திற்கு வந்து நின்றாள்.

"யாரு, மாதவியா?" அந்தோணி அலமலர்ந்தான். அவனால் நம்பமுடியவில்லை.

"இப்ப ஏன் நீ இங்க வந்தே?" அவன் கோபத்துடன் கேட்டான்.

மாதவி பதிலொன்றும் கூறாமல், மெதுவாக வராண்டாவிற்கு ஏறி வந்து, அந்தோணியின் அருகில் கட்டிலின் மேல் உறுதியுடன் உட்கார்ந்து கொண்டாள்.

அந்தோணி மிகவும் சங்கடப்பட்டான். அவனுக்குப் பிரார்த் திக்க வேண்டுமென்று தோன்றிற்று.

சிறிதுநேரம் கழிந்ததும், அவன் பைபிளை எடுத்துத் திரும்பவும் படிக்கத் தொடங்கினான். மாதவியின் நடவடிக்கை அவனுடைய ஒருமிப்பு உணர்வை அசைத்தது. இனந்தெரியாத ஓர் அசௌக்கியம்!--அவன் ஒரு பக்கம் முழுக்கப் படித்தான். ஆனால், ஒரு வார்த்தையின் பொருள்கூட நினைவில் பதியவில்லை. மாதவி ஒரு பனிமலையைப்போல் எல்லாவற்றையும் மூடினாள். அவன் பைபிளில் உள்ள சில காட்சிகளை மனதில் உருவகப்படுத்தச் சிரமப்பட்டான். ஆதிமனிதனின் ஆதன் தோட்டம்... தன் சொந்த தோட்டமும், பப்பாளி மரமும், கொம்பேறிமூக்கன் பாம்பும், மாதவியும் நிறைந்த ஓவியமாகத்தான் அது பரிணமித்தது.

அவனுடைய கற்பனா சக்தியை ஏதோ ஒன்று நெருக்கிக் கொண்டிருக்கிறது.

அவனுடைய புது இளமை - ஆண்மை - படைப்பின் வெகுதூர நினைவுகளைத்தான் அசைபோடுகிறது என்பது அவனுக்குத் தெரியவில்லை. அந்த எதிர் நடவடிக்கைகளின் ஒளிமாற்றம்தான் அவனுடைய சிந்தனை நரம்புகளை நடுங்க வைக்கின்றது என்பதை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை.

அவன் தன் தலையைச் சொறிந்து கொண்டு தூரத்திலுள்ள காட்டை உற்று நோக்கினான். பிறகு சட்டென்று பைத்தியம் போன்று தன் முகத்தைத் திருப்பி மாதவியைப் பார்த்து."நீ இங்கேர்ந்து ஒடனே போயிடு" என்று கர்ஜித்தான்.

அந்தக் குரல், தன் சொந்த உறுதியைத் தெரியப்படுத்தாமல், கேவலம், இதய பலவீனத்தைத்தான் வெளிப்படுத்தியது.

மாதவி அசையவில்லை. அவள் புன்னகை புரிந்துகொண்டே, "நான் ஒன்ன ஏதாச்சும் செஞ்சேனா, அந்தோணி? அசையாம, பேசாமத்தானே நான் இங்க இருக்கேன்? பின்ன, ஏன் என்னை இப்படி அதட்டி ஓட்டற?"

"நீ போ....நான் படுத்துத் தூங்கனும்" அவன் பிடிவாதக்காரக் குழந்தையைப்போல் முகத்தைச் சாய்த்து, உதடுகளைக் குவித்தவாறு சொன்னான்.

"ஏன், என்னைப் பார்த்தால் ஒனக்குத் தூக்கம் வரலியா?"

"இதோ பாரு மாதவி, இந்த மாதிரில்லாம் கீழ்த்தரமாப் பேசாதே. நீ ராத்திரியில இங்க வர வேணாம் -- இல்ல இல்ல - நீ இங்க எப்பவுமே வர வேணாம்".

மாதவியின் முகம் மங்கியது. கண்கள் கருத்தன. அவள் அவனைக் கோபமாகப் பார்த்தாள்...... பிறகு, எதுவும் சொல்லாமல் இங்கிருந்து அவள் எழுந்து முற்றத்தில் இறங்கி நடந்தாள்.

அந்தோணி ஆசுவாசமாக ஒரு பெருமூச்சு விட்டான். கர்த்தர் தன்னைச் சோதித்திருக்கிறார். அந்தப் பரீட்சையில் தான் தேறிவிட்டோம் என்றும், சாத்தானின் பிடியிலிருந்து தான் காப்பாற்றப்பட்டு விட்டோம் என்றும் நினைத்துக்கொண்டான்.

அவனுக்குப் பிரார்த்திக்க வேண்டுமென்றும் தோன்றியது.

என்றாலும்...என்றாலும்....அவன் நரம்பு மண்டலங்களில் ஏறி இருந்த இளஞ்சூடு இன்னும் அடங்கவில்லை. என்னவோ கை நழுவிப் போனதுபோல் ஓர் ஏமாற்றம் அவன் இதயத்தின் இனந் தெரியாத ஓர் அறையில் கிடந்து எரிந்து கொண்டிருந்தது. ஜென்ம ஜென்மாந்தரத்துக்கும் அப்பாலிருந்து ஓர் அழைப்பு-படைப்பின் ரகசியமான மதுர கானம்-அவன் காதுகளுக்குள்ளேயிருந்து

முழங்கியது.— அவன் குழம்பிய சிந்தனையுடன் வெளியே உற்றுப்பார்தான்.

திடீரென ஆகாயத்தில் ஒரு மாற்றம் உண்டாயிற்று. சூழ்நிலையில் ஒரு மலர்ச்சி ஏற்பட்டது.

ஆகாயம், தன் மின்னல் கரங்களை நீட்டி, மலர்ந்து கிடக்கும் மண்ணைத் தடவிப்பார்த்தது. அந்த மின்னல் ஒளியின் புணர்ச்சியில் மலைகளும் பெண்மைகளும் நிர்வாணமாகக் காணப்பட்டன.

ஆகாயம், விகாரப் போராட்டத்தினால் தாழ்ந்துவந்தது.

ஆகாயத்தின் பெருமூச்சுக்கள் இரைப்புகளாக மாறுகின்றன. எங்கும் சலனங்கள்! சலனங்கள்! வானமும் பூமியும் ஒன்றாயின. அத்துடன் மழையும் சொரிந்தது....

பயங்கர மழை!

அந்தோணி அந்த இயற்கையின் திருவிளையாடல்களை நோக்கியவாறு சலனமற்று உட்கார்ந்திருந்தான்.

சிறிது நேரம் சென்றதும், வராண்டாவிலிருந்து ஒரு முனகல் ஒலிகேட்டு அவன் திரும்பிப் பார்த்தான்.

மீண்டும் மாதவியா?

அவள் மழையில் தொப்பலாக நனைந்து திரும்பி வந்து புகுந்திருக்கின்றாள். குளிரால் நடுங்கியவாறு, கைகளை மார்போடு சேர்த்தணைத்து அமைதியாக நின்று கொண்டிருந்தாள்.

அவன் அவளை உற்றுப்பார்த்தான். ஆகக்கூடி, நனைந்து ஒட்டிக்கொண்ட ஒரு கொடித் துணியைப்போல் அவள் ஆகியிருந்தாள். தலைமுடியிலிருந்தும் ஆடைகளிலிருந்தும் தண்ணீர்த் துளிகள் சொட்டுச்சொட்டாக வடிந்தன. மார்பில் உள்ள ரவிக்கை நனைந்து ஒட்டிக்கொண்டதால் உருண்டு குவிந்திருந்த மார்பகங்கள் சிறுத்திருந்தன.

அவன் அவளை அவ்வாறு நோக்கிக் கொண்டிருக்கும்போதே, அவள் மெல்லத் தன் ரவிக்கையைக் கழற்றிக் கட்டிலின்மேல் வைத்தாள். பிறகு, தன் இடையில் உடுத்திருந்த முண்டின் கீழ்பாகத்தையும் தூக்கிப் பிடித்துப் பிழிந்தாள்.

அந்தோணி எல்லாவற்றையும் மறந்து விழித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அவள், ஒரு நிழலைப்போன்று நிர்வாணமாக நின்று கொண்டிருந்தாள். அதனால், அவளை அவன் தீப் பொறியைப் போல் ஒரு முறை நோக்கினான்.

அவள் அங்கேயே அதேபோல் நின்று கொண்டிருந்தாள். இடி மின்னலின் திடீர் வெளிச்சத்தில் புலப்படும் புகைழப் போல், ஒரேயொரு கண் இமைக்கும் நேரத்தில் இனந்தெரியாத ஒரு பிரபஞ்சம் முழுவதையும் அவன் தரிசித்தான்.

தனிமையின் கயிறுகள் இருவரையும் சேர்த்துக்கட்டுகின்றன. தூவானத்தால் எழுந்த குளிர்காற்று இருவரையும் இணைக்கின்றது. பேய்மழையின் பேரிரைச்சல் இருவரின் காதுகளையும் செவிடாக்குகின்றது. படைப்பின் ஆரம்பக்கட்டத்துக்கும் அதற்கும் அப்பாலுள்ள ஓர் அவஸ்தைக்கும் இடையே அந்தோணியின் உள்மனம் ஒன்று வெளியே எட்டிப்பார்த்தது. ..அந்த அவஸ்தையில் மூழ்கிப்போன உணர்வு, மீண்டும் உண்மை நிலையின் ஓரத்துக்கு உயர்ந்து வந்தது. செங்குத்தான ஒரு பாறையின் பக்கத்தில் தான் உட்கார்ந்திருப்பதாகவும், அன்று மட்டும் இணங்கிவிட்டால், இனந்தெரியாத ஒரு பூமிப்பிளவில் தான் விழுந்துவிடுவதாகவும், உள்ளார்ந்த ஒரு பயம் அவனை வளயமிட்டது. அதுவரையில் அவனுள் உறங்கிக்கிடந்த எரிமலை முழங்கத் தொடங்கியது. நரம்பு மண்டலங்கள் அசைந்து விரிய ஆரம்பித்தன. உஷ்ணமுள்ள புகை மூட்டத்தில் அவன் கண்கள் குருடாகிவிட்டன. காமத்தின் கரும் புகையில் விஞ்ஞானமும், விவேகமும், வேதாந்த சிந்தனையும், ஆதிரிசப் பலமும் எல்லாம் அந்தப் பட்டாச்சுக்கட்டின் புகையில் - மூடிப்போய் விடுகின்றன. இவைகள் எல்லாம் இயற்கையின் விரோதமற்ற ஊக்கங்களாகும். இவைகள் அணுவின் அழிவுச் சக்தியைவிட பதினாயிரம் மடங்கு பிரபலமான கூட்டுத் தயாரிப்புக்களாகும். .....உஷ்ணத்தின் ஓர் உருகுதல் இல்லாமல் அந்த ஒலியோசை மிகுந்த எரிமலை அடங்காது......

அவன் தோளில் ஒரு குளிர்ந்த ஸ்பரிசமும், முகத்தில் சூடான சுவாசமும் பதிந்தன.

"குளிருது--குளிருது-...." அவள் அவன் காதுகளில் முணுமுணுத்தாள். அவள் அவனுடைய கழுத்தைக் கட்டிப்பிடித்து, அவனுடைய துடிக்கும் மார்பின் மேல் சாய்ந்தகொண்டாள்.

அந்தோணியின் கால்கள் இடறுகின்றன. அவன் அந்தப் பாறையிலிருந்து தன்னையறியாமலேயே வழுக்கிக்கொண்டிருந்தான். இனந்தெரியாத ஆழத்திற்கு--கால காலங்களுக்கும் பின்னால் உள்ள சூன்யத்தின் மெய் சிலிர்க்கும் பிரளயத்திற்கு, இந்த மாபெரும் உலகம்கூடப் புகைபோல் மறைந்துபோகும்

அற்புதகரமான மறதிக்கு — எல்லையற்ற மகிழ்ச்சிக்கு -- ஜீவிதப் பரம்பரைகளின் கனத்தினால், உதவியற்றவனாக அவள் இடுப்பைக் கட்டி அணைத்துக்கொண்டு அவன் சரிந்து விழுந்தான்.

எல்லாம் முடிந்துவிட்டது. தொட்டால் உடைந்து விழுந்துவிடும் சாம்பல் கட்டியைப்போல், வெளுத்துச் சலனமில்லாமல் அவன் விழித்துக்கொண்டும் உட்கார்ந்திருந்தான். மாதவி, அவன் கட்டிலின்மேல் சுகமாகத் தூங்கிக்கொண்டிருந்தாள். அவனுடைய பைபிள் புத்தகம், அவளுடைய காலடியில், தாள்கள் கசங்கித் தாறுமாறாகக் கிடந்தது. அதைக் கைநீட்டி எடுப்பதற்குக்கூட அவனுக்குப் பயமாக இருந்தது.

தன்னுடைய ஒவ்வொரு மயிர்க்கண்களும் அழுக்காகி விட்டன. தன் இரத்தக் குழாய்களில், ஆற்றில் ஓடும் அழுக்கு நீர்தான் ஓடுகின்றது.

அவன் அவளை மீண்டுமொருமுறை பார்த்தான். அந்த நிர்வாணம் அவனை வெறுப்படையச் செய்தது. அவனிடம் விஷத்தைப் புகுத்திவிட்டு மயங்கிக்கிடக்கும் அந்த இரத்த விரியன் பாம்பைப் பார்க்குந்தோறும் அவனுக்குப் பயம் தோன்றியது. கர்த்தரை அழைத்துப் பிரார்த்திக்கக்கூட நினைவில்லாமல், தான் முற்றிலும் நாசமாகிவிட்டோம் என்ற உணர்வுடன் அவன் உதவியற்றவனாகக் குலுங்கி குலுங்கி அழுதான்.

## 33

மரியம் பாயில் படுத்துக் கொண்டு துள்ளினாள். அவளுக்கு மலைஜூரம் (மலேரியா) நன்றாக முற்றியிருந்தது. அவளால் குளிரையும் நடுக்கத்தையும் சகித்துக்கொள்ள முடியவில்லை. அவளின் எலும்புகளுக்குள் இருக்கும் கொழுப்புகூட, குளிர்ந்து உறைந்து விட்டதுபோல் தோன்றிற்று. காற்றில் அலையும் டெலக்ராப் கம்பிகளைப்போல் அவளுடைய நரம்பு மண்டலம் நடுங்கி அலைமோதிக்கொண்டிருந்தது.

"என்னப் புடிச்சி அமுக்கு—ஹூ—ஹூ— என்ன நெரிச்சிக் கொன்னுடு—" மரியம் மேல் மூச்சு கீழ்மூச்சு வாங்க நடுக்கும் குரலில் அலறினாள்.

மாத்தன் மரியத்தின் ஜூர பராக்கிரமங்களை முகத்தைச் சாய்த்துப் பார்த்துக்கொண்டு, கொஞ்ச தூரத்திலேயே நின்று கொண்டிருந்தான்.

"என்னக் கொஞ்சம் அமுக்கிவுடேன்!" மரியம் மாத்தனைப் பார்த்துக் கண்களை உருட்டிக் கர்ஜித்தாள்.

மாத்தன் மெதுவாக அவளிடம் வந்து ஓர் அனுசரணையுள்ள குழந்தையைப்போல் முட்டிபோட்டு உட்கார்ந்துகொண்டு, அவளுடைய தடித்த உடலை அங்கங்கே அமுக்கிப் பிடித்து விட்டான்.

மாத்தன் பிடித்து விட்டுக்கொண்டிருக்கும் போதும், மரியம் துள்ளிக்கொண்டுதான் இருந்தாள். அவள் நெஞ்சில் ஒரு நீராவி இயந்திரம் ஓடிக்கொண்டிருக்கிறதோ என்று தோன்றியது.

"என்னக் கட்டிப்பிடிச்சி அமுக்கி வுடு!" மரியம் திமிறிக்கொண்டே கூறினாள்.

மாத்தன் பாயில் படுத்துக்கொண்டு, அவளுடைய எலும்புகள் நொறுங்குவதைப்போல் அவளைக் கட்டிப் பிடித்தான். என்றாலும், அவளுடைய குலுக்கல்கள் நிற்கவில்லை. அவள் கைகால்களை அங்குமிங்கும் தூக்கிப்போட்டு அர்த்தமில்லாமல் புலம்பத் தொடங்கினாள்.

சிறிது நேரம் சென்றதும் அவளுக்கு ஆசுவாசம் தோன்றியது. உடல் முழுவதும் வியர்த்திருந்தது. பிரமிக்கத்தக்க உஷ்ணமும் இருந்தது.

"தெடி....மேரிக்குட்டி......சுடுதண்ணீ கொடுடி"... அவள் தளர்ந்த குரலில் மகளை அழைத்தாள்.

"சுடு தண்ணீ வச்சதெல்லாம் தீர்ந்துட்டுதும்மா" என்று மேரிக்குட்டி, கஞ்சிக் கலயத்தின் மூடியைத் திறந்து பார்த்துச் சொன்னாள்.

"தெடீ... தவளையைப் போல பார்த்துகிட்டு நிக்கிறியாடி? அட-மண்டு..... ஒரு கொடம் தண்ணியச் சூடாக்குடி சீக்கிரம்.....நான் இப்பவே செத்துடுவேண்டி!"

மேரிக்குட்டி அடுப்பைப் பற்ற வைத்தாள்.

மரியம் களைப்புடன் சிறிதுநேரம் கண்களை மூடிப் படுத்திருந்தாள். பிறகு கண்களைத் திறந்து ஒரு விசனத்துடன் அருகில் உள்ளதையெல்லாம் ஒருமுறை பார்த்தாள். மாத்தன் அப்போதும் அவள் அருகில் படுத்துக்கொண்டு அவளை அமுக்கிப் பிடித்துவிட்டுக்கொண்டுதான் இருந்தான்.

"எட்டப்போ!" மரியம் மாத்தனைத் தள்ளி விட்டாள். மெல்ல எழுந்து உட்கார்ந்தாள். சிதறிக் கிடந்த தலைமுடியை வாரிக்கட்டினாள். முகத்திலும், மார்பகங்களிலும், இடையிலும்

ஒழுகிக்கொண்டிருந்த வியர்வையைக் கையால் அழுந்தத் துடைத்தாள். பாயில் கையை ஊன்றி, சுருங்கி மயங்கிய விழிகளுடன் சாய்ந்து சோர்ந்து உட்கார்ந்து விட்டாள்.

மேரிக்குட்டி ஒரு கலயம் நிறையக் கொதிக்கும் தண்ணீரை மரியத்தின் முன்னாள் கொண்டு வந்து வைத்தாள். மரியம் ஒரு சிறு மண் சட்டியில் சுடுதண்ணிரை ஊற்றிக் குடிக்கத் தொடங்கினாள். பிறகு, சில கொய்னா மாத்திரைகளையும் விழுங்கினாள். சட்டி நிறைய மூன்று முறைகள் சுடு தண்ணீர் குடித்தும் உஷ்ணம் தணிய வில்லை. அவள் மீண்டும் தண்ணீரை உற்றிக் குடித்துக்கொண்டே இருந்தாள்.

மறுநாள் காலையிலேயே மரியத்தின் ஜுரமெல்லாம் விட்டு விட்டது. வழக்கத்தைவிட அதிகமாகவே கஞ்சியையும் மரவள்ளிக் கிழங்கையும் உள்ளே தள்ளி, மண்வெட்டியைத் தோளில் சுமந்து கொண்டு மலைக்குப் புறப்பட்டு விட்டாள்.

## 34

மலையில் வேலை செய்து கொண்டிருக்கும்போதே, குரியனின் காலில் ஒரு காட்டுக் கருங்காணி குத்தியது. அவன் கருங்காணியைக் கல்லினால் நசுக்கிக் கொன்று விட்டாலும், காலிலுள்ள கொடைச்சல் கூடிக்கொண்டே வந்தது. வேலை போதுமென்று நிறுத்திவிட்டு குடிசைக்குத் திரும்ப அவன் தீர்மானித்தான்.

வேதனையைச் சகிக்க முடியாமல், பற்களைக் கடித்துக்கொண்டு குரியன் மலையின் மறுபக்கத்தில் உள்ள தன்னுடைய குடிசைக்கு ஏறிச்சென்றான்.

குடிசை அமைதியாக இருந்தது. ஓலைக்கதவு அடைக்கப் பட்டிருந்தது..

அவன் குழந்தை வராண்டாவில், ஒரு தடுக்கில் படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தது. அவன் மனைவி சாராம்மையை அங்கே எங்கும் காணவில்லை.

வராண்டாவிற்கு ஏறியபோது, குடிசையின் உள்ளே இருந்து பன்றி உறுமுவதைப்போல் - பயம் தோன்றச்செய்யும் - ஓர் ஆண்குரல் கேட்டது. குரியன் சந்தேகத்துடன் பதுங்கிச் சென்று பனையோலைச் சந்து வழியாக ஓசை எழுப்பாமல் உள்ளே எட்டிப்பார்த்தான்.

குரியனுக்குத் தன் கண்களையே நம்ப முடியவில்லை. சாராம்மா முக்கால் நிர்வாணத்துடன் ஒரு தாழம்பாயில் ஒருக்களித்துப்

படுத்திருந்தாள். சாராம்மையை அணைத்துக்கொண்டு ஓர் ஆணும் அவளருகில் படுத்திருந்தான். அந்த ஆணின் அசாதாரணமான தொனியிலுள்ள குறட்டை ஒலிதான் பன்றியின் உறுமலைப்போல் கேட்கின்றது.

அந்த ஆணின் முகத்தைக் சூரியன் தெளிவாகக் கண்டான். தென்னம் துடைப்பத்தைப்போல் உள்ள பெரிய மீசையையும், இரும்புக் கடப்பாறையைப்போல் உள்ள மூக்கையும், மின்னும் வழுக்கைத் தலையையும் கண்ட போதுதான், சூரியனுக்கு அவன் யாரென்று புரிந்தது. டீக்கடைக்காரன் சாக்கோச்சன்தான் அவன்.

தன் மனைவியை அணைத்துக்கொண்டு, சுக நித்திரையின் ஜெயபேரிகையை முழக்கியவாறு படுத்திருக்கும் சாக்கோச்சனை, சூரியன் சிறிது நேரம் அப்படியே பிரமிப்புடன் பார்த்துக் கொண்டு நின்றுவிட்டான். பிறகு, அவன் ஓர் உறுதியான முடிவுடன் திரும்பி நடந்தான்.

சூரியன் நேராக சாத்துக்குட்டியின் கள்ளுக்கடைக்குச் சென்றான். அங்கே ஒரே மூச்சில் இரண்டு கோப்பைக் கள்ளைக் குடித்தான். இதயத்தைச் சூடாக்கினான். கண்களைச் சிகப்பாக்கிக் கொண்டு, அவன் குடிசைக்குத் திரும்பி வந்தான். அப்போது சாக்கோச்சன் அங்கிருந்து புறப்பட்டுப் போய்விட்டிருந்தான். சாரம்மா அடுப்பின் அருகில் அமர்ந்து தீ மூட்டத் தயார் செய்து கொண்டிருந்தாள்.

சூரியன் நேரே அடுக்களைக்குள் புகுந்து, சாராம்மாவின் தலை முடியைச் சுற்றிப் பிடித்து, அவளுடைய முதுகு முதல் முட்டிக்கால் வரை பல பாகங்களிலும் அடியோ அடியென்று அடித்து உதைத்தான்.

எதுவும் பேசாமல், சூரியன் மேலும் மேலும் அடிகளைத் தொடர்ந்து கொடுத்துக்கொண்டே இருந்தான். சிறு முனகலைக் கூட வெளிப்படுத்தாமல், யாதொரு துன்பமோ எதிர்ப்போ காட்டாமல், சாராம்மா ஒரு மரக்கட்டையைப்போல் அப்படியே நின்று கொண்டிருந்தாள்.

தன் மனைவியை அவ்வாறு ஒரேயடியாக அடித்து ஓய்ந்தபோது, சூரியன் தன் கையை உதறிவிட்டுத் தலையைக் குனிந்து கொண்டு வராண்டாவிற்கு வந்தான். ஒரு பீடியை எடுத்துப் பற்ற வைத்துக்கொண்டு, மீண்டும் ஏதோ ஆழ்ந்த ஆலோசனையில் மூழ்கினான். வராண்டாவிலேயே நான்கைந்து முறை அங்குமிங்கும் நடந்தான். பிறகு ஓர் உறுதியான முடிவுடன், அவன் மீண்டும் கள்ளுக்கடையைக் குறி வைத்து வெளியே நடந்தான்.

அந்தக் கள்ளுக்கடையில் அப்போது, வழக்கத்திலும் அதிகமாக ஆட்கள் குடிப்பதற்காக உட்கார்ந்து இருந்தார்கள்.

'சிறு புஷ்பம் விலாசம்' ஓட்டல்காரன் கொச்சு வர்க்கியும், தடியன் குருவிளையும் மீன்நாற்றம் நாறும் ஓர் அரைமேஜைக்கு எதிரே ஒவ்வொரு குட்டைப் பெஞ்சில் அமர்ந்து கொண்டு கள் குடித்தார்கள். கொச்சுவர்க்கி கண்களைத் திறந்து கொண்டும், குருவிளை கண்களை இறுக்கமாக மூடிக்கொண்டும் புளித்து நுரைத்துள்ள மரத்தண்ணீரை உள்ளுக்கு அனுப்பினார்கள். மூக்கன், குஞ்ஞம்பு, குடித்து முடித்துவிட்டு அங்கிருந்து எழுந்து செல்ல மனம் வராமல், இதற்குமுன் மூன்றுமுறை வழித்துநக்கி விட்டு வைத்த பீங்கானின் ஓரத்தில் மீண்டும் ஒருமுறை தோண்டி, ஓணானைப்போல் நாக்கை நீட்டிச் சப்புக்கொட்டினான். குஞ்ஞம்பு மணியாணியும் கல்தச்சன் சாத்துவும், முயல் உதடன் குஞ்ஞாப்புவும், மலையன் குஞ்ஞிராமனும் மற்றொரு மேஜையைச் சுற்றி உட்கார்ந்து கொண்டு, தங்களுக்கு முன்னால் வைக்கப் பட்டிருந்த கள் கோப்பைகளில் உள்ள ஈக்களை வீசி ஓட்டிக் கொண்டு, புளுக்காத்தரைப் பெரியவர் குஞ்ஞப்ப நம்பியாரின் உடம்பில் வீங்கியிருக்கும் டயாபடிஸ் கட்டியைப் பற்றி விவாதம் செய்து கொண்டிருந்தார்கள்.

"மாங்காய் போல ஒரு கட்டி செவந்து வீங்கிப்போயிக் கெடக்குது", முயல் உதடன் குஞ்ஞாப்பு - அவன் ஓர் அரை வைத்தியன் - கள் கோப்பையை ஒருமுறை முத்தமிட்டு, உதட்டைத் துடைத்து முனகியவாறு புளுக்காத்தரைப் பெரியவரைப் பீடித்துள்ள கட்டியை வர்ணிக்கத் தொடங்கினான்.

"அந்தக் கட்டிக்கு கண்ணிருக்கா?" - கல் தச்சன் சாத்து உற்சாகத்துடன் குஞ்ஞாப்புவிடம் கேட்டான். சாத்து இதுவரையில் ஒரு டயாபடிஸ் கட்டியைக் கண்டதில்லை. சர்க்கரை வியாதி பணக்காரர்களின் நோய் என்பது அவன் எண்ணம். டயாபடிஸ் கட்டிக்கு ஒரு பிரபுத்துவம் உண்டு.

"கண்ணும் மூக்கும் ஒண்ணும் தெரியல. உருண்டையா கெடக்குது" - சாத்து, கள்ளில் இறந்து மிதந்து கொண்டிருந்த ஒரு ஈயை ஆள்காட்டி விரலால் எடுத்து எறிந்து விட்டுப் பதில் கூறினான்.

"வலி இருக்குதாம்மா?"

"உம்-ஊஹூம்!"— என்று குஞ்ஞாப்பு, பெரியவருடைய கட்டியின் வலி முழுவதையும் தானே அனுபவிப்பதுபோல் ஒருமுறை முனகிக் காட்டினான்.

"வலியில்லாத கட்டிக்குப் பெறக்கொழுன்னு பேரு" மலையன் குஞ்ஞிராமன் கூறிப் புரிய வைத்தான்.

கடையினுள்ளே தெற்கு மூலையிலிருந்து, யாரோ உரத்த குரலில் தேம்பி அழும் குரல் கேட்டது. முயலுதடன் குஞ்ஞாப்பு திரும்பிப் பார்த்தான்.

கண்ணன் செட்டியார். அவர் அப்படித்தான். கள் உள்ளே போனால்போதும், செட்டியார் திடீரெனப் பெரிய துக்கத்தில் உள்ளவராக மாறி, தன் குடும்பத்தில் இறந்து மண்ணாகிப்போன ஒவ்வொருத்தரையும் நினைத்துத் தேம்பித் தேம்பி அழுவது பழக்கம். அந்தக் கிழவரின் அழுகையை அங்கே யாரும் பொருட்படுத்தவில்லை.

அந்தச் சந்தர்ப்பத்தில்தான் குரியன், தன் மனைவியுடன் படுத்திருந்த சாக்கோச்சானிடம் சென்று சண்டை போடுவதற்கான 'உயிரைச்' சம்பாதிக்க இரண்டாவது முறையாகக் குடிக்கக் கடைக்கு வந்தான். தலையில் கட்டிய துண்டை எடுத்துத் தோளில் போட்டுக்கொண்டு குரியன் ஒரு பெஞ்சில் அமர்ந்து கொண்டான். கள் கொண்டு வந்து கொடுக்கும் சிறுவனைப் பார்த்து ஆள்காட்டி விரலை உயர்த்திக் காண்பித்தான். சிறுவன், ஒரு கோப்பைக் கள்ளைக் குரியனின் முன்னால் கொண்டு வந்து வைத்தான்.

கையில் ஒரு கோப்பைக் கள்ளைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு, "ரெண்டு ஒடம்பானாலும் நாம் ஒரே இதயம்தானே....நீ என் நல்ல கள்ளுதானே!" என்று பாடிக்கொண்டே, ஒற்றைக் கண்ணன் வரீது குரியனின் அருகே வந்து இடம் பிடித்தான். ஒற்றைக் கண்ணன் வரீதுக்குக் கள்ளுக்கோப்பையைக் கையில் பிடித்துக்கொண்டு பல ராகங்களில் பாடியவாறு, அடிக்கடி இடம் மாறி அமர்ந்து குடித்தால்தான் சுகமாக இருக்கும்.

சர்ச்சில் துரையைப்போல், தடித்துக்கொழுத்து முகம் வீங்கிய ஒரு நாயும் குரியனின் காலடியில் தெனாவெட்டாகப் படுத்திருந்தது.

கடைக்குச் சொந்தக்காரன் சாத்துக்குட்டி, ஸ்ரீநாராயண குருவின் வாழ்க்கை வரலாற்றைப் பாராயணம் செய்தவாறு, பணப் பெட்டியின் மேல் கையையூன்றிப் பக்திரசம் தளும்பும் முக பாவத்துடன் உட்கார்ந்து கொண்டிருந்தான்.

குரியன் இரண்டாவது கோப்பைக்கு ஆர்டர் கொடுத்தான்.

அந்தக் கள்ளும் உள்ளே சென்றபோது, குரியனின் மூளைக்குச் சுறு சுறுப்பும், இதயத்துக்கு இரத்த அழுத்தமும், பார்வைக்கு

உக்கிரமும், நாக்குக்கு விறுவிறுப்பும் கூடிற்று. அம் மாறுதல்களின் சூட்டுடன் அவன் மூன்றாவது கோப்பைக் கள்ளையும் உள்ளே அனுப்பினான். பிறகு, உதட்டை ஒருமுறை துடைத்துவிட்டு ஒற்றைக்கண்ணன் வரீதின் முகத்தைக் கூர்ந்து பார்த்துக்கொண்டு, கடைக்கு வந்து கூடி இருந்தவர்களுக்குகெல்லாம் கேட்கக்கூடிய வகையில் உரத்த குரலில் ஒரு சொற்பொழிவு செய்தான்.

"இன்னிக்கு மத்தியானம் என் பொண்டாட்டி சாராம்மா, டீக்கடைக்காரன் சாக்கோச்சன்கூடப் படுத்துக்கிடக்கினு இருந்தத நான் கண்டுபிடிச்சிட்டேன். சாராம்மாவ நான் அடியோ அடின்னு அடிச்சிப்போட்டுட்டு வந்திருக்கேன்: அவ எலும்பு நொறுங்கி அசைய முடியாமக் கெடக்கறா......இனிமே நான் எங்கப் போவப் போறேன் தெரியுமா?... நெரா டீக்கடைக்குத்தான் போவப்போறேன். அங்க ரத்தாறு ஓடப்போவுது..... பெரிய கலாட்டா நடக்கப்போவுது.... அதச் செஞ்சாதான் இந்தக் சூரியன் அடங்குவான்."

அங்கே கூடியிருந்த குடிகாரர்களெல்லாம் கள்ளுக் கோப்பை களைக் கீழே வைத்துவிட்டு, அந்தப் புரட்சிப் பிரகடனம் அடங்கிய சொற்பழிவாளனை உற்றுப் பார்த்தார்கள். குஞ்ஞும்பு மணியாணியும் அவன் கூட்டாளிகளும் புளுக்காத்தரைப் பெரிய வரின் டயாபடிஸ் கட்டியின் விஷயத்தை மறந்து, சாராம்மாவின் விபச்சாரத்தைப் பற்றிக் கேட்கச் செவியைக் கூர்மைப்படுத்தினார்கள். அந்த அமைதியை உடைத்துக்கொண்டு, கண்ணன் செட்டியாரின் அழுகைத் தேம்பல் மட்டும் மேலெழும்பிக்கேட்டது.

தன் மனைவியின் விபச்சாரத்தைப் பற்றியும், அதற்குத் தான் செய்யப்போகும் அதிபயங்கரமான பதில் நடவடிக்கை பற்றியும், உலகம் முழுவதற்கும் முரசு கொட்டி அறிவிக்க வேண்டுமென்பது தான் சூரியனின் எண்ணம்.

"இதயெல்லாம் அப்பவே செஞ்சிருக்கணும் சூரியா!" என்று ஒற்றைக்கண்ணன் உபதேசித்தான்: 'இனிமே டீக்கடைக்குப் போயி சாக்கோச்சன தொந்தரவுபடுத்த வேணாம். கையும் களவுமாகப் புடிபட்டதுமே, அவன அங்கியே நசுக்கியிருக்க வேணாம்?".

"அவன் உடம்புல துணிகூட இல்லாம, பாயில பன்னிப்போலப் படுத்துத் தூங்கிக்கிட்டு இருந்தான். தூங்கறவன நான் கொல்லற தில்லை!" என்று சூரியன் டம்பமாகப் பதில் கூறிவிட்டு, மேலும் ஒரு கோப்பைக்கு ஆர்டர் கொடுத்தான்.

"சாராம்மா அப்ப என்ன செஞ்சிக்கினு இருந்துது?" தடியன் குருவிளை கேட்டான்.

"சாராம்மா அவனக் கட்டிப் புடிச்சிக்கிட்டு சாஞ்சிப் படுத்திருந்தா..." என்று சூரியன், அந்தக் காட்சியை வெட்க மில்லாமல் விவரித்தான். எல்லாருக்கும் உற்சாகம் கொப்புளித்தது.

"சாராம்மா இப்பதான் இந்த மாதிரி நடந்தாளா?... இல்ல......" என்று ஓட்டல்காரன் கொச்சுவர்க்கி கேட்டான்.

"அதக் சூரியனால எப்படிச் சொல்ல முடியும்? சாராம்மைக்குத் தான் தெரியும்" - குருவிளை சிரித்துக்கொண்டே சொன்னான்.

"அதுவும் சரிதாண்டா" என்று மலையன் குஞ்ஞிராமன், குருவிளையின் அருகில் நகர்ந்து வந்து உட்கார்ந்து கொண்டு ஆமாம் போட்டான். "மனுஷன் ரத்தத்த ஒரு தடவ ருசி பாத்தப் பின்னால, நேரங் கெடைக்கற போதெல்லாம் ஆளப் புடிக்கற காட்டு நரியப்போலத்தான் நாட்டுல நாரிமணிங்களும் இருக் காளுங்க. அந்த 'நேரம்' வர்றப் போல்லாம் அவ எப்படியாச்சும் விஷயத்த முடிச்சிக்குவா. கேட்டாயாண்ணே?"

"பொண்ண நம்பறவன் முட்டாளுதாம்பா" என்று குஞ்ஞம்பு மணியாணி ஒருபக்கமாக நோக்கியவாறு கூறினான்.

"இந்த அண்ணனாலே டீக்கடைக்காரன் சாக்கோவைக் கொல்ல முடியுமா?" என்று கல்தச்சன் சாத்து, முயலுதடன் குஞ்ஞாப்புவின் காதருகே மெதுவாகக் கேட்டான்.

குஞ்ஞாப்பு, சூரியனை ஒருமுறை உற்றுப் பார்த்தான். சூரியன் கண்களை மூடி, வாயைத் திறந்து குழைத்து குனிந்த கழுத்துடன் பெஞ்சில் சரிந்து குத்திட்டுக்கொண்டிருந்தான். சிறிது நேரம் சென்றதும் சூரியன் சிறுநினைவுகூட இல்லாமல், அந்தப் பெஞ்சிலேயே மடிந்து விழவும் செய்தான்.

அங்கே கூடியிருந்த குடிகாரர்களுக்கெல்லாம் பெரிய ஏமாற்றமாகப் போய்விட்டது. கையில் ஒரு கத்தியுடன் சூரியன், தன் மனைவியைக் கெடுத்தவனைப் பழிவாங்கச் செல்வதையும், டீக்கடையில் வைத்து அந்த இரண்டு 'அண்ணாச்சிகளும்' ஒருவருக்கொருவர் ஒரு கோழிச்சண்டை செய்வதையும், இரத்தம் சிந்துவதையும் மற்றவைகளையும் பார்ப்பதற்குத் தயாராக அவர்களெல்லாம் நின்று கொண்டிருந்தார்கள். ஆனால் அந்த நாடகம் முடங்கி விட்டது. 'கதாநாயகன்' கள்ளின் போதையில் மூழ்கிப் போனான். அந்தப் பதில் நடவடிக்கையின் கோலாகலம் சூரியனின் குறட்டையொலியில் ஒதுங்கிவிட்டது.

அவர்கள் பழைய பேச்சுக்களைத் தொடர்ந்தார்கள். புளுக்காத்தரைப் பெரியவரின் டயபடிஸ் கட்டி மீண்டும் பொங்கி வந்தது!

திடீரென்று, மிக உயரமான கொம்பு மீசைக்காரன் ஒருவன் கடையின் உள்ளே புகுந்து வந்து, அங்கே கூடியிருந்தவர்களை யெல்லாம் ஒருமுறை பார்த்தான்.

"தோ....தோ.....அவன்தான் டீக்கடைக்காரன் சாக்கோ!" என்று முயல் உதடன் குஞ்ஞாப்பு, கல்தச்சன் சாத்துவின் தொடையில் நிமிண்டிவிட்டுச் சுட்டிக்காட்டினான்.

என்னவோ நடக்கப்போகின்றது என்ற எண்ணத்துடன், எல்லோரும் வந்தவனையே கூர்ந்து நோக்கினார்கள். மணியாணி, குரியனை எழுப்பிவிட ஒருமுறை முயன்று பார்த்தான். குரியன் அசைவதாக இல்லை.

சாக்கோ ஒரு பெஞ்சில் மேல் ஏறி நின்று உரத்த குரலில் கூறினான்.

"எல்லாரும் இங்கக் கவனமாக கேளுங்க---நம்ம ஊர்லேந்து வந்த ஒரு சாது சகோதரன் - பள்ளிப்பரம்பில் மாத்தன் இந்த ஊருக்காரச் செல கேடு கெட்டப்பசங்க, ஒலக்கையால அடிச்சி சாவற மாதிரி ஆக்கிட்டானுங்களாம். மாத்தன, அவனுங்க மூத்தரத்தக் குடிக்கச் சொல்லியும், மலத்தத் திங்கச் சொல்லியும் இருக்காங்கன்னு கேள்விப்பட்டேன். அவன அவனுங்க மாட்டுக் கொட்டாயில புடிச்சிக் கட்டியிருக்கானுங்க. நீங்கள்ளாம் இங்கக் கள்ளக் குடிச்சிட்டு பாட்டு பாடிட்டுக் குந்தியிருக்கீங்க. எல்லாரும் இப்பவே எழுந்து வாங்க. அந்தப் பசங்களுக்கு ஒரு பாடத்தப் பொகட்டனும். இப்பவே பொறப்படலன்னா அவுனுங்க மாத்தனக் கொன்னு குழிதோண்டிப் பொதச்சிடுவானுங்க. அது மட்டுமில்லாம, கிறிஸ்துவங்களோட பரிசுத்தமான சிலுவைக்கு முன்னால, இந்தப் பசங்க மலத்த வேற வீசறானுங்க. இதயெல்லாம் சகிச்சிக்கிட்டு குடியிருக்கவா நாம இங்க பணத்த மொடக்கி வந்திருக்கோம்? - எல்லாரும் வாங்க. இதுக்குப் பதிலுக்குப் பதிலு கேக்காமக் குடிசைக்குத் திரும்பக்கூடாது."

அந்தப் பிரசங்கத்தைக் கேட்ட வீரத்துடன், ஒற்றைக் கண்ணன் வரீதும், தடியன் குருவிளையும், வேறு நான்கைந்து கிறிஸ்து வர்களும் கள்ளுக் கோப்பையைத் தூக்கி எறிந்துவிட்டுத் துள்ளி யெழுந்து சாக்கோச்சன் முன்னால் சென்றார்கள்.

"நடங்க சாக்கோச்சா, இவுனுங்களுக்கு ஒரு பாடத்தப் பொகட்டலாம். திருவிதாங்கூரு கிறஸ்தவங்களுடைய தனி நெறத்த இவுனுங்க கண்டதில்ல. இப்பக் காட்டிடுவோம்." என்று தடியன் குருவிளை அலறினான்.

அவர்கள் வேகமாக நடந்தார்கள். போகின்ற போக்கில் அவர்கள் குரியனையும், ஒருமுறை தட்டிக் கூப்பிட்டுப் பார்த் தார்கள். பதிலில்லை. எழுந்திருக்கவுமில்லை. உப்பில் விழுந்த பல்லியைப்போல் அவன் இடுப்புத் துணிகூட இல்லாமல் மல்லாந்து படுத்துக்கிடந்தான். கடைசியில் அவர்கள் குரியனை அங்கேயே விட்டு, மீதியிருந்த கிறிஸ்துவர்களெல்லாம் சேர்ந்து ஓர் ஊர்வலமாக நடந்தார்கள்.

## 35

அந்தோணி தன் சித்தப்பாவைப் பார்த்து, கூலியாட்களுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தை வாங்கிக்கொண்டு குடிசைக்குத் திரும்பிக் கொண்டிருந்தான்.

மாதாகோயிலுக்கு அருகில் வந்தபோது, யாருடையவோ மயான யாத்திரையைக் குறிக்கும் பிரார்த்தனைக் கீதத்தின் முழக்கம் அவன் காதுகளில் விழுந்தது. அந்த முக்கூட்டு வழியில் நின்றான்.

கருப்புச் சவப்பெட்டியைச் சுமந்துகொண்டு நடக்கும் இருவரின் பின்னால் ஆறேழு கிறிஸ்துவர்கள் அமைதியாக நகர்ந்து வந்து கொண்டிருந்தார்கள். ஆனிக்குட்டியின் சித்தப்பா ஜேக்கப்பும் அந்தக் கூட்டத்தில் இருந்தான்

அந்தோணி ஒதுங்கி நின்று, பின் அவர்களுடன் சேர்ந்து மாதா கோவிலுக்கு நடந்தான்.

"யாரது?" அந்தோணி சவப்பெட்டியைச் சுட்டிக்காட்டி, அந்தக் கூட்டத்தில் நடந்துசென்ற டீக்கடைக்காரன் ஔசேப்பிடம் மெதுவாகக் கேட்டான்.

"ஜேக்கப்போடு தங்கியிருந்தாளே ஒரு பொண்ணு - அவதான் ஆனிக்குட்டி - கடுமையான மலைச்சொரத்தாலப் போய்ட்டா" என்று ஔசேப்பு முணுமுணுத்தான்.

அந்தோணி இடிவிழுந்ததுபோல் திடுக்கிட்டு நின்று விட்டான். அவனால் அந்தச் செய்தியை நம்ப முடியவில்லை. அவன் ஆழமாக ஆராதித்துக்கொண்டிருந்த அந்தக் களங்கமற்ற பெண்தான்,

அந்தக் கருப்பு பெட்டிக்குள்ளே அடைந்து மண்ணுக்குள் போகப்போகிறாள்.

நெஞ்சில் தன் கைகளினால் சிலுவை அடையாளத்தை வரைந்து, தலையைத் தாழ்த்தி அவன் அவர்களுடன் சேர்ந்து நகர்ந்தான்....

சூரிய ஒளி அந்தச் சவப்பெட்டியை இறுதியாகத் தடவிற்று. ஆனிக்குட்டி மண்ணின் கீழே போய்விட்டாள்.

"நீ மண்ணாகின்றாய்; நீ மண்ணுக்கே திரும்ப போகின்றாய்"...

சாமியார் சவப்பெட்டியைப் பார்த்து ஓதினார்.

அதன் பிறகு கோயிலுக்கு போகும் போதெல்லாம், அந்தோணி ஆனிக்குட்டியின் இறுதி ஓய்விடத்தை ஒரு பெருமூச்சுடன் பார்க்காமல் இருந்ததில்லை. ஞாயிற்றுக்கிழமைதோறும், ஆனிக்குட்டி வழக்கமாக முட்டிபோட்டுப் பிரார்த்தித்து நிற்கக்கூடிய அந்த இடத்தை, அவன் இதய வேதனையுடன் மறைமுகமாகப் பார்ப்பான். வெள்ளைத் துணியைத் தலையில் அணிந்து, ஊர்த்துவ திருஷ்டியுடன் உதடுகளை அசைத்துக்கொண்டு நிற்கும அந்தச் சிறுதேவதை, ஒரு கனவுபோல் அங்கே தங்கி நிற்கின்றாள் என்று அவனுக்குத் தோன்றும்.

சில சமயம், அவன் யாரும் அறியாமல் அவளுடைய சவக் கல்லிற்குக் கீழே புஷ்பங்களை அர்ப்பித்து, விம்மும் இதயத்துடன், "ஆனிக்குட்டி, நீ பாக்கியவதிதான். இந்தப் பாவிங்க கிட்டே யிருந்து கர்த்தர் ஒன்ன அழைச்சிக்கிட்டுப் போய்ட்டார். ஆனாலும், நீ இதுக்குள்ள போயிருக்க வேணாம்" என்று கூறுவான்.

தான் செய்த பாவத்தின் பலனால்தான், ஆனிக்குட்டியைக் கர்த்தர் அழைத்துக் கொண்டு போய்விட்டாரென்று அந்தோணி நம்பினான்.

"நான் பாவிதான்.....நான் பாவிதான்.....பச்சாதாபப்படக்கூட முடியாத பாவி! சாத்தான் என்னை வஞ்சித்துவிட்டான். கர்த்தரின் நாமத்தை உச்சரிக்கக்கூட எனக்கு அருகதயில்ல.

அவன் ஆத்ம நிந்தனையுடன் இதயம் தகர்ந்து சதா நேரமும் புலம்பிக்கொண்டிருப்பான்.

## 36

குன்னோளி பெரிய நம்பியாருடைய நாலுக்கட்டு வீட்டில் முற்றம், தினந்தோறும் ஒரு நீதி மன்றமாக மாறிவிடும். திருவிதாங்கூரிலிருந்து கடல் அலையைப்போல் விழுந்தடித்து ஓடி

வரும் கிறிஸ்துவர்களான, புதிய குடியேறும் கூட்டத்தார்கள் அப் பிரதேசத்தில் எழுதி வாங்கிய மலை நிலங்கள் முக்கால் பங்கும் குன்னோளிக்குச் சொந்தமான பூர்விக இடங்களாகும்.

பெரியவரும், முதல் காரியஸ்தன் சாத்துக்குறுப்பும், சில பஞ்சாயத்துக்கள் பேசும் குறுப்புகளும், வராண்டாவில் இருந்தார் கள். முற்றத்தைச் சுற்றியுள்ள உடைந்த மதில் சுவரிடம் நிற்கின்ற கூட்டம், தங்களுடைய சங்கடங்களைத் தெரிவிப்பதற்காக வந்த கிருஸ்துவர்களாவர்.

"ஔசேப்பு! எதையோ சொல்ல வந்திருக்கான்" -- சாத்துக் குறுப்பு பெரியவரிடம் கூறினான்.

"டேய் ஔசேப்பு! இங்க வா" சாத்துக்குறுப்பு முற்றத்தில் பதுங்கி நின்ற நடுத்தர வயதான ஒரு முறுக்கு மீசைக்காரனைக் கூவி அழைத்தான்.

ஔசேப்பு தோளிலிருந்து தன் இரண்டாவது துண்டை எடுத்து இடுப்பில் சுற்றி, வலது கையை மூக்கிற்கு நேராக மடக்கிப் பிடித்து, ஆசாரமாக நடித்துக்கொண்டு முன்னால் வந்து, பெரிய வரை வணங்கித் தலை தாழ்த்தி நின்றான்.

"கிருஷ்ணா, வெத்தல பாக்கு" என்று பெரியவர் யாதொரு அசைவும் இல்லாமல் ஆணையிட்டார்.

"அப்போ, நீ ஒன் ஊருக்கே திரும்பிப்போவத் தீர்மானிச் சிட்டே; இல்ல?" என்று சாத்துக்குறுப்பு விண்ணப்பக்காரனை விசாரணை செய்யத் தொடங்கினான்.

"தீர்மானிச்சிட்டேன் எஜமான்!" ஔசேப்பு பெரியவரின் முகத்தை மெல்லக் கண்களை உயர்த்திப் பார்த்துவிட்டு, வினய மான குரலில் சொன்னான். "அடியேனுக்கு ரொம்பக் கஷ்டம் வந்திடுச்சி, பொண்டாட்டியும் செத்துட்டா, ரெண்டு கொழந் தைங்களும் செத்துட்டுது. கையில இருந்த பணமெல்லாம் தீர்ந் துட்டுது. முன்னூறு ரூபா கடனும் வந்துட்டுது"--

"இவன் நெலம் எங்க இருக்கு?" என்று பெரியவர் விசாரித்தார்.

"தங்களோட திருக்காரிமலையின் தெக்குச்சரிவுல இருக்கு" சாத்துக்குறுப்பு விவரம் சொன்னான்.

"அங்க பயிரிட்டது ஏதாச்சும் பாக்கியிருக்கா?" என்று சாத்துக் குறுப்பு விவரம் சொன்னான்.

"அங்க பயிரிட்டது ஏதாச்சும் பாக்கியிருக்கா?" என்று சாத்துக் குறுப்பு விசாரணையைத் தொடர்ந்தான்.

"எஜமான் போயிப்பார்க்கணும் - அடியேன் ஒண்ணுமே அனுபவிக்கல!"

"எல்லாத்தியும் பன்னி அனுபவிச்சி வருதில்ல?" என்று பெரியவர், கிருஷ்ணக்குறுப்பு சுருட்டிக்கொடுத்த தாம்பூலத்தை வாங்கி வாயில்போட்டு மென்று கொண்டே கேட்டார்."சரி நீ எவ்வளவோ கொடுத்திருந்தே?"

"நாற்பது ஏக்கரு நெலத்துக்கும் இரண்டு நூறுரூபாய். குத்தகப் பணம் இரண்டு நூறு ரூபா. முன்குத்தக - ஏஜண்டுகளுக்கும் மத்ததுக்கும் 150 ரூவா. காட்டை வெட்டிச் சீராக்கவும் மத்த செலவுக்கும் 150 ரூவா. எல்லாஞ்சேந்து ஆயிரம் ரூவா வரைக்கும் செலவாயி இருக்கும்".

"மத்தச் செலவு வெஷயத்த அப்படியே வையி--" பெரியவர் அவன் சொன்னதைத் தடுத்துச் சொன்னார்: "குன்னோளிக்கு நீ கொடுத்தது ஆக மொத்தம் 400 ரூவா தானே?".

"ஆமாம், எஜமான். 400 ரூவாதான்."

"சரி இனிமே சொல்லு, நாங்க என்னா செய்யணும்?"

"அடியேனுக்கு முன்னூறு ரூவா கடன் இருக்கு. இனிமே இங்க வசிக்கணும்னு நெனைக்கில. திரும்ப எங்க ஊருக்கே போவணும்."

"போயேன்".

"எஜமான், அடியேனுடைய நெலத்தையும் பயிரையும் எடுத்துக்கணும்"

எங்களுக்கு நெலத்துக்கு அவசியமில்ல. நீ ஒன்னோட ஊருக்காரங்க யாரு கிட்டயாவது போயி விசாரிச்சி பாரு"

"வாங்கறத்துக்கு யாரும் வரல. அடியேனக் காப்பாத்த இப்ப எஜமான் மட்டும்தான் தெரியறாங்க".

"நெலத்தத் திரும்ப வாங்கி நாங்க என்ன செய்யறது?".

"அதுல, ஒரு போகம் பயிரு இருக்கு."

"முத்தாத பயிருதானே இருக்கு? அங்க இன்னமும் பணத்தப் போட வழி தெரியலியே".

"அடியேனுக்கு வேற கதியில்ல".

பெரியவரும் சாத்துக்குறுப்பும் சேர்ந்து என்னவோ தங்களுக்குள் ஆலோசனை நடத்தினார்கள். பிறகு சாத்துக்குறுப்பு உரக்கச் சொன்னான்:

"ஆவட்டும், எறநூறு ரூவா வேணாத் திருப்பித் தரலாம். அதுக்கு ஒரு பத்திரம் எழுதிக் கையெழுத்தையும் போடு".

ஔசேப்பு நடுக்கினான். இருநூறு ரூபா! கடனே முன்னூறு ரூபா வரையில் உள்ளது.

"முன்னூறு ரூவாயைக் கொடுக்காமப்போனா வீரான் குஞ்ஞி என்னை விடமாட்டான் எஜமான். ஊருக்குப் போயிச் சேரணும்னா நூறு ரூவாவாச்சிம் செலவாவும். ஐநூறு ரூவாயாச்சும் தயவு செஞ்சி இந்த ஏழைக்கு அனுமதிக்கணும்"

"எதைப்பாத்துடா ஒனக்கு ஐநூறு ரூவா அனுமதிக்கிறது?"--

பெரியவர் வேகமாகக் கூறினார்: "சட்டப்படி ஒனக்கு ஒரு ஒத்தப் பைசாக்கூடத் திருப்பி தரணும்கிற அவசியமில்ல. நாங்களும் இங்க வெவசாயம் செய்யப்போறதில்ல. புதுசா வர்றகூட்டங்களும் புதுமலை நெலம்தான் வேணும்னு கட்டாயப்படுத்தறாங்க. நீயும் பன்னியும் கொத்திக் கிளறிய நெலம் யாருக்கு வேணும்? எறநூறு ரூவா தர்றதே ஒரு தருமத்துக்குத்தான். பிரதிபலன் எதிரு பாத்துல்ல!"

"எஜமான் ஒரு அள அனுப்பிப்பாருங்க. ரெண்டாயிரம் ரூவா பயிரு அங்க கெடக்குது. அதப்பாத்துக்க ஆருமில்ல, அறு வடைக்குப் பணமுமில்ல."

"வாங்கறதுக்கு ஆளுருக்கான்னு போயி விசாரியேன்".

"எங்க கூட்டத்தால, அவுங்கவுங்க நெலத்தப் பாத்துக்கறதுக்கே முடியல எஜமான். இன்னும் காத்திருந்தா அந்தப் பயிரும் அப்பிடியே நாசமாயிடும். அடியேனும் இங்கியே மல சொரங்கண்டு செத்துடுவேண்."

பெரியவரும் சாத்துக்குறுப்பும் தங்களுக்குள் மறுபடியும் எதையோ முணுமுணுத்துக் கொண்டார்கள். கடைசியில் சாத்துக்குறுப்பு ஔசேப்பின் கேஸைப் புனர் விசாரணைக்கு வைத்திருப்பதாக அவனுக்குத் தெரிவித்தான்:

"நான் நாளைக்கி சாயங்காலமா அங்க வந்து ஒன்னோட பயிரயெல்லாம் பாக்கறேன். நீ திங்கக்கெழமக் காலைல இங்க வந்தா வெவரம் சொல்றோம். நீ இப்பப் போவலாம்."

ஔசேப்பு, பெரியவரையும் காரியஸ்தனையும் நன்றியுடன் வணங்கிவிட்டு, பின்னாலேயே சென்று தலையைத் தாழ்த்திக் கொண்டு திரும்பி நடந்தான்.

ஔசேப்பு படிக்கட்டை அடைந்தபோது, நான்கைந்து பேர்கள் சேர்ந்து ஒரு கிறிஸ்துவனின் கைகளை மடக்கிக் கட்டி இழுத்துக் கொண்டு வரும் காட்சியைக் கண்டான். என்ன விஷயம் என்று தெரிந்து கொள்ளும் ஆவலுடன் ஔசேப்பு அங்கேயே தங்கி நின்றான்.

அந்த அரைநிர்வாணத் தடியனை நெட்டித்தள்ளி, அவர்கள் பெரியவரின் முன்னால் ஆஜராக்கினார்கள்.

பெரியவர் ஒரு சிறிய புன்னகையுடன் கையை விரித்து ஆட்டிக்கொண்டே என்ன விஷயமென்று விசாரித்தார்.

"இவன் ஒரு பெரிய திருட்டுப்பய எஜமான்!" என்று அந்தக் கூட்டத்தில் இருந்த குடுமிக்காரனான ஒரு கிழவன் முன்னால் வந்து விளக்கினான்:

"இவனால ஏற்படற ஒபத்தரவம் கொஞ்ச நஞ்சமில்ல எஜமான். வாழக்கொலைய வெட்டறது. தேங்காய் பறிக்கிறது. வூட்ல யாரும் இல்லாத நேரம் பாத்து உள்ள பூந்து, கலயத்துல இருக்குற கஞ்சியையும் சோத்தையும் திங்கறது. திரும்பிப் போவும்போது கண்ல காண்ற சாமானையெல்லாம் எடுத்துக்கிறது. இதெல்லாம் இந்தப் பன்னிப்பயவேல எஜமான். இவனால ஊராளுங்க தங்களுக் குள்ளாற சண்டப் போட்டுக்கறாங்க. முந்தா நாளு கல்லூரி ஆத்துல வண்ணாத்தி காய வச்சிருந்த செல துணிகளயும், முண்டு களயும் யாரோ மூட்ட கட்டிக்கிட்டுப் போயிட்டாங்க. அதயும் இவன்தான் செஞ்சிருக்கணும். நேத்து ராத்திரி இவன் கையும் களவுமா எங்க கிட்ட ஆப்புட்டுக்கிட்டான். இவன் ஆண்டி ஆசாரி மாட்டுக் கொட்டாயில பசுமாட்டத் திருட மொனைஞ்ச போது, ஆசாரி பொண்டாட்டி பாத்துட்டுக் கூப்பாடு போட்டா. அப்ப இவன் கொட்டாயின் பின்பொறமா ஓடியிருக்கான். அவசரத்துல ஓடும்போது சாணிக்குழில போயி வுழுந்திருக்கான். சாணிக்குழில இவன் பொறண்டுட்டு இருந்தப்ப, இவன நாங்க புடிச்சி மாட்டுக் கொட்டாயில கட்டிட்டோம். அப்புறம்தான் இவன இங்க கொண்டாந்திருக்கோம். இனிமே எஜமான் உத்திரவு போல நடக்கிறோம்".

பெரியவர் அந்தக் குற்றவாளியை அனுதாபத்துடன் ஒருமுறை நோக்கினார். சாணத்தில் புரண்ட கிடா எருமையைப்போன்ற உருவம். கழுத்தில் சிலுவை மட்டும் தொடங்கியது.

"இவன் எங்க இருக்கான்?" என்று கேட்டார் பெரியவர்.

"குளியன் மலக்குன்றுல வெவசாயம் செய்யறான். இவன மாத்தன்னு இவுங்க ஆளுங்க கூப்பிடறாங்க".

"ஏண்டா டேய், இவுங்க ஒன்னப்பத்திச் சொல்றதெல்லாம் உண்மைதானா?" என்று பெரியவர் மாத்தனிடம் கேட்டார்.

மாத்தன் ஒன்றும் பேசவில்லை. இது ஒன்றும் தன்னைச் சம்பந்தப்படுத்துகிற விஷயமில்லை என்ற பாவனையில், அவன்

தன் தலையைச் சாய்த்து, தூரத்தில் தெரியும் ஒரு பனை மரத்தின்மேல் உட்கார்ந்திருக்கும் ஒரு கழுகைப் பார்த்துக் கொண்டு நின்றான்.

"ஏண்டா அண்ணாச்சி, நீ பசுமாட்டத் திருடப் போனது உண்மைதானா?" என்று பெரியவர் உரக்க மீண்டும் கேட்டார்.

பதில் இல்லை.

"டேய், ஒங்கிட்ட எஜமான் கேக்கறது ஒன் காதுல வுழலியா?" காரியஸ்தன் சாத்துக்குறுப்பு முரட்டுக் குரலில் கேட்டான்.

மாத்தன் பேசவில்லை. பசுவைத் திருடச்சென்ற குற்றம் மட்டுமில்லாமல், வாழைக்குலை வெட்டியது, வண்ணாத்தியின் துணிகளைத் திருடியது முதலான குற்றங்களையும் அவன்மேல் சுமத்தியதை, அவன் கேட்டுக்கொண்டுதான் இருந்தான். ஆனால், தன்மேல் இரட்டைக் கொலைக் குற்றத்தைச் சுமத்தினாலும் மாத்தன் பேசக்கூடிய பாவனையில் இல்லை என்றால் என்ன செய்வது?

"ஊமையா இவன்?" என்று பெரியவர் கோபத்துடன் கேட்டார்.

"இல்ல எஜமான்!" குடுமிக்காரக் கிழவன் சொன்னான், "நேத்து ரெண்டு வுட்டபோது ஆணை அவர்ற மாதிரி அலறினான். இவன போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போனா, அங்க அவுங்க பேசறதுக்கான மருந்தக் கொடுப்பாங்க."

"அது வேணாம்" என்று கட்டளையிட்ட பெரியவர், "இவன இப்ப ஒரு பாடம் மட்டும் பொகட்டி வுட்டுடலாம். இவனக் கொண்டு போயி இன்னிக்கு ராத்திரியும் ஆசாரியோட மாட்டுக்கொட்டாயில கட்டிப்போடுங்க. நாளைக்குக் காலைல அவுத்து வுட்டுடலாம். மறுபடியும் அவன் பழைய வேலயத் தொடங்கினான்னா அப்ப போலீஸுல ஒப்படைச்சுடலாம். இவனக் கொண்டு போங்க" என்று உத்திரவிட்டார்.

தீர்ப்பு முடிந்த குற்றவாளியை அவர்கள் திரும்பவும் நெட்டித்தள்ளிக் கொண்டு போனார்கள்.

ஔசேப்பு வேகமாக அங்கிருந்து நடந்து, சாக்கோச்சனின் டீக்கடைக்குச் சென்றான்.

## 37

குன்னோளி பெரியவரின் முன்பு விசாரணை முடிந்து தண்டிக்கப்பட்ட மாத்தனை, அவர்கள் ஆண்டி ஆசாரியின்

மாட்டுக் கொட்டகைக்கு மீண்டும் தள்ளிக்கொண்டு போய், அங்கே பத்திரமாகக் கட்டி வைத்தார்கள்.

ஔசேப்பு அந்தச் செய்தியுடன் டீக்கடைக்காரன் சாக்கோச்சனிடம் வந்து சேர்ந்தான். மாத்தன் கழுத்தில் எருமையின் நுகத்தடியைக் கட்டித் தொழுவத்தில் கட்டப்பட்டிருக்கின்றான் என்றும், அவனை அவர்கள் மாட்டு மூத்திரத்தைக் குடிக்கச் செய்து, சாணத்தைத் திங்க வைக்கிறார்கள் என்றும், உலக்கையால் அடித்து அவன் எலும்பை நொறுக்குகிறார்கள் என்றும், இன்னும் என்னென்னவோ செய்திருக்கிறார்கள் என்றும் ஔசேப்பு மேலும் பல செய்திகளை அதிகப்படியாகவே சொன்னான். சாக்கோச்சன் அதைக்கேட்டு சாமியாட்டமாக துள்ளினான்.

சாக்கோச்சனும் ஔசேப்பும் சேர்ந்து அந்த மலைச்சரிவில் உள்ள கிறிஸ்துவ வீடுகள் தோறும் நடந்து சென்று, அதைப்பற்றிய பிரச்சார வேலையைச் செய்து அவர்களையெல்லாம் உசுப்பி விட்டார்கள். மாத்தனை மிருகத்தனமாகக் கொடுமைகள் செய்து கொல்லப்போகும் செய்தி, காட்டுத் தீயைப்போல் அந்தக் கிறிஸ்துவக் குடிசைகளில் பரவின. அந்தச் செய்தியுடன்தான் சாக்கோச்சன் கள்ளுக்கடைக்கு வந்ததும்.

கடையிலிருந்து புறப்பட்ட ஊர்வலம் அடுத்த மலைச்சரிவுக்கு நகர்ந்தது. *இடியன் ஔசேப்பும், தொடுபுழக்காரன் தொம்மனும், மூவாட்டுப்புழக்காரன் வர்க்கீஸும், ஆனைச்சொறி மாத்துவும், பூனைக்கண்ணன் மத்தாயியும் அவர்களுடன் சேர்ந்தார்கள். ஔசேப்பும் கொஞ்சம் பேர்களைத் திரட்டிக்கொண்டு வந்தான். உதட்டில் வெண்குஷ்டமுள்ள குரியனும், இட்டூப்பும், ஜேக்கப்பும், எருமேலிக்காரன் பௌலோசும் அந்தக் கூட்டத்தில் இருந்தார்கள்.

அவ்வாறு எல்லாரும் பதிலுக்குப் பதில் கேட்பதற்காகப் படைசேர்ந்து, ஆண்டி ஆசாரியின் இருப்பிடத்தை லட்சியமாக்கி நடந்தார்கள்.

மாலை மங்கத் தொடங்கியது. குறுந்தடிகளும், ஈட்டியும், கட்டாரியும், வெட்டுக்கத்தியும் கைகளில் ஏந்தி, பந்தத்தையும் கொளுத்திக் கொண்டு, ஆர்ப்பாட்டக் கூக்குரல்களுடன் அவர்கள் மலைச்சரிவைக் சுற்றிக்கொண்டு நடந்தார்கள். இட்டூப்பின் கையில் ஒரு கடப்பாறையும், ஒற்றைக்கண்ணன் வரீதின் கையில் அரிவாளும், ஜேக்கப்பின் கையில் குந்தாலியும் இருந்தன. திருக்கை வாலால் முறுக்கப்பட்ட பெரியதோரு சாட்டை வாரைச் சுருட்டிப் பிடித்துக்கொண்டு வர்க்கி நடந்தான்.

---

* இடியன் - அவல் இடிப்பவன்

பாதையருகில் இருந்த குஞ்ஞிக்கண்ணன் கள்ளுக்கடையில், அவர்கள் முதன் முதலாகக் கொள்ளை நடத்தினார்கள். அவர்கள், கடைச் சொந்தக்காரனையும் வேலைக்காரர்களையும் அடித்து விரட்டிவிட்டு, அங்கே இருந்த கள்ளையும், கறி வகைகள் எல்லா வற்றையும் வயிற்றுக்குள் அனுப்பிவிட்டு, பணப் பெட்டியைக் கொள்ளையடித்து கொப்பை, பீங்கான், ஜாடிகளை யெல்லாம் தள்ளி உடைத்தபின் பயணத்தைத் தொடர்ந்தார்கள்.

மூக்குமுட்ட கள்ளைக் குடித்திருந்த ஆனைச்சொறி மாத்து, ஐந்து ஆறு தடவைகள் தலைகீழாக விழுந்தான். சிறிதுநேரம் சென்றதும் அவனால் நகரக்கூட முடியாமல் போயிற்று. செரியானும், தடியன் குருவிளையும் சேர்ந்து அவனைத் தாங்கிப் பிடித்துக்கொண்டு நடந்தார்கள்.

பாதையருகில் இருந்த வாழைகளையும், இளம் மரங்களையும் வெட்டிச் சாய்த்துத் தாறுமாறாக்கி, வேலிக்குத் தீ வைத்துக் கொளுத்தி விட்டு நடந்து செல்லும் அந்த விரோதப் படையை எதிர்நோக்க, அவ்வூர்காரர்களுக்குத் தைரியம் வரவில்லை. சவாலுக்கு அழைத்துக்கொண்டே அவர்கள் போனார்கள்.

"சாவு நெருங்கினவனெல்லாம் வாங்கடா, எங்கள ஒருத்தர யாச்சும் தொட்டுட்ட, கொடலைப் புடுங்கி நாய்க்கிட்டப்போட்டு திங்க வைக்கிறோம்," என்றுதான் அவர்கள் வீர கர்ஜனை செய்து கொண்டு போனார்கள்.

தென்னையின் உச்சியிலிருந்து மரநாய் மாத்து, அந்தத் தீவட்டிக் கொள்ளைக்காரர்களைக் கண்டான். மாத்து வழக்கம் போல் கள் திருடுவதற்காகத் தென்னை மரத்தில் ஏறியிருந்தான். கள் நிறைந்த குடுவையை ஒரு கையில் தூக்கிக்கொண்டு, அவன் மெதுவாகக் கீழே இறங்கி அவர்களுடன் சேர்ந்தான்.

கள்ளின் மணம் வீசியதும் ஆனைச்சொறி மாத்து துள்ளத் தொடங்கினான்.

"கள்ளக் கொண்டாடா" என்று அவன் அலறினான்.

தன் கள்ளுக்கு இவர்களிடம் பாதுகாப்புக் கிடைக்காது என்பதைப் புரிந்துகொண்ட மரநாய் மாத்து, பின்னால் தங்கி விட்டான். ஆனைச்சொறி மாத்து கைகால்களை அடித்துக் கொண்டும், தலையால் இடித்துக்கொண்டும், தலையை மேலும் கீழும் ஆட்டியும், பால் குடிக்கத் தாயின் மடியை முட்டும் யானைக்குட்டியைப் போல் பல பராக்கிரமங்களையும் காட்டத் தொடங்கியபோது, செரியானும், தடியன் குருவிகளையும் அவனைக் கீழே போட்டுவிட்டு நடக்கத் தொடங்கனார்கள்.

ஆனைச்சொறி மாத்து அனாதையாகக் கூப்பாடு போட்டான்:

"டேய், மரநாயி, ஒரு துளிய எனக்கும் குடிக்கக் கொடுடா. தொண்ட வறண்டு நாக்க அசைக்க முடியலடா, டேய், பசங்களா. ஆண்டி ஆசாரியத் தூக்குப்போட என்னயும் கூட்டிக்கினு போங்கடா?"

வழியில் கிடந்து கூப்பாடு போடும் ஆனைச்சொறியனை யாரும் திரும்பிக் கூடப்பார்க்கவில்லை. வெள்ளை உதடன் சூரியன், அவன் அருகே வந்து, குனிந்து நின்று தொண்டையை இறுக்கிப் பிடித்தான். அதனால், பயங்கரச் சப்தத்துடன் ஆனைச்சொறி மாத்து கொஞ்சம் வாந்தி எடுத்தான்,

மரநாய் மாத்து ஒரு பாறையின் பின்னால் சென்று, குடுவையிலிருந்த கள் முழுவதையும் கவிழ்த்துக் குடித்துவிட்டு, குடுவையைக் கீழே எறிந்து விட்டு, மீசையையும், உதட்டையும துடைத்துக்கொண்டு கூட்டத்தின் பின்னால் பாய்ந்தோடிச் சேர்ந்தான்.

அந்தக் கொள்ளைக் கூட்டம் ஆண்டி ஆசாரி வீட்டுக்கு முன் பக்கத்திலுள்ள வயலுக்குள் திரும்பியது.

ஆசாரியும், அவன் குடும்பமும், அந்தக் கொள்ளைக் கூட்டம் தம் வீட்டுக்கு எதிரே நகர்ந்து வருவதைப் பார்த்துப் பயந்துபோய், மேற்குக் காட்டுக்கு ஓடித் தப்பித்தார்கள்.

கூட்டம் ஆசாரியின் தோட்டத்தில் நுழைந்தது. ஆசாரியின் நாய் அவர்களைப் பார்த்து குரைத்துக்கொண்டே எதிரே வந்தது. ஔசேப்பு அந்த நாயை வெட்டி இரண்டு துண்டுகளாக்கினான்.

அவர்கள் முதலில் மாட்டுக் கொட்டகையில் புகுந்து, கட்டப்பட்டிருந்த மாத்தனைச் சுதந்திரனாக ஆக்கினார்கள். வலையிலிருந்து தப்பிய நரியைப்போல், மாத்தன் எந்த வழியாகக் குதித்து ஓடினான் என்று யாரும் பார்க்கவில்லை.

பிறகு, அவர்கள் தோட்டம் முழுக்க கலாட்டாவுடன் பாய்ந்து, கண்ணில் கண்ட வாழைகளையும், செடிகளையும், மரங்களையும் - எல்லாவற்றையும் சாய்த்தார்கள். அடுத்துக் குடிசைக்குள்ளே நுழைந்தார்கள். கையில் எடுத்துக்கொள்ளக்கூடிய சாமான்களையெல்லாம் கொள்ளையடித்தார்கள். மீதியுள்ளதை உடைத்து எறிந்தார்கள். ஜேக்கப்பும், இடியன் ஔசேப்பும் மாட்டுக் கொட்டகையில் புகுந்து ஒரு பசுங்கன்றைப் பிடித்து, அதன் கழுத்தை அறுத்தார்கள். அதன் தொடையையும் இதயத்தையும் மற்ற நல்ல பாகங்களையும் அறுத்தெடுத்துத் தோளில்

தூக்கிக்கொண்டார்கள். எல்லாம் முடிந்து, இனிமேல் ஒன்றும் செய்ய முடியாது என்று ஆனபோது ஒற்றைக்கண்ணன் வந்து ஆசாரியின் வீட்டுக்குத் தீயையும் வைத்தான்.

அவர்கள் வெற்றி முழக்கத்துடன் திரும்பினார்கள். ஒவ்வொருத்தன் கையிலும் ஒவ்வொரு புதிய சம்பாத்தியங்கள் இருந்தன. கொச்சுவர்க்கியின் தலையில் இரண்டு செப்புக்குடமும், கையில் ஒரு புத்தகக் கட்டும் இருந்தன. இறைச்சி சுமைக்கு மேல் ஆசாரியின் உளிப்பெட்டியையும், ஓர் உரிக்காத தேங்காயையும் எடுத்துக் கொண்டு ஜேக்கப் போனான். அரிவாளை இடுப்பில் சொருகி, இரண்டு பெரிய கிண்ணங்களால் சேகண்டியடித்துப் பாட்டுப் பாடியவாறு நடந்து சென்ற ஒற்றைக்கண்ணன் வரீதின் பின்னால், ஆசாரி வீட்டுச் சுவரின்மேல் கொளுத்தி வைத்திருந்த சிமினி விளக்கு அணையாமல் ஒரு கையிலும், ஒரு கோடாலியை அடுத்த கையிலும் பிடித்துக்கொண்டு, வெள்ளை உதடன் குரியன் சிந்தனையில் மூழ்கியவனாக நகர்ந்தான். குருவினையின் கக்கத்தில் ஒரு சேவல் கோழியும் தெரிந்தது.

ஆசாரியின் பணப்பெட்டியைச் செரியான் தட்டிக்கொண்டான். ஆசாரி மனைவியின் துணிப்பெட்டி இட்டூப்பிற்குக் கிடைத்தது

அக்கூட்டத்தில் வெறும் கையுடன் திரும்பும் ஒரே தனி மனிதன் மரநாய் மாத்து மட்டும்தான்.

அவன் இரண்டு கைகளையும் இடையிடையே ஆட்டிக் கொண்டும், கண்களையும் கன்னங்களையும் உப்ப வைத்து ஊதியும் நக்கியும், வயிற்று வலியால் அவதிப்படும் நாய்க் குட்டியைப்போல் அடிக்கடி முனகிக்கொண்டும், வேறு பல சேஷ்டைகளை செய்து கொண்டும் சென்றான். ஆசாரியின் அடுக்களை மேடைக்குச் சென்று தடவியபோது, அவனுடைய இரண்டு கைகளும் எலிப்பொறியில் மாட்டிக் கொண்டன. அதனால் ஏற்பட்ட எதிரொலியால்தான் அவன் இந்த சேஷ்டை களையெல்லாம் செய்து கொண்டு வந்தான். மாத்துவின் பத்து விரல்களும் செக்கிவிட்ட கொப்பரைத்தேங்காய்போல் நசுங்கி போயிருந்தன. பல்லை இளித்துக்கொண்டும், கையை ஆட்டி முனகிக்கொண்டும் திரும்பத்தான் அவனுக்கு யோகம் இருந்தது.

"டேய் முண்டம், இந்த ஊர்ல போலீஸ்காரனுங்க உண்டாடா?" என்று வர்க்கி திரும்பி நின்று கேட்டான்.

"நான் கண்டதில்லை. இருந்தாத்தான் என்ன? அவுனுங்களுக் காகப் பயப்படணுமா?" என்று இடியன் ஒளசேப்பு வெறுப்புடன் சொன்னான்: "நான் பயப்படமாட்டேன்".

வர்க்கீஸ் ஏதோ ஆலோசனையுடன் வழியிலேயே தங்கினான். "டேய் விஷயம் ரொம்பக் கொழப்பமா இருக்கு. திருட்டுப் பொருளுங்க கெடைச்சா அவுனுங்க நம்ளப் புடிச்சிகிட்டுப் போயிடுவானுங்க". "அந்தப் பசங்களா?" என்று இடியன் ஔசேப்பு ரௌத்திராகாரத்துடன் தலையையாட்டியவாறு கேட்டான்.

"அதையும் பார்த்துடறேன். போலீஸில்ல, போலீஸோட அப்பனே வரட்டும். இந்த ஔசேப்பைத் தொட்டா... தொட்ட வன் மறுபடி பொணம்தான்."

"வழக்கும் பொல்லாப்பும் வெணாம்" என்று கொச்சுவர்க்கி முகத்தைச் சுளித்தான்: "நாம இதயெல்லாம் இந்த வாய்க்கால்லேயே போட்டுடலாம்."

"நீ வேண்ணாப் போட்டுக்க, நான் கெடைக்கறதையெல்லாம் வூட்டுக்குத்தான் கொண்டு போவேன்." என்று இட்டூப்பு உறுதியுடன் சொன்னான்.

என்றாலும் பெரும்பாலானவர்களுக்குப் பயம் உண்டாகி விட்டது. கள்ளின் போதையாலும், கூட்டத்தின் பலத்தினாலும் அறிவு கெட்டு, பின்னால் வரப்போவதை நினைத்துப் பார்க்கா மல், சில பயங்கரக் குற்றங்களைச் செய்தாகிவிட்டது என்றாலும், அவர்களில் சிலருக்குப் பயம் தோன்றத் தொடங்கியது.

"நாம இவைகளையெல்லாம் இங்கியே கடாசிட்டுப்போவது தான் நல்லது." என்று உபதேசித்த வர்க்கீஸ், "அவுங்க வூட்டுக்கு வந்து தேடுவாங்க, அப்ப வெஷயம் முத்திப்பூடும்..." என்றான்.

கடைசியில் அவர்களில் பலரும் வர்க்கீஸுன் உபதேசத்துக்கு அடங்கினார்கள்.

செரியான், ஆசாரியின் பணப்பெட்டியை உடைத்துப் பார்த்தான். அதில் பதினேழு ரூபாயும், ஒரு வெள்ளி அரைஞாண் கயிறும், கறுப்பு நூலில் சேர்த்துக் கட்டிய ஒரு பவுன் நாணயமும் இருந்தன. அவன் அவைகளையெல்லாம் தனித்துண்டில் மூட்டைக் கட்டிக்கொண்டு, பெட்டியை வாய்க்காலில் எறிந்தான். குருவிளை சிம்னி விளக்கையும் கோடாலியையும் காட்டில் எறிந்துவிட்டு, சேவல் கோழியை மட்டும் கழுத்தை முறித்துக் கொன்று கையில் தூக்கிக்கொண்டான். உளிப்பெட்டியைச் சேற்றில் அழுத்திவிட்டு இறைச்சியையும், தேங்காயையும் மார்பில் அணைத்துக்கொண்டு ஜேக்கப்பு நடந்தான். அவ்வாறு வயிற்றுக்குள் மறைக்கக்கூடிய சில பொருள்களைத் தவிர, மீதியையெல்லாம் வழி நெடுகத் தூக்கி எறிந்துவிட்டு அவர்கள் தங்கள் தங்கள் குடிசைகளுக்குத் திரும்பினார்கள்.

# 38

காலை மணி பத்தாகி விட்டது. மாத்தன், தூக்கம் கலைந்தும் பாயிலேயே முக்காடிட்டுப் போர்த்திக்கொண்டு, சோம்பலின் கற்பனைக் கனவுகளை அணைத்துக்கொண்டு அசையாமல் கிடந்தான்.

சட்டென்று மேரிக்குட்டி ஓடி வந்தாள்.

"அம்மா, அம்மா! செவப்புத் தலைப்பாக்காரங்க அஞ்சாறு ஆளுங்க வராங்க. போலீஸ்காரங்கன்னுதான் தோணுது" என்று பயத்துடன் நடுங்கியவாறு சொன்னாள்.

மாத்தன் தன் உடையில் தீ பிடித்துக்கொண்டதுபோல் தான் படுத்திருந்த இடத்திலிருந்து ஒரு துள்ளுதுள்ளி எழுந்தான். அடுத்து, கீழே பார்த்துக்கொண்டே மேற்கு முற்றத்துக்குப் பாய்ந்தான். அங்கேயிருந்து, எங்கே என்று சொல்ல முடியாத இடத்துக்கு அவன் குதித்தோட ஆரம்பித்தான். மதிலையும் வரப்புகளையும் லட்சியம் செய்யாமல், நரி சொரண்டிய காட்டுப் பன்றியைப் போல் ஒரே ஓட்டமாகப் பாய்ந்து ஓடினான். அவன் செங்குத்தான ஒரு குன்றை ஏறிக் காட்டையடைந்தும் கூட ஓட்டத்தின் வேகத்தை குறைக்கவில்லை. நரிக்கூட்டத்தில் சென்று மறைந்தாலும் மறைந்து விடலாம், போலீஸ்காரர்கள் தன்னை கண்டுபிடிக்காமல் இருந்தால் போதும் என்பதுதான் மாத்தனின் பிரார்த்தனையாக இருந்தது.

ஆண்டி ஆசாரியின் வீட்டுக்குத் தீ வைத்துக் கொள்ளையடிக்கப் போன அக்கிரமக்காரர்களைத் தேடிக் கண்டுபிடிப்பதற்காக, ஒரு போலீஸ் சப்-இன்ஸ்பெக்டரும், நான்கு கான்ஸ்டபிள்களும் காலையிலேயே அங்கே வந்து சேர்ந்திருந்தார்கள். ஆண்டி ஆசாரி வீட்டின் மீதியுள்ள பாகங்கள் அப்போதும் எரிந்து கொண்டிருந்தன. தலை துண்டித்துக் கிடக்கும் நாயைக் காக்கைகள் கொத்தி இழுத்துக் கொண்டிருந்தது. மாட்டுக் கொட்டகையில் மாட்டு இரத்தம் கருத்து கட்டிப்பட்டிருந்தது. வாய்க்காலில் சிறிய மரங்களும் செடிகளும் காட்டானை மிதித்துக் குழப்பி நாசம் செய்தது போல் ஒடிந்தும் மடிந்தும், தலைமாடு கால் மாடாகக் கிடந்தன. ஆண்டி ஆசாரியின் குடும்பத்தார்களும், அந்தக் காட்சிகளைக் கண்டு சகித்துக்கொள்ள முடியாமல், மார்பில் அடித்துக் கொண்டு கூப்பாடு போட்டுக்கொண்டிருந்தார்கள்.

இன்ஸ்பெக்டர், ஆசாரியிடமும், அக்கம் பக்கத்துக்காரர்களான இரண்டு மூன்று பேர்களிடமும் வாக்குமூலம் வாங்கிக்கொண்டு, மெதுவாக அந்த கிறிஸ்துவக் காலனிக்குள் புகுந்தார். அவர் குரியனின் குடிசைக்குச் சென்றபோது, குரியனும், சாராம்மையும், ஒரே பாத்திரத்திலிருந்து கஞ்சியைக் குடித்துக்கொண்டிருந் தார்கள். முதல் நாள் இரவில் நடந்த கலாட்டாவைப் பற்றித் தனக்கொன்றும் தெரியாதென்று சொல்ல குரியனுக்கு நாக்கு எழும்பவில்லை.

"இந்த ஆளு நேத்து ராத்திரிபூரா கள்ளுக்கடையில் படுத்துத் தூங்கிட்டாருங்க. கடையிலேருந்து, சின்னப்பையன் கேளன்தான் இன்னிக்குக் காலைல இந்த மனுசனை இங்க கொண்டாந்தான்" என்று சாராம்மா கணவனின் நிரபராதித்துவத்தை நிலை நாட்டியவாறு கூறினாள்.

அப்படித்தான் நடந்தது என்ற பாவனையில் குரியனும் தலையாட்டினான்.

போலீஸ்காரர்கள் ஐந்தாறு வீடுகளில் ஏறி இறங்கிவிட்டு, மாத்தனுடைய குடிசையை அடைந்தார்கள்.

"இந்த ஊட்டு அண்ணாச்சி எங்க கூப்பிடு" என்று ஹெட் கான்ஸ்டபிள் கோரன் முற்றத்திலிருந்து மரியத்திடம் கட்டளையிட்டான்.

"இங்க இல்லீங்களே, அவுரு எங்கியோ போயி ரெண்டு நாளாச்சு," என்று மரியம் ஜானியை இடுப்பில் வைத்துக்கொண்டு முற்றத்திற்கு இறங்கி வந்து கூறினாள்.

"எங்க போனாரு?"

"தெரியாது".

"இவன் பேரு என்னா?"

மரியம் கணவனின் பெயரைச் சொல்ல தயங்கி நின்றாள்.

"சொல்லு, பேரு என்னா?"

"பள்ளிப்பரம்பில் மாத்தன் மொதலாளி" என்று மனம் நிறைந்த அபிமானத்துடனும், கொஞ்சம் கூச்சத்துடனும் மரியம் சொன்னாள்.

"அவன் யாரு ஒன் புருஷனா?"

மரியம் புன்னகைத்துக்கொண்டு பேசாமல் நின்றாள்.

"என்னா, சிரிச்சி மயக்கிக்கிட்டு நிக்கற?....சீக்கிரம் சொல்லு. இந்த மாத்தன் ஒன்னோட புருஷனா?"

'ஆமாம்' என்பதுபோல் மரியம் தலையைக் குனிந்து கொண்டாள்.

"வெலகி நில்லு. இந்தக் குடிசைக்குள்ள பரிசோதிக்கணும்." என்று கூறிய ஹெட் கான்ஸ்டபிளும், கான்ஸ்டபிள்களும் உள்ளே புகுந்ததும், மரியம் மார்பில் அடித்துக்கொண்டு ஓலமிட ஆரம்பித்தாள்.

"ஒண்ணாம் சிலும்பாம இருடி" என்று 513 மரியத்தைப் பார்த்து ஓர் அதட்டல் போட்டான்.

போலீஸ்காரர்களுக்கு அங்கேயிருந்து எந்தத் திருட்டுப் பொருள்களும் கிடைக்கவில்லை.

அன்று மதியம் வரை அவர்கள் ஒவ்வொரு வீட்டிலும் புகுந்து பரிசோதித்தார்கள். கடைசியில், இட்டுப்பின் வீட்டிலிருந்து ஆசாரி மனைவியின் துணிப்பெட்டி அவர்களுக்குக் கிடைத்தது. அவன் அதை அடுபபிலிருந்த சாம்பல் மேட்டின் உள்ளே வெகு சாமர்த்தியத்துடன் புதைத்து வைத்திருந்தான்.

இட்டூப்பைப் பிடித்து இரண்டு 'வாங்கு வாங்கியதும்' அவன் எல்லாவற்றையும் சொல்லிவிட்டான்.

அன்று மாலையிலேயே அவர்கள் டீக்கடைக்காரன் சாக்கோச் சனையும், தொடுபுழக்காரன் தொம்மனையும், பூனைக்கண்ணன் மத்தாயியையும் கைது செய்தார்கள்.

கொச்சு வர்க்கி போலீஸுக்கு அகப்படாமல், மலை ஏறிக் குடகிற்குச் சென்று தப்பித்துக்கொண்டான். ஒற்றைக்கண்ணன் வரீது வயநாட்டிலுள்ள தன் மைத்துனனிடம் சென்று விட்டான். வெள்ளை உதடன் குரியனை, அதன் பிறகு அந்த ஊரில் யாருமே காணவில்லை. இடியன் ஔசேப்பும் பிடிபடவில்லை.

## 39

காட்டின் நடுவே சென்று விட்ட மாத்தன், ஓடித் தளர்ந்ததால், ஒரு மரத்தின் கீழே நீண்டு கிடக்கும் ஒரு பெரிய வேரின் மேல் உட்கார்ந்து கொண்டான்.

சுற்றும் முற்றும் பார்த்தான். ஓர் இடமும் பிடிபடாமல் கிடக்கின்ற பெரிய காடு. ஜீவகளையற்ற பயங்கரமான சூழ்நிலை. அங்குமிங்குமாக தடித்துப் பெருத்த வள்ளிக்கொடிகள் முறுக்கிக் கொண்டு, சுற்றிப் படர்ந்து கிடக்கும் பெரிய பெரிய மரங்களும், புள்ளிகள் உள்ள கரியப் பாறை அடுக்குகளும் நிலை கொண்டிருந் தன. நிலம் முழுவதும் சருகினால் மூடி கிடந்தது.

தன்னைத் தேடிக்கொண்டு போலீஸ்காரர்கள் அங்கே வந்துவிட முடியாது. அது நிச்சயம். மாத்தன் ஆசுவாசப்படுத்திக் கொண்டான்.

இருப்பிடம் நிலைத்ததுடன் அவனுடைய பெருமூச்சும் அதிகரித்தது. அவன் நெஞ்சு கருமான் உலைபோல் சுருங்கி விரிந்த வண்ணமிருந்தது. தண்ணிரில் மூழ்க வைத்தது போல் அவன் உடல் முழுவதும் வியர்த்து ஒழுகிக்கொண்டு இருந்தது. தாள முடியாத வெப்பம்.

அவன் இடுப்பு வேட்டியை அவிழ்த்து, அந்த வேரின் மேல் விரித்து விட்டு, முன்னாலிருந்த இலைச்சருகுகளின் பரப்பை விழித்துப் பார்த்தான்.

அவனால் ஒன்றும் சிந்திக்க முடியவில்லை. மூளையில் ஒரு மூடுபனி பரவியது போல் அவனுக்குத் தோன்றியது. அந்தத் தெளிவற்ற காட்சியில், சிகப்புத் தொப்பிகளின் சில சித்திரங்கள் மட்டும்தான் நடமாடிக்கொண்டிருந்தன.

முதல் நாள் இரவு ஆண்டி ஆசாரியின் வீட்டில் நடந்த கலாட்டா ஒன்றும் மாத்தனுக்குத் தெரியாது. கட்டப்பட்டிருந்த கட்டுக்களை அவிழ்த்து விட்டதும், ஒருமுறை கூட திரும்பிப் பார்க்காமல் அவன் ஒரே ஓட்டமாக வீட்டிற்குத்தான் ஓடினான். இரவு உணவை முடித்துவிட்டு சுகமாகத் தூங்கினான். அதன் பின், 'அம்மா, போலீஸ்காரங்க' என்ற மேரிக்குட்டியின் சப்தம்தான் அவனை இவ்வளவு தூரத்துக்குப் பாய்ந்தோடி வரச் செய்தது.

அவன் தன்னுடைய மாற்றங்களில், வயித்துக் கொண்டிருக்குபோது, தான் அமர்ந்துகொண்டிருந்த வேர் மெல்ல அசைவதாக, அவனுக்குத் தோன்றிற்று. அவன் நன்கு இருத்தி உட்கார்ந்தான். என்றாலும், வேர் அசைந்தது. மெதுவாக இழுத்தது.

மாத்தன் ஆச்சரியத்துடனும் இரு பக்கமும் பார்த்தான். ஒரு ஜீவனைக் கூடக் காணவில்லை. பிறகு, கழுத்தைத் திருப்பி மேலே பார்த்தான்.

"என் கர்த்தரே!" என்று கூப்பாடு போட்டவாறு மாத்தன் முன்னால் குனிந்து, கைகள் இரண்டையும் பின்னுக்கு நீட்டித் தடுத்தவாறு, தலையையும் தாழ்த்தி ஒரு மரணப் பாய்ச்சலில் பாய்ந்தான்.

மாத்தன் குந்தியிருந்த வேரின் பின்பக்க மரத்திலிருந்து, ஒரு மரப்பொந்தைப் போல் தலையுள்ள உருவம் ஒன்று எழும்பிவந்து

கொண்டிருந்தது. வாயைப் பிளந்து வளைந்து செங்குத்தாக வருகின்ற ஒரு மலைப்பாம்பு அது.

தான் அது வரையில் அந்தக் கொடூர மலைப்பாம்பின் உடலின் மேல் தான் உட்கார்ந்திருந்தோம் என்பதை அறிந்தபோது, மாத்தனின் எல்லா எலும்புகளும், நாடி நரம்புகளும் உருகிப் போய்விடன. என்றாலும் ஓட்டத்தில் வேகம் குறையவில்லை. பூமி எங்கே முடிகிறதோ அங்கே தான் நிற்பது என்கிற மட்டில் அவன் பாணம் விட்டதுபோல் பாய்ந்தோடினான்.

ஓடியோடி, தளரத் தொடங்கியதும், அந்தக் காட்சியைப் பார்த்த போதிருந்த பயம், அவனை மீண்டும் முன்னுக்குப் பாய்ந்தோடச் செய்தது. அவன் மூன்று மைல்கள் வரையில் அவ்வாறு நிற்காமல் ஓடி இருக்க வேண்டும். கடைசியில் அவன் ஒரு புல் மேட்டை அடைந்து, அங்கே காலை நீட்டியவாறு உட்கார்ந்தான்.

அடுத்துள்ள மூங்கில் காட்டிலிருந்து காட்டு யானைகள் கழிகளை இழுத்து ஒடிக்கின்ற சப்தம், அவனை அங்கே இருந்து மீண்டும் எழுந்தோடச் செய்தது. அவன் மலையின் மறு பக்கத்துக்குச் சென்று, அங்கிருந்து பாறைக் கூட்டங்களின் மறைவில் சென்று விழுந்தான்.

எப்படியாவது குடிசைக்கே திரும்பிச் சென்றுவிட்டால் போதுமென்று அவன் ஆசைப்பட்டான். ஆனால், தெற்கும் வடக்கும் எது என்பதே தெரியவில்லை. சுற்றிலும் பெரிய பெரிய குன்றுகள், நீலப்புகை பரவிக்கிடக்கின்ற தெளிவில்லா மண்டலம்.

மாத்தனின் நாக்கு வரண்டு கிடந்தது. தீப்பொறி விழுவதுபோன்று உச்சி வெய்யிலும் தகித்தது. அவன் மெதுவாகக் கையையூன்றி எழுந்து, தண்ணீரைத் தேடிக்கொண்டு நடந்தான். மலையின் சரிவில் ஒரு சிறிய வாய்க்காலை அவன் கண்டுபிடித்தான். அங்கே இறங்கிச் சென்று, கழுத்தைக் குனிந்து முகத்தைத் தண்ணீரில் மூழ்க வைத்து, எருதைப்போல் தண்ணீரை உறிஞ்சிக் குடித்தான். வயிறு பெருத்தவுடன் கொஞ்சம் ஆசுவாசம் ஏற்பட்டது.

அவன் அரை மணி நேரம் அந்த வாய்க்காலின் கரையிலேயே ஓய்வெடுத்தான். அந்தச் சூழ்நிலையும் அவ்வளவு பாதுகாப்பானதாகத் தோன்றவில்லை. வாய்க்காலின் கரையில், மெழுகு போலுள்ள சேற்று நிலத்தில் புலியின் அடிச்சுவடுகள் பதிந்து கிடப்பதைக் காணமுடிந்தது.

மாத்தன் எழுந்து நடந்தான். தன்னுடைய மலைக்கு நேராகத் தான் செல்கிறோம் என்ற நம்பிக்கையுடன், அவன் பல மலை களையும் ஏறி இறங்கினான். கடைசியில் மேலும் ஓர் அடிகூட நகர அனுமதிக்காத இருண்டு குறுகலான ஒரு பயங்கரக்காட்டின் முன்னால் சென்று சேர்ந்தான்.

என்ன செய்வதென்றே நிச்சயமில்லாமல் அவன் அங்கே கண்ட ஒரு பாறை அடுக்கின் நிழலின் கீழே நின்று விட்டான்.

திடீரென்று சிறிது தூரத்திலிருந்து, சில கூக்குரல்களும், அட்டகாசங்களும் அவன் காதுகளை வந்து குடைந்தன. மாத்தன் கண்களை உருட்டிப் பார்த்தான். காதுகள் கூர்மையாயின. மனித சப்தங்கள், அங்கே கேட்பது மனித சப்தம் தான் என்று புரிந்து கொண்டபோது அவன் இதயம் ஒரு முறை சிலிர்த்தது. ஆனால், நிமிட நேரத்தில் தன்னைத்தானே பார்த்துக்கொண்டபோது அவன் மிகவும் குறுகிப்போனான் என்றுதான் சொல்லவேண்டும். முழுநிர்வாணமாகத்தான் மாத்தன் தன்னை அப்போது பார்த் தான். அவனுடைய முண்டை, அவனை விழுங்குவதற்குப் புறப் பட்ட மலைப்பாம்பின் மேலேயே போட்டுவிட்டு வந்திருந்தான். உடலில், நூல் உறவென்று சொல்ல அவன் கழுத்தில் கிடந்த சிலுவையின் சரடு மட்டும்தான் இருந்தது.

அந்தக் கூக்குரலும் கலாட்டாவும் மிகவும் அருகில் வந்தது. துப்பாக்கியின் சத்தமும் கேட்டது.

மாத்தன் பதுங்கியவாறு அந்தப் பாறை பிளவினிடையில், பாறையைப் பிடித்துக்கொண்டு நின்றான்.

திடீரென்று மாத்தனின் முன்னால் ஓர் உருவம் துள்ளி விழுந்தது.

தீயை வைத்துப் பொசுக்கிய தேனிக்கூட்டைப் போன்ற முகத்தையுடைய ஒரு காட்டு மனிதன். அவன் தோளில், முக்கால் நிர்வாணமான ஒரு கரிய பெண் கைகளையும், கால்களையும் உதைத்துக் கூக்குரலிட்டுக் கொண்டிருந்தாள். பெண்ணைத் தோளோடு சேர்த்துக் கட்டிப் பிடித்துக்கொண்டு அந்த பயங்கர உருவம் காட்டிற்குள்ளே ஓடி மறைந்தது.

மாத்தன் மரச்சிலையைப் போல் ஆகிவிட்டான். பயங்கரமான ஒரு பிரேத உலகத்திற்குத்தான், தான் சென்று சேர்ந்திருக்கிறோம் என்று மாத்தனுக்குத் தோன்றிற்று.

"அதோ, ஒருத்தன், பாறைக்குப் பின்னால இருக்கான். அடிங்கடா அவனை....." அந்த ஆணையைத் தொடர்ந்து ஒரு

துப்பாக்கி வெடித்தது. மாத்தன் முகத்துக்கருகே ஒரு பாறைத் துண்டு வந்து விழுந்தது. அவன் கீழே உருண்டு விழுந்தான். மாத்தன் எழுந்திருப்பதற்குள்ளேயே அவன் கைகள் மடித்துக் கட்டிப்பட்டுவிட்டன.

"ஒருத்தன் கெடச்சுட்டான்! ஓ.....ஓ......கூ......க........ம்!" அந்த சந்தோஷத்தின் கூக்குரலும் உரத்த ஒலியும் காடு முழுவதும் எதிரொலித்தது.

துப்பாக்கியையும், தடிகளையும், குத்தீட்டிகயையும், மற்றவை களையும் கையில் ஏந்திக்கொண்டு ஐந்தாறு நாயர்களும், பத்து பதினைந்து சுத்தமற்ற பணியர்களும் அடங்கிய ஒரு கூட்டம் மாத்தனைச் சுற்றிலும் கூடினார்கள்.

உடல் முழுவதும் ரோமத்தினால் மூடிய நிர்வாணமான மாத்தனை அவர்கள், உற்சாகத்துடனும் பகையுடனும் பரிசோதித் தார்கள்.

"இந்தக் காட்டுப் பணியன் கழுத்துல ஒன்று தொங்கிக் கிட்டிருக்கிதே என்னாது?"...ஒருவன் கேட்டான்.

"எங்கியோ கெடந்த ஈயக்கட்ட" -- மற்றொருவன் பதில் கூறினான்.

"அவன் காட்டுப் பணியன் இல்லன்னு தோணுது. தலைமயிரு அந்த மாதிரி இல்லியே!"

"அடடே, நல்ல புள்ளிதான் கெடைச்சிருக்கு. இவன் அரேபியன்தான்!" ஒரு கிழநாயர் உரக்கச் சொன்னான், எல்லாரும் பயத்துடன் பின் வாங்கினார்கள்.

"அரேபியன்தான்!" என்று வேறொருவன் முன்னால் வந்து இவனைப் பரிசோதித்துவிட்டு உறுதி கூறினான்: "இந்த மாதிரி ஒருத்தனத்தான், காரியஸ்தன் குஞ்ஞம்பு நாயரு போன வருஷம் பாத்துட்டு பயந்தோடினாரு!".

"டேய், நீ காட்டுப் பணியனா, அரேபியனாடா?" என்று ஒரு இளைஞன் மாத்தன் தலைக்கு நல்ல உதை கொடுத்துக் கேட்டான்.

மாத்தன் அதற்கும் பேசவில்லை. மரியம் இடித்து இடித்து மரத்துப்போன மண்டை அது.

"இவன் ஒண்ணும் பேசல இல்ல. அப்படின்னா அரேபியனாத் தான் இருக்கணும்" அவர்கள் ஏக மனதாக அபிப்பிராயப் பட்டார்கள்.

அவர்கள், கட்டப்பட்டுள்ள ஐந்துவையும் பிடித்து இழுத்துக்கொண்டு நாராயணன் நம்பியாரின் களத்திற்கு நடந்தார்கள்.

# 40

தன்னுடைய மலைகளின் பல பாகங்களிலும் சிதறிக்கிடக்கும் மலை நிலங்களைப் பார்வையிடச் செல்லும்போது, அங்கே தங்குவதற்கும், மலை விளைச்சல்களையும் தானியங்களையும், விதைகளையும் சேர்த்து வைப்பதற்குமாக நாராயணன் நம்பியார் கட்டி வைத்துள்ள காட்டு வீடுதான் அது. காடுகளில் வேட்டைக்குப் போகும்போது தங்குமிடமாகவும் அதை உபயோகப்படுத்துவதுண்டு.

அழகான ஒரு மலை இடுக்கின் அருகில், படிப்படியாக எழும்பி நிற்கும் பசுமையான வயல் பீடங்களுக்கும் உச்சியில், அந்தப் புல் வேய்ந்த மாளிகை வீடு தனிமையாக இருந்தது. அந்த மேடையின் மேல் பாகத்தில் கூம்பாகக் கிடக்கும் மலைச்சரிவில், ஏழெட்டு பணியர் குடிசைகள் செல் புற்றுக்களைப்போல் தொத்திக் கொண்டு நிற்பதையும் காணலாம்.

அவைகளுக்கு ஒரு மைல் தூரத்தில் மனிதனின் கால்கள்கூடப் படாத பெரிய காடுகள் இருந்தன. செழுமையாக வளர்ந்த, அடர்ந்து படர்ந்து வானம் முட்டும் அளவிலுள்ள மரக்கூட்டங் களின் தடித்த திரைக்கு அப்பால் உள்ள நிலைமைகளை என்ன வென்று போய்ப் பார்க்கக்கூட யாரும் தைரியப்பட்டதில்லை. அங்கே சமசதுரத்தில், வானம் முட்டும் அளவிற்குக் கிடக்கும் பெரிய மலைகளுக்கும் கீழே, காலம் காலமாகத் தண்ணீர் தேங்கியிருக்கும் பெரிய பெரிய தடாகங்களின் கர்ப்பத்தில், வரலாற்றுக் காலத்துக்கும் அப்பாலுள்ள விசித்திர நீரினங்கள் விளையாடிக் கொண்டிருந்தன. தண்ணீரின் மேல் பரப்பில் வெண்கொற்றக் குடைகள் விரிந்து நின்று கொண்டிருந்தன. மிகப் பழமையான ஒரு பெரிய பேரரசில் எஞ்சியிருக்கும் உடைந்து சிதறிப்போன ஒரு கருங்கல் கோட்டையும் அங்கே நிலை கொண்டிருந்தது. காட்டு யானைக்கூட்டம் அந்தக் கோட்டைக்கு அருகே வரும்போது எதையோ கண்டு பயந்து விட்டதைப் போன்று, பின்னால் திரும்பி மிரண்டு ஓடுவதைக் கண்டவர்களும் உண்டு. உடல் முழுவதும் கரிய ரோமங்கள் நிறைந்த நிர்வாணமான காட்டு மனிதர்கள் அதன் அருகில் உள்ள பெருங்காட்டில் தங்கள் விருப்பம்போல் வசித்து வருகின்றார்கள். அவர்களின் பெண்கள், அந்தத் தடாகத்தில் மூழ்கித் தாமரைக்

கிழங்குகளைத் தேடி எடுக்கின்றார்கள். காட்டு மிருகங்கள் கூடப் பயந்து ஒதுங்கிய அந்த வன வளையத்தில், வள்ளிக் கொடிகள், தங்கள் பூக்கலால் கிரீடம் தரித்து, மரக்கிளைகளில் ஊஞ்சலாடி விசிலடித்துக்கொண்டிருந்தன.

அவ்வாறான ஐதிகங்கள் அந்த இனந்தெரியாத உலகத்தில் மூடப்பட்டுக் கிடக்கின்றன.

அதனுடைய இங்குள்ள எல்லைவரை சென்றுவந்த சில வீர தீரர்களான வேட்டைக்காரர்களிடமிருந்து கிடைத்த பயங்கர விவரங்கள், மற்றவர்களை அங்கு போகாமல் தடுத்தி நிறுத்தி விட்டன.

அந்தக் கோட்டையில் அரேபியர்கள் வசித்து வருகிறார்கள் என்று, பரம்பரை பரம்பரையாகச் சொல்லப்பட்டு வருகின்றது. இந்த அரேபியர்கள் யாரென்றோ, அவர்கள் எந்த உயிரினங் களைச் சேர்ந்தவர்கள் என்றோ யாரும் அறிந்ததில்லை. அந்தக் கோட்டை மூடுதிரைக்கும் அப்பால் உள்ள காட்சிகள், பழங்குடி மக்களின் கெட்ட கனவைப்போல் கிடக்கின்றன.

ஆனால், ஒரு விஷயம் மட்டும் அவர்களுக்கு அனுபவப் பட்டிருந்தது. அந்த மாயா உலகத்தின் அருகில் எங்கேயோ சில காடுகளில், மிருகத்தனமாகக் காட்டுவாசிகள் வசித்து வருகின்றார் கள் என்பது மட்டும் தெரிந்தது. அந்தக் கிராதகர்கள் சில காலங் களில் முன் சொன்னபடி அடிவாரங்களுக்கு இறங்கி வந்து, பணியப் பெண்களைத் தூக்கிக்கொண்டு போவதுமுண்டு. பணியர்களின் கூப்பாட்டைக் கேட்டு அடுத்துள்ள மலைப்பயிர் நிலங்களில் ஆட்கள் இருந்தால், அவர்கள் ஓடிவந்து அந்த அக்கிரமக்காரர் களை வேட்டையாடிப் பிடித்தோ துப்பாக்கியால் சுட்டுக் கொன்றோ விடுவார்கள். என்றாலும், அநேக நேரங்களில் அந்தப் புத்திசாலிக் காட்டுவாசிகள் கையில் கிடைத்த பெண்களைத் தூக்கிக்கொண்டு அந்த அரபிக்குன்றுக்கு அப்பால் ஓடித் தப்பித்துக் கொள்வது பழக்கம்.

அதுபோல் ஒரு சமயம், காட்டு மனிதர்கள் பெண் திருட்டுக்காக இறங்கி வந்த நேரத்தில் ஊரார்கள், அவர்களை வேட்டையாடிய போதுதான் நம் மாத்தன் அவர்களிடம் அகப்பட்டுக்கொண்டான்.

நாராயண நம்பியாரும், அவருடைய கூட்டாளிகளும் கட்டப் பட்டுள்ள மாத்தனைப் பிடித்து இழுத்துக்கொண்டு, கோடவுனின் முற்றத்தை அடைந்தார்கள். கோடவுனின் வராண்டாவில் ஐந்தாறு விருந்தினர்கள் அமர்ந்து கொண்டிருந்தார்கள்.

நாராயணன் நம்பியாரின் மைத்துனன் குஞ்ஞி அனந்தக் குறுப்பும், பழக்கமில்லாத ஐந்தாறு பேர்களும் அங்கே இருந்தார்கள்.

நாராயணன் நம்பியார் சிரித்துக்கொண்டே மைத்துனனின் அருகில் சென்று, "அட, இதென்னா? எந்த முன்னெச்சரிக்கையும் கொடுக்காம திடீர்னு வந்திருக்க. இவங்கள்ளாம் யாரு? தெரியலியே!" என்றார்.

"எல்லாத்தியும் சொல்றேன்" குஞ்ஞி அனந்தக்குறுப்பு, கட்டப்பட்டுள்ள அந்த நிர்வாண ஜீவனை ஆச்சரியத்துடன் பார்த்துக் கொண்டு, "நீங்க வேட்டயாடிப் புடிச்சிக்கிட்டு வந்திருக்கீங்களே, யாரவன்?" என்று கேட்டான்.

"அரேபியன் -- நீங்க காட்ல இருக்குற அரேபியனப்பத்தி கேள்விப்பட்டதில்ல? இப்ப நல்லா பாத்துக்குங்க. நாங்க காட்டுப் பணியனுங்களத் தொரத்தினப்போ, இவன் பாற இடுக்கில பதுங்கிகிட்டு நின்றான். அப்பத்தான் இவன் ஆட்டுக்கிட்டான்" என்று நம்பியார் விவரித்தார்.

மாத்தன் மெல்லத் தலையைத் தூக்கிப் பெரிய துக்கத்துடன், வராண்டாவில் இருக்கும் ஆட்களையெல்லாம் ஒருமுறை பார்த்தான், விருந்தாளிகளின் கூட்டத்தில், அறிமுகமுள்ள ஒரு முகத்தைக் கண்டதும் மாத்தன் கண்களைச் சிமிட்டி குழித்துப் பார்த்தான். திடீரென அவன் கைகளை உதறிக்கொண்டு பரிதாபக் குரலில், "ஜான் சாரு, ஜான்சாரு, என்னக் காப்பாத்துங்க" என்று கூப்பாடு போட்டான்.

தாங்கள் அதுவரையில், அபூர்வப் பிறவியான அரேபியன் என்று நம்பி ஆவலுடன் இருந்த அந்த உருவம், திடீரென மலையாளம் பேசி கூக்குரலிட்டதைக் கேட்டபோது, அவர்கள் எல்லாரும் பைத்தியங்களைப்போலத் திகைத்து விட்டார்கள்.

ஜான் முன்னால் வந்து மாத்தனின் தோளைத் தொட்டு, "அடடா! இதாரு! நம்ம மாத்தன்தானே? டேய், நீ எப்படி இந்தக் கொழப்பத்துல வந்து மாட்டிக்கிட்டே?" என்று கேட்டான்.

"சொல்றேன் சார்!" என்று கூறிய மாத்தன் நாணிக்கோணி, "என்ன அவுத்துவுடச் சொல்லுங்க சார்" என்று நிலத்திலிருந்து இருமுறை துள்ளினான்.

ஜான், நாராயணன் நம்பியாரிடம் வேண்டுகோள் விடுக்கும் குரலில், "தயவு செஞ்சு, இந்த ஆள அவுத்து விடுங்க. இந்த ஆளு அரேபியனோ நீக்ரோவா இல்ல. எங்களப்போல இங்க குடியிருக்கிற ஒரு ஏழைக்கிறிஸ்துவன்தான்" என்று சொன்னான்.

நாராயணன் நம்பியார் நாக்கை நீட்டிக் கண்களை உருட்டியவாறு, மாத்தனை ஒருமுறை நோக்கினார். பிறகு, குலுங்கிச் சிரித்துக்கொண்டே, "நல்ல மனுசம்பா நீ. எங்களயெல்லாம் பைத்தியமாக்கிட்டியே? ஒடம்புல ஒரு துண்டு துணிகூட இல்லாம, பெருங்காட்ல சுத்திவர்ற கெட்டிகாரம்பா நீ. இதுவரைக்கும் ஒரு வார்த்தையக் கூடப் பேசாம எங்களயெல்லாம் முட்டாளாக்கிட்டப்பா....அல்லது, இவனுக்குப் பைத்தியமா இருக்குமோ?" என்று நாராயணன் நம்பியார் ஜானுக்கு நேரே திரும்பிப் பார்த்துச் சொன்னார்.

"பைத்திய மொண்ணுமில்ல," ஜான் சிரிப்பை அடக்கிக்கொண்டு சொன்னான்: "இவனோட சுபாவமே அப்படித்தான்......"

ஜான் தன்மேல் போட்டிருந்த துண்டை எடுத்து மாத்தன் இடுப்பில் சுற்றிக் கட்டினான்.

"இப்படி அலையறதுதான் இவன் தொழிலா?" என்று குஞ்ஞி அனந்தக்குறுப்பு கேட்டான்.

"அதெல்லாமில்ல. இவனுக்குச் சொந்தமா நெலம்லாம் இருக்கு" என்று விருந்தினர்களில் மற்றொருவனான செரியான் சொன்னான்.

"எங்க?"

"ஜான் சார் எஸ்டேட்டுக்கு மேற்கால, ஆறு மைல் தூரத்துல இருக்கிற குளியன் மலையில இருக்கு."

"அடேப்பா! குளியன் மலயிலா?" நாராயணன் நம்பியார் ஆச்சரியத்துடன் கேட்டார்! "இங்கிருந்து கொறைஞ்சது பத்துமைலு தூரமாவது இருக்கும்ல. அங்கிருந்து எதுக்காக இவன் இங்க வந்துட்டான்?"

"அதயெல்லாம் மறுபடி கேக்கலாம். இவன் கட்டைக் கொஞ்சம் அவுத்து வுடணும்"

"டேய் அம்பூ, அவன் கட்ட அவுத்துவிடு" நாராயணன் நம்பியார், தன் காரியஸ்தன் அம்புக்குறுப்பிடம் உத்தரவிட்டார்.

மாத்தன் சுதந்திரமடைந்தான்.

காரியஸ்தன் அம்புக்குறுப்புக்கும், அங்கே கூடியிருந்த மற்ற நாயர்களுக்கும் அடக்க முடியாத ஏமாற்றமும் கோபமும் உண்டாயிற்று. மிகச் சிரமத்துடன் பிடித்து, மனிதக் கரடியைக் கட்டிக் கொண்டு வருவதைவிட மிக முன்னெச்சரிக்கையுடனும், எதிர்ப்பார்ப்புகளுடனும், ஆர்ப்பாட்டத்துடனும் தாங்கள் அழைத்துக்கொண்டு வந்த ஜீவன், எங்கேயோ தெற்கே இருந்து

வந்த ஒரு "அண்ணாச்சி" தான் என்றதும், அவர்கள் ஒவ்வொருவருக்கும் மாத்தனின் மொட்டைத் தலையைக் கருங்கற்களால் இடித்து நசுக்கினாலென்னவென்று தோன்றியது.

மாத்தன் கைகளால் தலையைத் தடவிக்கொண்டே, முற்றத்தில் அமைதியாகக் குந்தினான். ஜான், மெதுவாக அவனிடம் சென்று நடந்தது அனைத்தையும் கேட்டறிந்தான்.

மாத்தனின் சாகச யாத்திரையைப் பற்றின விவரங்கள், அவர்களுக்கு அன்று முழுவதும் நல்ல பொழுது போக்குக்கு இடமளித்தன.

குஞ்ஞி அனந்தக்குறுப்பு தன் நண்பர்களை நாராயணன் நம்பியாருக்கு அறிமுகப்படுத்தினாள்:

"இவுரு ரிட்டயர்டு போலீஸ் இன்ஸ்பெக்டர் மாதவன் அடியோடி, இவுரு இன்ஸ்பெக்டர் மைத்துனன் தாமோதரக் குறுப்பு - மிலிட்டரி கம்மீஷன்ட் உத்தியோகஸ்தர். இவன் நம்ப ஜான் - இங்கிருக்கிற எஸ்டேட்டுக்குச் சொந்தக்காரன். மத்த ரெண்டு பேரும் ஜானோட நண்பருங்க - செரியான், வர்க்கீஸு திருவிதாங்கூர்லேந்து வந்து நம்ம நாட்ல குடியேறி விட்ட மொதலாளிங்க. நாங்க எல்லாரும் ரெண்டு நாளு வேட்டைக்காக வத்திருக்கோம்."

"ரொம்ப சந்தோஷம்!" நாராயணன் நம்பியார் விருந்தினர்களை மீண்டும் வரவேற்று, "கம்பீரமான வேட்டைக்கு இன்னிக்கே ஏற்பாடு செய்யறேன். நானும் கூட வர்றேன். சாயங்காலமா நாம பொறப்படுவோம். நீங்க சாப்புட்டுட்டு சொகமா ரெஸ்டெடுங்க" என்று கூறினார்.

நாராயணன் நம்பியார் அம்புக்குறுப்பை அழைத்து, எல்லோருக்கும் சாப்பாடு தயாரிக்க ஏற்பாடு செய்தார்.

"நீங்க இங்கயே இருங்க. நான் பணியக் குடிசைங்களுக்குப் போயி வர்றேன். எத்தனப் பணிச்சிங்கள அந்தக் காட்டுப் பணியனுங்க கொண்டுக்கிட்டு போயிட்டாங்கன்னு தெரியல!"

நாராயணன் நம்பியார் ஒன்றிரண்டு நாயர்களையும் அழைத்துக்கொண்டு, பணியர்களின் குடியிருப்புக்கு நடந்தார்.

பணியக் குடிசைகளிலிருந்து கூட்டமாக அழுகைக் குரல்கள் முழங்கிக் கொண்டிருந்தன. மூன்று பணிச்சிகளைக் காணவில்லை.

நாராயணன் நம்பியார் அவர்களைச் சமாதானப்படுத்தினார். மனைவிகளை இழந்த பணியர்களின் மறு விவாகத்துக்காக

நெல்லும், துணியும், கள்ளும், கொஞ்சம் பணமும் உடனே கிடைக்கும் என்று சொன்னதும் அவர்களுக்குச் சமாதானமாயிற்று.

அப்புறம் வேட்டைக்கான தயாரிப்புகள் நடந்தன. துப்பாக்கிகளைத் துடைத்து சரிப்படுத்தினார்கள். டார்ச் லைட்டுகளில் புதிய பாட்டரிகளை நிரப்பினார்கள். மருந்துப் பைகளையும், உணவுப் பைகளையும் கட்டிச் சரி செய்தார்கள். காட்டில் இருக்கும் போது சாப்பிடுவதற்காகக் கொஞ்சம் உணவு வகைகளையும் எடுத்துக்கொண்டார்கள். காட்டில் வழி காட்டுவதற்கும், சாமான்களைச் சுமப்பதற்கும், மற்ற உதவிகளுக்குமாக வேட்டையில் திறமைசாலிகளாக இரண்டு பணியர்களையும் அழைத்துக் கொண்டார்கள்.

மாலை நேரம் நெருங்கியதும் அவர்கள் புறப்பட்டார்கள். கூட்டத்தில் அவர்கள் மாத்தனையும் சேர்த்துக் கொண்டார்கள். மாத்தன் உடுத்திக்கொள்ள ஓர் அரை நிக்கரும், காக்கிக் கோட்டும் நாராயணன் நம்பியார் கொடுத்துதவினார். நம்பியாரின் மிலிட்டிரிக்கார மருமகன் விடுமுறையில் வந்தபோது விட்டுப் போன பழைய பட்டாள உடுப்புளில் இருந்த காக்கி உடைகள் தான் அவைகள்.

## 41

குடகு மலைகளிலிருந்து புறப்பட்டு இருளடர்ந்த பாறை வெடிப்புகள் வழியாகவும், மனித வாடையில்லாத பெருங்காடுகளிலும், புகுந்து முழக்கமிட்டு ஓடிவரும் அந்தக் காட்டாறு, அங்குள்ள இரண்டு நெடுங்குன்றுகளின் அடிவாரம் வழியாக வளைந்து பாய்ந்து, கீழே பயங்கரமாக உள்ள ஒரு மடுவில் சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொள்கின்றது.

ஏறக்குறைய வட்டவடிவில் அமைந்துள்ள அந்த மடுவைச் சுற்றிலும் அடர்ந்த காடுகள் இருந்தன. ரோஸ்வுட், தேக்கு, வெண்தேக்கு முதலிய மிக முதிர்ந்த மரங்களும், பெரிய பெரிய காட்டு வள்ளிக்கொடிகளும், மலைப்பாம்புகளும் ஒன்றோடொன்று பின்னிப்பிணைந்து உராய்ந்து மர்மர சப்தத்தை எழுப்புவதால், இயற்கை அழகு அங்கே கொள்ளை கொண்டது. ஓர் அங்குல நிலம்கூடக் காணமுடியாமல் அடிமரங்கள் எல்லாம் ஒருங்கிணைந்து மூடிக்கொண்டிருந்தன. மரங்களைச் சுற்றிப் படர்ந்துள்ள வள்ளிக் கொடிகளில், கருத்த சைக்கிள் டயர் போலுள்ள

மலை அட்டைகள் இந்த உலகத்தையே அறுத்து முறிப்பதுபோல் கர்ணகொடூரமான சப்தத்தை வெளிப்படுத்திக்கொண்டிருந்தன. அந்த வன இயற்கையின் தொழிற்சாலையின் ஹூங்காரச் சப்தம் போல் வேழாம்பல் பட்சி ஹூம் என்று முனகியது. வேனல் சூட்டை ஏற்று விம்மும் காட்டுமல்லிகைப் பூக்களைச் சுற்றி, ஜப்பான் விசிறிகளைப் போலுள்ள வண்ணத்துப்பூச்சிகள் பறந்து திரிந்தன.

சித்திரை மாதம் ஆனதால் மடுவில் உள்ள தண்ணீர் பாதிவரை வற்றியிருந்தது. மடுவின் கரை ஓரத்தில் ஜலக்கிரீடை செய்து கொண்டு நிற்கும் கரும்பாறைகள், இப்போது நீர்குறைந்ததால் முழு நிர்வாணமாக வறண்டு இருந்தன. அங்கங்கே, தண்ணீர் படிப்படியாக உள்ளடங்கிய பாகங்களில் நரியின் நகக் குறிகள் பதிந்து காணுகின்றன. பழைய நதி மார்க்கங்களில் பல நிறங்களிலும் அளவுகளிலும் கூழாங்கற்கள் நிறைந்து கிடக்கின்றன.

இப்போது அந்த ஆற்றின் தன்மையைக் கண்டால், ஒரு மலைப்பாம்பு முட்டையிட்டு அடைகாப்பது போல் தோன்றும்.

அன்று மாலை நேரம் ஆனதும், அங்கே அசாதாரணமாகச் சில சலனங்களும் சப்தக் கோலாகலங்களும் உண்டாயின. இவ் விடத்திய அமைதியை உடைத்துக்கொண்டு சில மனிதக் குரல்கள் கேட்கத் தொடங்கின. காட்டு வள்ளிகளையும், புதர்களையும் வெட்டி நீக்கி வழியுண்டாக்கிக்கொண்டு சில மனித உருவங்கள், அந்த மடுவின் கரைக்கு நகர்ந்து வந்தன. கையில் பெரிய பெரிய கத்திகளை நீட்டிப் பிடித்துக்கொண்டு, வீராவேசத்துடன் வரும் அந்த அரை நிர்வாண மனிதர்களின் முகங்கள், அவர்களின் தலையில ஏற்றி வைத்திருந்த காட்டுக்கழிகளின் பெரிய கட்டுகளின் பின்னே மறைந்திருந்தன.

அவர்களின் பின்னால், அம்பையும் வில்லையும் குடுக்கை களையும் மீன் வலைகளையும் மற்ற உபகரணங்களையும் சுமந்து கொண்டு பெண்கள் கூட்டம் ஒன்றும் நகர்ந்து வந்தது. அவர்களின் பின்னால், சில சட்டிப்பாத்திரங்களையும், படுக்கைப்பாய் களையும், எரியாத பந்தல்களையும் தலையில் வைத்துக்கொண்டு சில சிறு பிள்ளைகளும் நாய்களும் வெளிப்பட்டார்கள்.

முன்னால் வந்த ஆண்கள் தலையில் உள்ள தோல் பைகளைக் கீழே வைத்துவிட்டு, கரையிலுள்ள பாறைகளின் மேல் உட்கார்ந்து ஓய்வெடுத்தார்கள். பெண்கள், வில்லையும் அம்பையும் கீழே

இறக்கி வைத்துவிட்டு, மடுவின் கரையில் ஒரு பக்கமாகக் கற்களையும் சரளைகளையும் பொறுக்கிவிட்டு, தரையைச் சமப்படுத்தத் தொடங்கினார்கள். பிள்ளைகள், தாங்கள் எடுத்துவந்த சட்டிப் பாத்திரங்களைச் சமப்படுத்தப்பட்ட இடத்தில் பரப்பி வைத்துவிட்டு, நீந்திக் குளிப்பதற்காக மடுவிற்கு ஓடினார்கள். நாய்கள் அங்கேயும் இங்கேயும் அலைந்து கொண்டிருந்தன.

ஆறு மைல் தூரத்திலுள்ள மலைப்பிரதேசக் காடுகளிலிருந்து புறப்பட்டு வரும் *கரிம்பாலக் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் தான் அவர்கள். ஆண்களும், பெண்களும் குழந்தைகளுமாக ஐம்பது பேர்கள்வரை இருந்தார்கள். அவர்கள் மடுவைக் குழப்பி மீன் பிடிக்க வந்திருக்கின்றார்கள்.

நேரம் அந்தியை நெருங்கியது. பெண்கள் உருண்டைக் கற்களை எடுத்து வைத்து, அடுப்புக் கூட்டி மடுவிலிருந்து தண்ணீர் மொண்டுவந்து அடுப்பில் ஏற்றி தீப்பற்ற வைத்து, இரவு உணவைத் தயார் செய்து கொண்டிருந்தார்கள். ஆண்கள் எழுந்து சென்று மடுவின் இருபக்கங்களிலும் அணை கட்டத் திட்டம் போட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஆற்றுப்பக்கத்தில் ஊதா நிறப் பட்டுக்குடையை விரித்து நிற்கும் நீர் மருத மரத்தைச் சுட்டிக்காட்டி,"அந்த மரத்துக்குக் கீழே கட்டணும்" என்று சந்திரன் அபிப்பிராயப்பட்டான்.

அவர்கள் பெரிய பெரிய பாறைகளை உருட்டிவந்து, மடுவின் மேல் இடுங்கிய பக்கமாக நீள வாட்டத்தில் நிரப்பி வைத்தார்கள். அதன் ஓட்டைகளில் எல்லாம் சரளைக் கற்களையும், மரக்கிளை களையும் துருத்தி அணையைப் பத்திரப் படுத்தினார்கள்.

மடுவின் கீழ்பாகத்தில் அவர்கள் மற்றோர் அணையைத் கட்டி முடித்தார்கள். இருவர், கட்டுமரம் கட்ட மூங்கில் தேடிக் காட்டிற்குச் சென்றார்கள்.

குழந்தைகள் காட்டில் சென்று, பிரம்புக் கொடிகளை வேட்டிக் கொண்டு வந்து புது அம்புகளைச் செதுக்கினார்கள்.

அந்தி மங்கியது. காட்டு மிருகங்களை அகற்றுவதற்காக, அவர்கள் காய்ந்த மரக்கட்டைகளுக்குத் தீ மூட்டினார்கள். காய்ந்த மூங்கில் கழிகளைக் கொளுத்தி உயர்த்திப் பிடித்துக்கொண்டு, ஆட்கள் அங்குமிங்கும் நகர்ந்து கொண்டிருந்தார்கள். நன்றாகத்

---

* கரிம்பாலர்கள் - காட்டுவாசிகள் இனம.

தீப்பிடித்துக்கொண்ட அடுப்பில் செந்தீ ஜ்வாலைகளின் ஒளியும் கரிம்பால யுவதிகளின் கழுத்தில் அணிந்திருந்த கல் மாலையும், காதிலிருந்த ஈயத்தோடும் மின்னிக்கொண்டிருந்தன. நிழல்களை நோக்கி நாய்கள் உரக்கக் குரைத்தும் ஓலமிட்டும் கொண்டிருந்தன.

சந்திரன் ஆற்றோரத்தில் அங்கங்கே குழி பறிக்கத் தொடங்கினான். சாமனும் அம்புவும் கோரைப்புற்களை வெட்டி நொறுக்கி, அந்தக் குழிகளில் நிறைத்து அதன்மேல் சிறிது சரளைக் கற்களையும் மண்ணையும் வாரிப்போட்டு கொஞ்சம் தண்ணீரையும் ஊற்றினார்கள். கூர்மையான தண்டுகளைக் கைகளில் ஏந்திக்கொண்டு கரிம்பாலர்களும் கரிம்பாலத்திகளும் *கட்டு இடிக்கத் தயாராக நின்றார்கள். ஆண்களும், பெண்களுமாகக் கலந்து ஐந்தாறு பேர்கள் அடங்கிய கூட்டங்களாகப் பிரிந்து, அவர்கள் ஒவ்வொரு குழியைச் சுற்றிலும் அணி வகுத்தார்கள். அத்துடன் பாடல்களும் பொங்கி வந்தன.

பாடல்களின் தாளத்தை அனுசரித்து உலக்கைகள் ஒரே நேரத்தில் ஒன்று சேர்ந்து, குழியில் பதிந்து கொண்டிருந்தன. குயவனின் சக்கரம் சுற்றுவது போல் அவர்கள் வட்டமடித்துச் சுற்றிக் கொண்டிருந்தார்கள்.

முன்னோர்களான வீராத்மாக்களின் சோகக் கீதங்களைத்தான் அவர்கள் பாடினார்கள். கிழவன் சாத்தப்பன் விகாரக் குரலில் நீட்டி இழுத்துப் பாடும் அந்தப் பழம்பாட்டுக்களை, அவர்கள் ஆவேசத்துடன் தொடர்ந்து பாடினார்கள்.

வேட்டைக்குச் சென்று நரியைக் கொன்று, அதன் நாக்கை அறுத்துக் கொண்டு திரும்பும் கரிம்பாலத் தலைவனைக் கருநாகம் கடித்து இறந்த கதையும், வைர மோதிரத்தை விழுங்கி வீரமரணமடைந்த பழசிப்பொன்னு தம்புரானின் வீர தீர வரலாறுகளும் மற்றவைகளும் உள்ளடக்கிய பரம்பரைப் பழம் பாடல்கள், இரவின் அமைதியைக் கிழித்துக் கொண்டு ஆகாயத்தில் உயர்ந்தன. இடையிடையே ஆர்ப்பாட்டக் குரல்களும் உண்டாயின.

இடித்துப் பக்குவப்பட்டவைகளை ஓரிடத்தில் வாரிக் கூட்டி விட்டு, குழியில் மீண்டும் இலைகளையும் சரளைக்கற்களையும் மண்ணையும் நிரப்பி, தண்ணீரை ஊற்றி, அவர்கள் இடிக்கத் தொடங்கினார்கள்.

---

* கட்டு - மீன் பிடிக்க உதவும் குழம்பாலான மருந்துஶ

"ராமா...'கட்டு' வருதுடா..." என்று ஒரே கூட்டம் கூவியது

"மண்ணாக் கொண்டாடா கேளா..." அடுத்த கூட்டமும் கூவியது.

திடீரென்று நாய்கள் கூட்டமாகக் குறைந்தன. காட்டுக்குள்ளே இருந்து ஓசையும் வெளிச்சமும் கிளம்பியது.

கரிம்பாலர்கள் இடிப்பதையும் பாடுவதையும் நிறுத்திவிட்டு உற்றுக்கவனித்தார்கள். வேட்டைக்கான டார்ச்சு லைட்டின் நீண்ட பிரகாச ஒளிக்கீற்று அங்கே வீசியது.

நாராயணன் நம்பியாரும் அவருடைய கூட்டமும் ஆற்றின் கரைப் பக்கம் பிரவேசித்தார்கள்.

கரிம்பாலத் தலைவன் சந்தப்பன் முன்னால் வந்து, நாராயணன் நம்பியாரின் முன்பு தலைகுனிந்து கைகட்டி, வாய்பொத்தி வணங்கி நின்றான்.

நாராயணன் நம்பியாரின் அடிமைகளான கரிம்பாலர்கள்தான் சத்தப்பனும் அவன் கூட்டமும்.

"என்ன சந்தப்பா—*நஞ்சிடப் போறீங்களா? ஏன் எனக்குச் சொல்லல? சரி, எப்படியிருந்தாலும் சந்தோஷம்தான். நாங்களும் வந்து சேர்ந்துட்டோம்ல."

"ஓடையத் தம்புரான் உத்திரவப் போல..." சந்தப்பன் வணங்கிக் கொண்டு நின்றான்.

அடியோடியின் நேரே திரும்பி, "ஒங்களுக்கு சொகமில்லன்னா இங்கியே படுத்துக்கலாம். மாத்தனையும் இங்கியே வுட்டுடுவோம். நாங்க வேட்டயாடிட்டு வெடியறதுக்குள்ள திரும்பிடறோம்." என்று கூறினார், நாராயணன் நம்பியார். அடியோடி சம்மதித்தான்.

சந்தப்பனை அழைத்து, "இந்த எஜமான இங்கிய வுட்டுட்டுதான் நாங்கள் போவப் போறோம். அவுருக்கு வேணுங்கற பணிவிடைகளயெல்லாம் செஞ்சிக் கொடுக்கணும். தெரிஞ்சுதா?" என்று நாராயணன் நம்பியார் உத்தரவிட்டார்.

"ஓடையத் தம்புரான் உத்தரவுப் போல....." சந்தப்பன் தொண்டை இடறியவாறு கூறினான்.

"மாத்தன் எங்கே?" நாராயணன் நம்பியார் தேடினார்.

மாத்தன் தலைகுனிந்து கொண்டு முன்னால் வந்தான். அவனுடைய தோளில் துப்பாக்கிக் குண்டு பாய்ந்து இறந்த இரண்டு கலைமானும் ஒரு முயலும் இருந்தன.

---

* நஞ்சிடுதல் - தண்ணீரில் கட்டிடித்த குழம்பை கலக்குதல்.

"நீயும் இங்கியே இருந்துக்க" நாராயணன் நம்பியார் மாத்தனிடம், கூறினார்: "தூங்கிடாதே"

நம்பியாரும் கூட்டாளிகளும் காட்டிற்குள் மறைந்தார்கள்.

சந்தப்பன் அடியோடிக்குப் படுத்துத் தூங்குவதற்கான ஒரு பர்ணப்படுக்கையைத் தயார் செய்து கொடுத்தான். அடியோடி அந்தப் பச்சிலைப் படுக்கையில் மல்லாந்து படுத்தான்.

காட்டுக்குள்ளே இருந்து சில இனந்தெரியாத சப்தங்கள் மாத்தனைப் பயமுறுத்தின. அவன், எரிந்து கொண்டிருக்கும் மரத்தடியின் அருகில் நகர்ந்து நின்றான். கொழுந்துவிட்டு எரியும் தீயின் அருகில், பச்சை மாமிசத்தை வைத்துக் கொண்டு சும்மா இருப்பதற்கு மாத்தனால் முடியவில்லை. அவன் மானின் ஒரு தொடையை அரித்தெடுத்து, தீயில் வேக வைத்தான். இறைச்சி சுடுகின்ற மணம் எழும்பியபோது நாய்கள் அவனைச் சுற்றிக் கூடின. மாத்தன் அவைகளை அலட்சியப்படுத்திவிட்டு மெதுவாக, வெந்து கொண்டுருந்த இறைச்சித் துண்டைக் கடித்துத் திங்கத் தொடங்கினான்.

அடியோடி ஆகாயத்தைப் பார்த்தவாறு மல்லாந்து கிடந்தார். ஒரு மேகக் கீறலைக்கூடக் காண்பதற்கு முடியாத தெளிந்த ஆகாயம், வைரக்கற்களைப் பரப்பிவிட்ட நீலப் பட்டு அங்கவஸ்திரத்தைப் போல் மின்னிக் கொண்டிருந்தது. கரிம்பாலர்களுடைய பாட்டின் பல்லவி சோகம் குழம்பிய ஒரு ஸ்வரத் தாரையில் உயர்ந்து வந்தது. அரச மோதிரத்திலுள்ள வைரக்கல்லை எடுத்து விழுங்கி, மரணத்தை எதிர்நோக்கி நிற்கும் பழசி தம்புராவின் மனோ ராஜ்யங்களைத் தான் அவர்கள் இப்போது வர்ணித்துப் பாடிக்கொண்டிருந்தார்கள். அந்தப் பாட்டைக் கேட்டுக் கொண்டே அடியோடி உறங்கி விட்டார்.

எவ்வளவு நேரம் அவ்வாறு உறங்கினார் என்று தெரியவில்லை. நாய்கள் உச்சத்தில் குறைத்துக் கலாட்டா செய்துகொண்டிருந்த போது அடியோடி உறக்கம் கலைந்து கண்களைத் திறந்து பார்த்தார்.

கரியம்பாலர்கள் விரிப்பை பிரித்துப் படுத்துத் தூங்கி விட்டிருந்தார்கள். அவர் மாத்தனை மெல்லத் திரும்பிப் பார்த்தார். அவனுக்கு அடுத்துள்ள மரக்கூட்டங்களின் முன்னால் ஒரு நீண்ட நிழல் அவருடைய கண்களில் பட்டது. திடீரென்று ஒரு சிறிய பொட்டலம் மாத்தன் முன்னால் வந்து விழுந்ததையும், மாத்தன் அந்தப் பொட்டலத்தைக் கையில் எடுத்து தன்னுடையக் காக்கிக்

கோட்டின் அடிப் பாக்கெட்டில் மறைப்பதையும் அடியோடி கண்டார். மாத்தன் திரும்பி சந்தேகத்துடன் அடியோடியைப் பார்த்தபோது, அவர் கண்களை மூடி மெல்லச் செயற்கையாகக் குறட்டை இழுத்தார்.

ஐந்து நிமிஷம் கழிந்ததும் அடியோடி மீண்டும் கடைக் கண்ணால் ஒரு முறை நோக்கினார். அந்த நிழல் மறைந்து விட்டிருந்தது. மாத்தன் ஒரு மரக்கட்டையின் மேல் தலையைச் சாய்த்து, தூங்குவதற்கு ஏற்பாடு செய்து கொண்டிருந்தான்.

தனக்குத் தற்செயலாப் பார்க்க முடிந்த அந்த நிகழ்ச்சியைக் குறித்து, அடியோடி பலவாறாகச் சிந்தித்துப் பார்த்தும் அவருக்கு ஒரு பிடிப்பும் கிடைக்கவில்லை. ஏதோ முக்கியமான ஒரு ரகசியம் அந்த நிகழ்ச்சிக்குப் பின்னால் இருக்க வேண்டுமென்று அவருக்கு உறுதியாயிற்று.

அது என்னவாக இருக்கும்?

அரைமணி நேரம் கழிந்ததும், அடியோடி மெல்ல எழுந்து உட்கார்ந்து கொண்டு நாலாபுறமும் பார்த்தார்.

'நஞ்சி'டித்துத் தளர்ந்துபோன கரிம்பாலர்கள் சுக நித்திரையில் மூழ்கி விட்டிருந்தார்கள். மரத்தின் கீழே கரிம்பாலத்திகளும் குழந்தைகளும் தலைமாடு கால்மாடாகப் படுத்துத் தூங்கினார்கள். நாய்கள் கூட அசையாமல் படுத்திருந்தன. காளை குறட்டை யிடுவதுபோல் மாத்தன் குறட்டை இழுத்துக் கொண்டிருந்தான்.

அடியோடி மாத்தன் அருகே பதுங்கிச் சென்றார். அவன் அருகே நெருப்பு எரிந்து அடங்கி, அங்குமிங்கும் மின்னிக்கொண்டிருக்கும் கனல்களாகிக் கொண்டிருந்தன.

அடியோடி மாத்தனின் முகத்தைக் கூர்ந்து பார்த்தார். ஆழ்ந்த நித்திரை; அடியோடி மிகவும் எச்சரிக்கையுடன் மாத்தனுடைய கோட்டில் அடிப்பாக்கெட்டில் கையை நுழைத்து, அந்தப் பொட்டலத்தை இழுத்து எடுத்தார். ஒரு கவர்! அதைத்த திறந்து பார்த்ததும், அதன் உள்ளே இருப்பதைக்கண்டு அடியோடி கண்களைச் சிமிட்டவே இல்லை. பத்து ரூபாய் நோட்டுக்கட்டு ஒன்று. புத்தம் புதிய நோட்டுகள்! முழுவதையும் எண்ணிப்பார்க்க முடியவில்லை. ஏறக்குறைய நூறு நோட்டுக்களாவது இருக்கு மென்று அதன் கனத்தைக் கொண்டு ஊகித்துக்கொண்டார்.

அடியோடு அந்த நோட்டுக்களை அவை இருந்தபடியே கவரில் வைத்து, அந்தப் பொட்டலத்தை மாத்தனின் பாக்கெட்டிலேயே

வைத்து விட்டுத்திரும்பி நடந்து வந்து தான் படுத்திருந்த இடத்திலேயே படுத்துக்கொண்டார்.

அடியோடிக்கு தூக்கம் வரவே இல்லை. மறுபடியும் ஏதாவது நிகழலாம் என்று எண்ணி, அவர் மாத்தனிடமிருந்து பார்வையைத் திருப்பாமல் ஒருக்களித்துப் படுத்தாள். ஆனால், ஒன்றும் நடக்கவில்லை.

## 42

விடியற்காலையின் பொன் தாலியைப் போல் கிழக்கே விடி நட்சத்திரம் தெரிய ஆரம்பித்தது.

கரிம்பாலர்கள் எழுந்து மூங்கில் பந்தங்களை எரிய வைத் தார்கள். பந்தங்களைப் பிடித்துக்கொண்டு அவர்கள் கட்டு மரங்களில் ஏறிக்கூடினார்கள். கட்டு மரங்களை மெல்லத் துழாவிய வாறு அவர்கள் மடு முழுவதும் சஞ்சரித்து, கட்டுமரத்தில் சேர்த்து வைத்திருந்த 'நஞ்சு'வை வாரித் தண்ணீரில் கலக்கிய பின் கட்டுமரத்தைக் கரைக்கு அருகில் கொண்டுவந்து நிறுத்தி விட்டுக் கீழே இறங்கி மீண்டும் தூங்குவதற்குப் படுத்தார்கள்.

அடியோடி எழுந்து கண்களைத் திறந்து பார்த்தபோது, நேரம் மெல்ல வெளுத்துக்கொண்டிருந்தது. கரிம்பாலர்கள் அணைகளின் சிறு சிறு ஓட்டைகளில் கல்லையும், கட்டையையும் துருத்தி, மீன் கூடுகளைப் பத்திரப்படுத்தி உற்சாக மிகுந்தவர்களாக அங்கு மிங்கும் நகர்ந்து கொண்டிருந்தார்கள். கரிம்பாலத்திகள் கஞ்சி காய்ச்சுவதற்காக அடுப்பைப் பற்ற வைத்தார்கள். மாத்தன் கால்களுக்கிடையில் கைகளை நுழைத்துக்கொண்டு குறட்டை விட்டுக்கொண்டு தூங்கினான்.

அடியோடி எழுந்து உட்கார்ந்து, ஒரு சிகரெட்டுப் பிடித்தார். இரவு நடந்த நிகழ்ச்சி அவருடைய சிந்தனைகளை மீண்டும் கிளறத் தொடங்கியது. வேட்டைக்குப் போனவர்கள் இன்னும் திரும்பி வரவில்லை.

நேரம் நன்கு பிரகாசமாயிற்று. மரத்தலைப்புகளிலும், புற்களின் நுனிகளிலும் தங்கியிருந்த பனித்துளிகள் மெல்ல மறைந்து விட்டன. மடு, உலைக்களத்திலிருந்து எடுத்த உருக்குக் கேடயத் தைப் போல் மின்னிக்கொண்டிருந்தது.

வெயில் உறைக்கத் தொடங்கிய போது, மடுவில் உள்ள தண்ணீர் சூடேற அரம்பித்தது. அத்துடன் சேர்ந்து 'நஞ்சி'ன் வீரியமும் பரவியது. நஞ்சுபட்ட கண்கள் புகைந்து கலங்கியதினால் மீன்கள் துள்ளித் துள்ளிப் பாயத் தொடங்கின.

கரிம்பாலர்களும் கரிம்பாத்திகளும் அம்பையும் வில்லையும் கையில் எடுத்துக்கொண்டு, இடுப்பில் மீன் கூடைகளையும் கட்டித் தொங்கவிட்டவாறு தண்ணீரில் இறங்கி நின்றார்கள். சில பேர்கள் வெட்டுக் கத்திகளை ஏந்திக் கட்டுமரத்தில் ஏறிக் கொண்டார்கள். குடுக்கைகளை உயர்த்திப் பிடித்துக்கொண்டு ஓரிருவர் தண்ணீரில் சுற்றிச்சுற்றி நடந்தார்கள்.

விஷ வீரியம்பட்டு கண்கள் குருடாகி, எரிச்சலடைந்து, தண்ணீர் மட்டம் அளவுக்குத் துள்ளிப் பாய்ந்து நெருங்கும் மீன்களைக் குறி வைத்து அவர்கள் அம்புகளை எய்யத் தொடங்கினார்கள். அம்பு பட்ட மீன்கள் பிராணவேதனையுடன் தண்ணீரின் அடியில் துடித்து விழுந்தன. அம்பும், அம்பில் கட்டிய கயிறும், கயிறின் முனையில் துள்ளுகின்ற மீன்களைத் தப்பிக்க அனுமதிக்கவில்லை. கரிம்பாலர்கள், கயிரைப் பிடித்து இழுத்து மீன்களைப் பிடித்தெடுத்து அம்பை உருவி, அதன் தலையை உடைத்துக் கூடைகளில் நிரப்பினார்கள்.

அணைகளில் அந்தந்த இடங்களில் துருத்தி வைத்திருந்த மீன் கூடுகளை அடிக்கடி எடுத்து ஒழிக்க வேண்டியிருந்தது.

தண்ணீருக்கு நன்கு சூடேறியபோது, பெரிய மீன்களும் வெளிப்பட்டன. கட்டுமரத்தில் பதுங்கி நின்று கொண்டிருந்த கரிம்பாலர்கள் வெட்டுக்கத்தியினால் அவைகளை வேட்டையாடிக் கொண்டிருந்தார்கள்.

அடியோடி கைக் கெடிகாரத்தை நோக்கினார். பத்து மணி. வேட்டைக்குப் போனவர்கள் இன்னும் வந்து சேரவில்லை. அவருடைய மனதில் பயம் தோன்றியது.

மாத்தன் தன்னுடைய காக்கிச் சட்டையை அவிழ்த்து ஒரு மரத்தின் அடியில் சுருட்டி வைத்துவிட்டு, அரைக் கால்சட்டையை மீண்டும் அணிந்து கரிம்பாலர்களுடன் சேர்ந்து மீன்பிடிக்க நின்று கொண்டிருந்தான்.

பதினோரு மணி.

மீன் வேட்டை முடிந்து கரிம்பாலர்கள் கஞ்சி குடிக்க உட்கார்ந்தார்கள்.

குழந்தைகள் சிறு சிறு மீன்களைச் சுட்டுத் தின்றார்கள். பெண்கள் மீன்களின் செதில்களையும், குடல்களையும் நீக்கிவிட்டு அவைகளைக் காய வைக்கத் தயாரானார்கள். மழைக்காலத்தில் தான் அவைகளை அவர்கள் புசிப்பார்கள்.

கரிம்பாலர்கள் திரும்பிப் போகத் தயாராகிக் கொண்டு நின்றார்கள்.

கிடைத்த மீன்களில் மிகவும் நல்லதும் பெரியதுமான சிலவற்றை எடுத்து வைத்து, எஜமான் வரவுக்காக அவர்கள் காத்துக் கொண்டிருந்தார்கள்.

மடுவின் கரையிலுள்ள மரக்கூட்டங்களின் சந்துகள் வழியாக, நாராயணன் நம்பியாரும் கூட்டாளிகளும் வெளிப்பட்டார்கள்.

நம்பியாரின் இரு தோள்களிலும், ஒவ்வொரு துப்பாக்கியைச் சாய்த்து வைத்திருந்தார். பின்னால், வர்க்கீஸை தூக்கிக்கொண்டு குஞ்ஞி அனந்த குறுப்பும், தாமோதரக்குறுப்பும், நகர்ந்து வந்தார்கள். வேட்டைப் பைகளையும், டார்ச் லைட்டுகளையும், துப்பாக்கிகளையும் சுமந்துகொண்டு மீதியுள்ளவர்களும் வந்து சேர்ந்தார்கள். அவர்களுடன் சேர்ந்து ஒரு பிணத்தைப் போல் வெறுங்கையுடன் செரியானும் வந்தான்.

வேட்டைக்குப் போய்த் திரும்பி வரும்போது வழக்கம் போலுள்ள உற்சாகம் யாருடைய முகத்திலும் பதித்திருக்க வில்லை. சுடுகாட்டிலிருந்து திரும்புவர்களைப் போல் துக்கமுள்ள வர்களாக, மௌனமாய், சுறுசுறுப்பற்று இருந்தார்கள்.

அடியோடி பிரமித்துப்போய் அவர்களின் அருகே ஓடிச் சென்றார். நாராயணன் நம்பியாரிடம்,"என்ன நடந்தது" என்று கேட்டார்.

யாரும் பதில் சொல்லவில்லை.

அவர்கள் வர்க்கீஸை ஓர் ஓலைப்பாயில் கிடத்தினார்கள். அடியோடி வர்க்கீஸின் உடலைத் தொட்டுப் பரிசோதிக்கத் துணிந்தபோது நாராயணன் நம்பியார் அவரைத் தடுத்து, "வேணாம் - தொடவேணாம் - அது பொணம்" என்று கூறினார்.

"ஐயோ! வர்க்கீஸு செத்துட்டாரா?" அவர் வாயைப் பிளந்தார். "எப்படி? நரி கிரி புடிச்சிடுச்சா?".

"இல்ல, ---" நம்பியார் தலையை ஆட்டிவிட்டு, தோளில் இருந்த துப்பாக்கிகளைக் கீழே வைத்துவிட்டு ஒரு பாறையின் மேல் நிமிர்ந்து உட்கார்ந்தார். கொஞ்ச நேரம் அப்படியே சூனியத்தை விழித்துப் பார்த்துக்கொண்டிருந்தார். அவர் வேறு ஒன்றும் சொல்லவில்லை.

"வர்க்கீஸு எப்படிச் செத்தார்?"

"குண்டு பாஞ்சு செத்தான்." நம்பியார் முகத்தையும் பார்வை யையும் சிறிது கூட இறக்காமல் கூறினார்.

அடியோடி எல்லோருடைய முகத்தையும் சந்தேகத்துடன் ஒருமுறை பார்த்தார்.

"விபத்துல மாட்டிக்கிட்டாரா?" அடியோடி நம்பியாரிடம் கேட்டார்.

"அப்படின்னு நெனைக்கத்தான் முடியுது."

அடியோடி சந்தேகத்துடன் செரியானையும் பின் மாத்தனையும் ஒரு முறை நோக்கினார். மாத்தன் ஒரு கூடை மீனைக் கையில் தூக்கிப்பிடித்துக்கொண்டு செரியான் அருகில் வாய்பிளந்து நின்றான்.

இரவில் தன் பார்வையில்பட்ட நிழலையும், பொட்டலம் விழுந்த நிகழ்ச்சியையும் அடியோடி நினைத்துப் பார்த்தார். அவருக்கு விஷயம் புரிந்தது. செரியான் மேலும் மாத்தன் மேலும் சந்தேகப்படத் தொடங்கினார்.

"நாம இனிமே என்ன செய்யணும்?" அடியோடி கேட்டார்.

"ஒடனே நம்ம களத்துக்குப் பொறப்படணும். அங்க போனவுடனே போலீஸுக்கு வெவரம் தெரியப்படுத்தணும்" நம்பியார் கூறினார்.

என்றாலும், அவர்கள் அப்போதே புறப்படவில்லை. அவர்கள் எல்லோருக்கும் நல்ல பசியும் களைப்பும் ஏற்பட்டிருந்தது. அதனால், அங்கே தங்கிக் கொஞ்சம் பலகாரம் செய்து சாப்பிட்டுவிட்டுப் போகலாமென்று அவர்கள் முடிவு செய்தார்கள்.

கரிம்பாத்திகள் தயார் செய்திருந்த அடுப்பில், பாத்திரங்களை வைத்துக் கஞ்சிக் காய்ச்சினார்கள். வேட்டையில் கிடைத்த இறைச்சியையும் கரிம்பாலர்கள் காணிக்கையாகச் செலுத்திய மீன்களையும் பக்குவப் படுத்தி வேண்டிய அளவிற்குச் சாப்பிட்டார்கள்.

## 43

களத்துக்குப் போய்ச் சேர்ந்த உடனே, நாராயணன் நம்பியார் ஒரு கடிதம் எழுதினார். தன் காரியஸ்தனை அழைத்து, உடனே போலீஸ் ஸ்டேஷனுக்குச் சென்று அதைக் கொடுக்கச் சொன்னார். ஜான், செரியான், மாத்தன் மூவரையும் அங்கேயே நிர்ப்பந்தப் படுத்தித் தங்கவும் வைத்திருந்தார்.

மாலை நேரம் ஆனபோது, இரண்டு கான்ஸ்டபிள்களுடன் சப் இன்ஸ்பெக்டர் சுலைமான் அங்கே வந்தார். அடியோடி போலீஸ் இன்ஸ்பெக்டராக இருந்த காலத்தில், அவரின் கீழே அர்டர்லி

கான்ஸ்டபிளாக இருந்தவர்தான், சுலைமான். அடியோடியின் சிபாரிசு பிரகாரம், பின்னால் சுலைமானுக்குப் பதவி உயர்வு கிடைத்தது.

தன்னுடைய பழைய எஜமானனை அங்கே கண்டதும், சுலைமான் மதிப்புடன் சல்யூட் செய்தான். அடியோடி அவனைக் களத்து மாளிகைக்கு அழைத்துச் சென்றார். அங்கேயே அவர்கள் ஒரு மணிநேரம் தங்கள் சொந்த விஷயங்களைப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். நாராயணன் நம்பியாரும் பேச்சில் கலந்துகொண்டார். பிறகு இன்ஸ்பெக்டர் கீழே இறங்கிவந்து, ஜானை அழைத்துச் சென்று சிறிது நேரம் பேசினார். அதன் பிறகு, செரியானையும், மாத்தனையும் அருகில் அழைத்தார்.

"வர்க்கீஸின் மரணத்தைப்பற்றி உங்களுக்கு ஏதாவது விவரம் தெரியுமா செரியான்?" இன்ஸ்பெக்டர் கேட்டார்.

"எனக்கு எப்படித் தெரியும் எஜமான்? நாங்க எல்லாருமே துப்பாக்கியோட காட்ல பல எடங்கள்ள பதுங்கி இருந்தோம். அப்பதான் துப்பாக்கி வெடிச்ச சத்தம் கேட்டுது. புலியோ, மானோ, எதுவோ குண்டுபாஞ்சி வுழுந்துட்டுதுன்னு நெனச்சி நான் டார்ச் அடிச்சி எல்லாரையும் கூப்புட்டேன். பதில் ஒண்ணும் கிடைக்கல. நான் காட்ல தேடனபோது வர்க்கீஸு ஒரு எடத்துல விழுந்து கெடக்குறதப் பாத்தேன். அவன் செத்துட்டிருந்தான். என்னால அத நம்படவே முடியல. நான் அப்படியே தவிச்சிப் போயிட்டேன். கொஞ்ச நேரத்துல நாராயணன் நம்பியாரும் மத்தவங்களும் அங்க வந்தாங்க. அதான் எனக்குத் தெரியும். யாரோட துப்பாக்கிக் குண்டால வர்க்கீஸு செத்தான்னே எனக்குத் தெரியாது. ஒரு வேளை, விபத்து ஏற்பட்டு அவன் துப்பாக்கியே கூட வெடிச்சிருக்கலாம். நாங்க வர்க்கீஸு துப்பாக்கியே பரிசோதிச்சப்போ அதுல மருந்து இல்லாம இருப்பதத்தான் பாத்தோம்."

துக்கத்தினால் செரியானின் தொண்டை இடறிக் கொண்டிருந்தது. முற்றத்து மஞ்சத்தில் கிடக்கும் வரக்கீஸின் பிரேதத்தைச் சுட்டிக்காட்டிக் கொண்டு செரியான் தொடர்ந்தான்.

"நானும் வர்க்கீஸும் கூடப் பொறந்த சகோதரனுங்களப் போல கூடிக்கிட்டு இருந்தோம். கொஞ்சம் காலமா என் செலவுலதான் வர்க்கீஸு வாழ்ந்துகிட்டு இருந்தாங்கற வெஷயத்தக்கூட துக்கத்தோட எஜமானுக்குத் தெரிவிச்சிருக்கேன்."

"நீ துப்பாக்கியச் சுட்டியா?" என்று இன்ஸ்பெக்டர் கேட்டார்.

"நான் நேத்து ஒரு தடவக்கூட சுடல. என் துப்பாக்கில மருந்து நெறச்சதப்போல அப்படியே இருக்கு"

இன்ஸ்பெக்டர் மாத்தனை அழைத்தார்.

"டேய், மொகத்தப்பாத்து பேசுடா" இன்ஸ்பெக்டர் மாத்தன் முகத்தில் ஒரு தட்டு தட்டினார். மாத்தன் மேலே பார்த்துக் கண்களை உருட்டி வாயைப் பிளந்தான்.

"இந்த சட்டய யாருடா கொடுத்தது?" இன்ஸ்பெக்டர் திடீரென்று மாத்தன் சட்டைப் பையில் கையை விட்டுக்கொண்டு கேட்டார்.

மாத்தன் பதில் சொல்லி முடிப்பதற்கு முன்பே, இன்ஸ்பெக்டர் கோட்டின் பையிலிருந்து அந்தக் காகிதப் பொட்டலத்தை வெளியே எடுத்தார்.

மாத்தனின் வாய் ஒரேயடியாக பிளந்து கொண்டது. செரியானுடைய முகம் கறுத்தது.

"இந்தப் பொட்டலம் உனக்கு எங்கேருந்து கெடைச்சுது?" என்று இன்ஸ்பெக்டர் அமைதியான குரலில் கேட்டார்.

மாத்தன் பேசவில்லை.

"டேய், நான் கேக்கறது உனக்கு கெக்குதில்ல? இந்தப் பொட்டலம் உன்னோட பையில எப்படி வந்தது?"

மாத்தன் அப்போதும் பேசவில்லை.

"இதுக்குள்ள என்னா இருக்குன்னு சொல்லு" இன்ஸ்பெக்டர் மீண்டும் கேட்டான்.

பதிலில்லை.

இன்ஸ்பெக்டர் அவர்களின் முன்னால் அதை வைத்து, அந்தப் பொட்டலத்தை மெதுவாக அவிழ்த்தார்.

அடுக்கிக்கட்டிய புத்தம் புது நோட்டுகளைக் கண்டு, அங்கே கூடி இருந்தவர்கள் எல்லாம் திடுக்கிட்டுப் போனார்கள். ஜான் அந்த நோட்டுகளைத் திருப்பித் திருப்பிப் பார்த்தான்.

"இது புது நோட்டுகள் உன் கையில எங்கிருந்து வந்தன?" என்று இன்ஸ்பெக்டர் மாத்தனைக் கடூரமாகப் பார்த்துக்கொண்டு கேட்டார். மாத்தன் அப்போதும் வாய் திறக்கவில்லை.

"அது அவன் சட்டையில்லை. நாராயணன் நம்பியாரு கொடுத்த கோட்டு. மாத்தன் ஒரு நூலு ஒறவுகூட இல்லாத நெலமயிலதான் நேத்து இங்க வந்து சேந்தான்" என்று மாத்தனுக்காகச் செரியான் தான் சொன்னான்.

"உன்கிட்ட கேக்கல, நீ அங்கேயே அசையாம இரு" என்று இன்ஸ்பெக்டர் செரியானை விலக்கினார்.

"டேய், உன்கிட்டதான் கேக்கறேன். இந்தப் பணமெல்லாம் உன்கையில் எப்படி வந்து சேந்தது?" என்று இன்ஸ்பெக்டர் மிகவும் அமைதியான முறையில் மாத்தனிடம் மீண்டும் கேட்டார்.

மாத்தன் வாயைத் திறக்கவில்லை.

"டப்" ஒரு தட்டல். மாத்தனுடைய கன்னத்துக்குத்தான் அடி கிடைத்தது. சடாரென்று விழுந்த அடி தன்னுடைய கன்னத்துக்குத் தான் கிடைத்ததென்று அரை நிமிஷம் கழிந்தபோதுதான் மாத்தனுக்குப் புரிந்தது. அவன் இரண்டு கைகளாலும் முகத்தை மூடிக்கொண்டு அழத் தொடங்கினான்.

"சீக்கிரம் சொல்லுடா!" இன்ஸ்பெக்டர் மீண்டும் ஒன்று கொடுத்தார். அவன் மீண்டும் ஒரு தட்டலைத் தவிர்க்கக் கைகளால் மறைத்துக்கொண்டு சட்டென்று எழுந்திருந்தான்.

"என்ன அடிக்காதீங்க எஜமான்!" மாத்தன் விண்ணப்பித்துக் கொண்டான்.

"அப்படின்னா உண்மையைச் சொல்லு."

"எனக்கு இத அவன்தான் கொடுத்தான்" மாத்தன் செரியானைச் சுட்டினான்.

"பொய்---சுத்தப்பொய்! எனக்குத் தெரிவே தெரியாது!" செரியான் சாத்தானைப் போல் முகத்தை விகாரமாக்கிக்கொண்டு சொன்னான்.

"யூ ஷட்டப்!" இன்ஸ்பெக்டர் செரியானின் தோளில் இடித்துக் கொண்டு கர்ஜித்தார்.

"எப்போ கொடுத்தது?" இன்ஸ்பெக்டர் மாத்தனைப் பார்த்து தலையை ஆட்டிக்கொண்டு கேட்டார்.

"நேத்து ராத்திரி, காட்ல மீனு புடிக்கிற எடத்துலதான் கொடுத்தது."

"என்னா சொல்லிக் கொடுத்தான்?"

"கையில் வெச்சிருன்னு சொன்னான்"

"இந்தப் பொட்லத்தில் என்னா இருக்குன்னு நீ பாத்தியா?"

"இல்ல, நான் அத மறந்தே போனேன்."

நோட்டுக்கள் இருந்த காகிதத்தை, இன்ஸ்பெக்டர் அங்கே கூடி இருந்தவர்களிடமெல்லாம் காண்பித்தார். செரியானின் முகவரி அச்சடித்த கவரில், தபால் முத்திரையுடன் சேர்ந்த ஒரு திருவிதாங்கூர் பத்திரிகையின் மிச்சமிருந்த பகுதியால், அந்த நோட்டுகள் பொட்டலமாகக் கட்டி வைக்கப்பட்டிருந்தன.

இன்ஸ்பெக்டர், செரியான் மாத்தான் -- இருவர் கைகளுக்கும் விலங்கு மாட்ட கான்ஸ்டபிள்களிடம் உத்திரவிட்டார்.

வர்க்கீஸின் பிணத்தைப் போஸ்ட் மார்ட்ம் செய்ய டவுனுக்கு அனுப்ப ஏற்பாடு செய்துவிட்டு, இன்ஸ்பெக்டரும், கான்ஸ்டபிள்களும் நாராயணன் நம்பியாருடன் சேர்ந்து, அன்று களத்து வீட்டிலேயே தங்கினார்கள். குற்றவாளிகள் என்ற நிலையில் செரியானையும் மாத்தனையும் அவர்களுடனேயே தங்க வைத்துக் கொண்டார்கள். ஜானும் அங்கேயே தான் இருந்தான். மறுநாள் விடியற்காலையில் அவர்கள் செரியானையும் மாத்தனையும் அழைத்துக்கொண்டு செரியானின் இருப்பிடத்திற்குப் புறப் பட்டார்கள். அவர்களுடன் நம்பியாரும் அடியோடியும் கூட இருந் தார்கள். வழியில் அவர்கள் தங்கள் அதிகாரி குஞ்ஞிக்கண்ணன் நம்பியாரையும் அழைத்துக்கொண்டார்கள்.

செரியானின் இருப்பிடத்தைப் பரிசோதித்தபோது, அவர்கள் நினைத்தது போலவே அங்கிருந்து எல்லா்மும் கிடைத்தன. கள்ளநோட்டு அடிக்கும் இயந்திரமும், அச்சும் மையும் மற்ற உபகரணங்களும் ஒரு நிலவரையில் சிந்திச் சிதறிக் கிடந்தன. ஒரு பக்கம் மட்டும் அச்சடித்து உலர வைத்திருந்த சில பத்து ரூபாய் நோட்டுகளும் இருந்தன.

இன்ஸ்பெக்டர் பரிசோதனைகளையெல்லாம் முடித்து, செய்ய வேண்டிய சாங்கியங்களையெல்லாம் செய்து சீல் வைத்துவிட்டு ரிப்போர்ட் தயார் செய்தார். சாட்சிகளின் ஸ்டேட் மெண்டுகளிலும் கையெழுத்து வாங்கி, நாராயணன் நம்பியாரிட மும், அடியோடியிடமும் நன்றியுடன் விடைபெற்று, கை விலங் கிடப்பட்ட நபர்களையும், அழைத்துக் கொண்டு போலீஸ் ஸ்டேஷனுக்கு நடந்தார்.

ஸ்டேஷனை அடைந்த உடனே, இன்ஸ்பெக்டர் செரியானைத் தன்னுடைய அறைக்கு அழைத்தார்.

செரியானுக்கு நேரே திரும்பி அவனிடம் திடீரென ஒரு கேள்வியைக் கேட்டார்:

"நீங்க வர்க்கீஸ சுட்டுக்கொன்னதுக்கு என்ன காரணம்?"

செரியான் நடுங்கிவிட்டான். அவன் தன் கண்களைத் திறந்து முழித்துக் கொண்டே நாலாபக்கமும் ஒருமுறை சுற்றிப் பார்த்தான்.

"நீங்க வர்க்கீஸச் சுட்டுக்கொல்லக் காரணம் என்ன?" இன்ஸ்பெக்டர் கேள்வியை முரட்டுத்தனமான தொனியில் மீண்டும் கேட்டார்.

"நான் கொல்ல" செரியான் ஈனஸ்வரத்தில் கூறினான்.

"வேணாம்—மறைக்க வேணாம்—மிஸ்டர் செரியான், நீங்க இப்பவே எல்லாத்தியும் மறைக்காமச் சொல்லிடறதான் நல்லது. ஒரு நண்பன் கிட்ட கேக்கற மாதிரி நான் இப்பக் கேக்கறேன். மறைக்கம எல்லாத்தயும் சொன்னாத்தான் கொஞ்சமாவது தப்பிக் கலாம். அதில்லாம, லாக்கப்ல வெச்சு ஒரு நாடகம் நடத்தினாதான் முடியும்னு பிடிவாதம் புடிச்சா, நான் அதுக்கும் தயார்தான்."

இன்ஸ்பெக்டர் ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்தார். எரிந்து கொண்டிருக்கும் தீக்குச்சியை அலட்சியமாகப் பார்த்து விட்டு புன்னகைத்தவாறு இன்ஸ்பெக்டர் எதையோ முணுமுணுத்தார்.

இன்ஸ்பெக்டரின் புன்னகையும் முணுமுணுப்பும் செரியானின் இதயத்தைப் புகைக்க வைத்தது. அவனுடையக் குழிந்த கருவிழிகள் விசனத்துடன் சுழன்று கொண்டிருந்தன. ஆகக்கூடி அவனுக்குத் தான் ஒரு விஷப்புகையில் அகப்பட்டுக் கொண்டதுபோல் அனுபவம் ஏற்பட்டது.

"என்ன சொல்றீங்க?," என்று கேட்டார். இன்ஸ்பெக்டர் அவருடைய ஒவ்வொரு வார்த்தையும் இரும்புலக்கையால் இடிக்கின்ற இடியைப்போல் செரியானின் இதயத்தில் விழுந்தது.

"நான் தான் வர்க்கீஸக் கொன்னேங்கறதுக்கு என்னா புரூஃப் இருக்கு?"

"மிஸ்டர், நான் எல்லா விஷயங்களையும் புரூஃப்களோட பாத்துக்கறேன்"

இன்ஸ்பெக்டர் முகத்தைச் சுளித்துக்கொண்டு சொன்னார்: "நீங்க வர்கீஸக் கொன்னதின் உத்தேசமென்னா? அதான் கேள்வி... புரிஞ்சுதா?"

செரியான் கொஞ்ச நேரம் ஆலோசனையில் ஆழ்ந்தவனாக, மௌன பாவனையில் கீழே பார்த்துக்கொண்டு நின்றான். பின், மெல்லத் தலையை உயர்த்திக் கொண்டு "என் துப்பாக்கிக் குண்டு அசம்பாவிதமாதான் வர்க்கீஸு மார்ல் பட்டுட்டுது. அவன் அதனாலதான் செத்துட்டான். வர்க்கீஸக் கொல்லணும்னு எனக்கு எந்த உத்தேசமுமில்ல" என்று கூறினான்.

இன்ஸ்பெக்டர் தன் முகத்தில் யாதொரு பாவபேதத்தையும் வெளிப்படுத்தாமல் செரியான் கண்களைக் கூர்ந்து நோக்கினார்.

"நீங்க, நேத்து ராத்திரி ஒருமுறை கூடச் சுடலைன்னுதானே சொன்னீங்க?" உங்க துப்பாக்கியில குண்டு சுடாமலும்,

வர்க்கீஸோட துப்பாக்கியல குண்டு செலவழிஞ்சும்தானே இருந்தது. அதெப்படி நேர்ந்தது?"

"வேட்டையின் தொடக்கத்திலேயே நாங்க துப்பாக்கியைப் பரஸ்பரம் கை மாத்திக்கிட்டோம். என் துப்பாக்கிதான் வர்க்கீஸுக்கு நல்லா பழக்கம்னு அவன் சொன்னதால நான் அப்படிச் செஞ்சேன்."

"அப்புறம், வர்க்கீஸு குண்டு பாஞ்சி செத்ததும் துப்பாக்கிய மாத்திக்கிட்டீங்க, இல்ல?"

"ஆமாம்."

"மிஸ்டர் செரியான், நீங்க சொன்னது வாஸ்தவமாக இருக்கலாம். ஆனா, அதனால் மட்டும் ஒங்களுக்கு விடுதலை கெடைக்கும்னு தோணல. உண்மையப் பூராவும் சொல்லுங்க, பாதி உண்மைகள் ஒங்களுக்கு ஒதவுவதைவிட, ஆபத்தத்தான் உண்டாக்கும்னு நீங்க புரிஞ்சுக்கணும்."

"இதுக்கு மேலே எனக்கு ஒண்ணும் சொல்றதுக்கு இல்ல."

"இருக்குன்னு உங்களோட கண்கள் சொல்லுது" இன்ஸ்பெக்டர் செரியான் முகத்தை இமைக்காமல் பார்த்துக்கொண்டு நின்றார்.

செரியான் அதரங்களைக் கடித்துக்கொண்டு விசனத்துடன் தூரத்தில் எதையோ பார்த்தான்.

"என் கேள்விக்கு நீங்க இன்னும் பதில் சொல்லல. நான் ஒங்களுக்கு அதப் பத்தி அலோசிக்க அஞ்சு மணி நேரம் அனுமதிச்சிருக்கேன். ஆறு மணிக்கு நான் இங்க திரும்பிவருவேன். அப்ப எல்லாத்தியும் உறுதி செஞ்சிக்கிட்டு தயாரா நில்லுங்க."

இன்ஸ்பெக்டர் நாற்காலியிலிருந்து எழுந்து, 5013 ஐ அழைத்தார்.

"இவுருக்குச் சாப்பாடு கொடுத்து, லாக்கப்பில அடைங்க. யாரும் இவருகிட்ட போகவேணாம். நான் ஆறுமணிக்குத் திரும்பி வருவேன். அப்ப என் முன்னால ஆஜராக்குங்க."

கான்ஸ்டபிள் செரியானை லாக்கப்பிற்குக் கொண்டு போனான். இன்ஸ்பெக்டர் உணவை முடித்து ஓய்வெடுக்க நேரே வீட்டிற்கு நடந்தார்.

சாயங்காலம் ஆறு மணிக்கு இன்ஸ்பெக்டர் தன் அறைக்குள் பிரவேசித்தார். கான்ஸ்டபிள் செரியானை ஆஜராக்கினான்.

"என்னா தீர்மானத்துக்கு வந்திருக்கீங்க?" என்று இன்ஸ்பெக்டர் அன்பாகக் கேட்டார்.

"வர்கீஸை நான் சுட்டுக்கொன்னது வாஸ்தவம்தான்" செரியான் தைரியத்துடன் சொன்னான்.

"காரணம்? காரணம்?" இன்ஸ்பெக்டர் மெல்லக் 'கேட்டார்.

செரியான் எல்லாவற்றையும் மனம் திறந்து சொன்னான். தான் நோட்டு அடிக்கும் ரகசியத்தை வர்க்கீஸ் எப்படியோ கண்டு பிடித்து விட்டான் என்றும், அந்த ரகசியத்தை வெளியே பரப்பா மலிருக்க அவனுக்குத் தான் அடிக்கடி பணம் கொடுத்துக்கொண்டு வந்ததாகவும், கடைசியில் ஊருக்குத் திரும்பிப் போவதற்காக வர்க்கீஸ் தன்னிடம் ஆயிரம் ரூபாய் ஒரே மொத்தமாகக் கேட்டா னென்றும், அதற்குக் கள்ளநோட்டுக் கொடுத்ததை அவன் ஏற்றுக் கொள்ளவில்லை என்றும், பணம் இரண்டு நாட்களில் கொடுத்து விடுவதாகவும், அதுவரையில் கள்ள நோட்டை வைத்திருக்க வேண்டுமென்றும் தான் சொன்னதை அனுசரித்து அவன் வழிக்கு வந்தானென்றும், அப்படிப் பணம் கொடுத்தாலும் வர்க்கீஸ் உயிருடன் இருக்கும்வரை தனக்குப் பாதுகாப்பு இல்லையென்று புரிந்துகொண்டதனால், காட்டிலிருக்கும்போது, ஒரு சந்தர்ப்பம் கிடைத்தபோது அவனைத் தான் கொன்றதாகச் செரியான் சொன்னான்.

"மாத்தன் கையிலிருந்து கெடைச்ச நோட்டுகள் ஏது? இன்ஸ்பெக்டர் கேட்டார்.

"வர்க்கீஸின் பையிலிருந்து நோட்டுகள் தான். அவன் பொணத்த பரிசோதிக்கும்போது போலீஸ் கள்ள நோட்டுகளக் கண்டு சந்தேகப்படாமலிருக்க நான் தான் அத எடுத்து மாத்தன் கிட்ட கொடுத்தேன்."

"மிஸ்டர் செரியான், என் வேலைய சுலபமாக்கியதற்கு நான் ஒங்களுக்கு நன்றி சொல்லிக்கறேன்." இன்ஸ்பெக்டர் செரியானின் தோளைத் தடவியவாறு சொன்னார்: உண்மையை மனந்திறந்து சொன்னதுக்கு நான் ஒங்களப் பாராட்டுகிறேன். எனக்கு ஒங்ககிட்ட ரொம்ப அனுதாபமுன்டு. இனிமே ஒங்களோட உயிரும் வாழ்க்கையும் நீதியின் முன்னால் கெடக்குது. இதே தைரியத்தோட நீங்க கோர்ட்டையும் எதிர்நோக்கணும். தெய்வம் ஒங்களக் காப்பாத்தட்டும்."

இன்ஸ்பெக்டர் வெற்றித் திருப்தியுடன் செரியானின் வாக்கு மூலத்தைப் பதிவு செய்தார்.

செரியானை லாக்கப்புக்குக் கொண்டு போனார்கள். இதயத்தி லிருந்து ஒரு பெரிய சுமை நீங்கியது போல் செரியானுக்குத்

தோன்றியதென்றாலும், எதிர்காலம் முழுவதும் கரிய நிழல்களி னால் மூடிக்கிடக்கின்றதையும் அவன் காணாமல் இருக்கவில்லை.

## 44

பாலங்கோட்டு பெரிய குறுப்பின் நாலு கட்டு வீட்டின் விசாலமான முற்றத்தில், அன்று வழக்கத்தைவிட முறையிடு பவர்கள் அதிகமாகவே ஆஜராகி இருந்தார்கள்.

குடும்பம் நலிந்தும், மேலும் முதலீடு செய்ய முடியாததால் பயிரெல்லாம் நாசமாகியும், கஷ்டம் வந்து கிடைத்த விலைக்குத் தங்களுடைய நிலங்களைக் கைவிட்டுவிட்டுத் திருவிதாங்கூருக்குத் திரும்பிப் போகத் தயாராகும் கிறிஸ்துவர்கள் அங்கே அன்று வந்திருந்தார்கள்.

பெரிய குறுப்பு வெற்றிலை போட்டுக் குதப்பிக்கொண்டே, தன்னுடைய பழைய பிரம்பு நாற்காலியில் மல்லாந்து படுத்திருந் தார். இடையிடையே வெற்றிலை எச்சிலைத் துப்புவதற்கு வசதி யாக, எச்சில் கிண்ணத்தைத் தூக்கிப்பிடித்துக்கொண்டு வேலைக் காரன் கண்ணன் நாயர் அவர் அருகில் நிற்கின்றான். காரியஸ்தன் ராமக்கிடா விண்ணப்பதாரர்களை விசாரணை செய்து கொண்டிருந்தான்.

மெலிந்து நீண்ட, கருகருவென்று கருத்த ஒரு கிறிஸ்துவன் டெலக்ராஃப் கம்பத்தின் உச்சியில் இணைக்கப்பட்டுள்ள பீங்கான்களைப் போல் உள்ள தன் பற்கள் முழுவதையும் வெளியே காட்டிக்கொண்டு, ஒரு அசட்டுச் சிரிப்புடன் பெரிய குறுப்பின் முன்னால் வந்து கைகூப்பி நின்றான்.

"நீ யாருப்பா?" ராமக்கிடா கேட்டான்.

"சாத்தான் பாறக்குன்றுல குடியிருக்கிற குழிமாடத்தில ஔசேப்பு" என்று ஔசேப்பு தன் வாயிலுள்ள டெலக்ராஃப் பீங்கான்களை மேலும் ஒருமுறை வெளிப்படுத்திக்கொண்டு சொன்னான்.

"ஒனக்கு என்னா வேணும்?"

"இந்த ஊர்லேந்து ஒடனே நான் போய்டணும்"

"அதுக்கு யாராச்சும் தடை சொன்னாங்களா? ஒன்னோட ஊருக்குப்போவ எங்க சீட்டொன்னும் தேவையில்லையே" ராமக்கிடா சிறுகோபத்துடன் கூறினான்.

"எஜமான் கிட்ட வெட பெத்துக்கறதுக்காக வந்திருக்கேன்" ஔசேப்பு பெரிய குறுப்பை மேலும் ஒருமுறை வணங்கினான்.

"ஓகோ! அப்ப நீ போவத் தயாராத்தான் வந்திருக்கியா? ரொம்ப நல்லது. அப்ப ஒன்னோட நெலங்களயெல்லாம் என்ன செஞ்சே?" பெரிய குறுப்புக் கேட்டார்.

"எல்லாத்தியுமே நான் கையிலே எடுத்துக்கிட்டேன்" ஔசேப்பு. தன் கக்கத்திலிருந்து சிறு காகிதப் பொட்டலத்தைக் கையில் எடுத்து பெரிய குறுப்பின் முன்னால் வைத்தான்.

சிவப்பு மண்!

ஔசேப்பு அந்தப் பொட்டலத்தைக் கையில் தூக்கிக் கொண்டே, "இந்த சம்பாத்தியத்த எடுத்துத்தூக்கிக்கிட்டுதான் நான் திருவிதாங்கூருக்குத் திரும்பறேன். என் நாலு கொழந்தங் களயும், பொண்டாட்டியையும், 3500 ரூவாயையும், என் வாழ்க்கை யில் மூணு வருஷத்தயும் ஒடுங்கியது இந்த மண்ணுதான். எங்க ஊரு ராஜாவுக்குக் காணிக்கை வைக்கத்தான் இந்த மண்ணுப் பொட்டலத்த எடுத்துக்கிட்டு போறேன்," என்று சொன்னான்.

ஔசேப்பு அந்தப் பொட்டலத்தைக் கக்கத்தில் வைத்துக் கொண்டு பெரிதாகச் சிரித்தான்.

பெரிய குறுப்பும், காரியஸ்தன் ராமக்கிடாவும் ஒன்றும் புரியாமல் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள்.

ராமக்கிடா சொன்னான்:

"என்னடா ஔசேப்பு, உன் உடம்பெல்லாம் சரியாத்தானே இருக்கு?"

ராமக்கிடாவில் வார்த்தைகள் காதில் விழாதவனாய் ஔசேப்புத் தொடர்ந்தான்:

நான் திருவிதாங்கூர்லேந்து ரெண்டு 'ப' காரங்களுக்காகப் பயந்துகிட்டுதான் மலவாருக்கு வந்தோம்-பட்டினியும் பட்டரும் தான் அவைகள். அப்படி ரெண்டு 'ப' காரங்களுக்குப் பயந்துகிட்டு பாதுகாப்புக்காக வந்த எங்கள நசுக்க, மூணு 'ப'காரங்கள் சேர்ந்துகிட்டு இங்க நின்னுக்கிட்டிருந்தன - புல்லு, பன்னி, பனி(ஜுரம்) போதுமா தண்டனை? பட்டருக்கு பயந்துகினு ஓடி ஒளிஞ்ச கூட்டத்தார புல்லும், பன்னியும், பனியும் நசுக்கிட்டுது. நான் இதோ திரும்பிப்போவப் போறேன். 12 வருஷத்துக்கு அவகாசம் கொடுத்த எனக்கு எழுதன நெலங்கள இப்பவே நான் யாருக்காச்சும் விக்கவோ, சும்மா கொடுக்கோ நெனக்கல. அங்க மிச்சமா இருந்த பயிர எல்லாம் நான் என் கையாலேயே நாசமாக்கிட்டு, பதிலுக்கு சேர்மரக்கன்னு நட்டுருக்கேன். அங்க

* சேர்மரம் - வண்ணான் குறிக்கொட்டை மரம்.

பெரியதொரு சேர்மரக் காடா அது வளரட்டும் - அந்த வெஷ மரங்க மெதுவா தழைச்சி வளர்ந்து காத்துல நாட்டியமாடட்டும். இந்த வெஷ பூமிக்கு ஏத்த பயிரு அதுதான். இந்த மண்ணு பொட்டலத்தோட நான் நேரே திருவனந்தபுரத்துக்குத்தான் போறேன். அங்க இருக்கிர அரண்மனைக்குப் போயி, ராஜாவைக் கண்டு வணங்கி, இந்தப் பொட்டலத்தைக் காணிக்கையாக்கிட்டு, 'சாமி, திருவிதாங்கூரு கிறிஸ்துவங்களுக்கு இதவிடப் பயங்கரமான வெஷ வஸ்து இந்த ஒலகத்துல உண்டுன்னு அடியேன் நம்பியிருந்ததில்லை. ஆனால், அப்ப அத நான் கண்டுபுடிச்சிருக்கேன். அத நீங்க ஏத்துக்கணும்னு' நான் சொல்லுவேன்.

தன்வயப்படுத்தும் அந்தச் சொற்பழிவாளனைப் பெரிய குறுப்பும், காரியஸ்தனும், அங்கே கூடியிருந்தவர்களும் மௌனமாய்ப் பார்த்தவாறு நின்று விட்டார்கள்.

ஒளசேப்பு விடைபெற்றான்.

"எஜமானுக்கு என்னோட கடைசி நமஸ்காரம். ஒரு வேள இன்னும் ஒன்பது வருஷங்கழிச்சி, என் குத்தக முடியற காலத்தில என் சேர்மரக்காடுகள ஒரு தடவ பாக்க நான் மறுபடியும் வரலாம்."

அவன் அந்த தந்திக்கம்பப் பீங்கான் சிரிப்பைச் சிரித்துக்கொண்டே, திரும்பி நடந்து சென்றான்.

(ஒரு வேளை, ஒளசேப்பு சொன்னதெல்லாம் ஒரு மூளையில்லாதவனின் வாயாடித்தனமாக இருக்கலாம். இல்லையென்றால், முழுவதும் ஏமாற்றத்திலிருந்து உதிந்த எரிச்சலின் உண்மைகளாகவும் இருக்கலாம். எதுவாக இருந்தாலும், அதன் பிறகு ஒளசேப்பை அந் நாட்டில் யாரும் காணவில்லை. அவன் தன் ஊருக்குச் சென்று ராஜாவைப் பார்த்து, அந்த மண் பொட்டலத்தைக் காணிக்கையாக வைத்திருக்கலாம். காரணம் அப்போதெல்லாம் 'ராஜா' திருவிதாங்கூரிலிருந்து பறந்தோடி விட்டிருந்தார்.)

ஒளசேப்பு போனவுடன், வெளுத்து நீண்டுபோய் மிகவும் நொந்துபோன ஒரு மனிதன், கண்ணாடி அணிந்த மூக்கை உயர்த்திக் கொண்டு படியேற் வந்து, தலையில் கட்டியிருந்த துண்டை அவிழ்த்துத் தோளில் போட்டுக்கொண்டு, மரியாதையுடனும், கூச்சத்துடனும் பெரிய குறுப்பின் முன்னால் இராவணத்தின் கீழ் தயங்கி நின்றான்.

"நீ யாரு?" ராமக்கிடா கேட்டான்.

"எம்பேரு பால், ஓங்க 500 ஏக்கரு நெலம் என் கைவசம் இருக்கு" வந்தவன் பெருமூச்சுடன், இடையிடையே வார்த்தைகளை நிறுத்தி நிறுத்திச் சொன்னான்.

பெரிய குறுப்பிற்கு வந்திருக்கும் நபர் யாரென்று உடனே புரிந்து விட்டது. இரண்டு ஆண்டுகளுக்கு முன், அந்த வராண்டாவிலுள்ள நாற்காலியில் மிகக் கௌரமாக உட்கார்ந்திருந்த அந்தப் பச்சைக்காமதேவனின் உருவத்தைக் குறுப்புக்கு நன்றாகவே நினைவிருந்தது. அன்றைய அந்த முகமல்ல, இன்று காண்பது. தாடை எலும்புகள் துருத்திக் கொண்டு, வெளுத்து வளைந்து போன முகத்தில் நீண்ட ரோமங்கள் சிதறிக்கிடந்தன. சில்க் சட்டையும், ரிஸ்ட் வாட்சும், தங்கச் சங்கிலியும், சரிகைக்கரை வேட்டியும் எல்லாம் போய்விட்டன. மூக்கின் மேல் உள்ள அந்தப் பழைய கண்ணாடி மட்டும்தான் மிஞ்சியிருந்தது.

"வெவசாயம் நல்லா நடக்குதில்ல?" குறுப்பு அன்புடன் கேட்டான்.

"எஜமான் - அந்தக் கதய முழுசும் சொல்ல எனக்கு வலுவு இல்ல. நான் முடிஞ்சுட்டேன் எஜமான், முடிஞ்சுட்டேன். இனிமே எனக்கு என் ஆரோக்கியம் மட்டும் திரும்பக் கெடைச்சாப் போதும். நான் ஊருக்குப் போவத் திருமானிச்சிட்டேன். 3500 ரூவா கொடுத்து வாங்கிய நெலங்கள்லே நான் எண்ணாயிரம் ரூவா செலவு செஞ்சேன். அதுக்குமேல, மொதலு வைக்க முடியாம, கடனக் கொடுக்க முடியாம, பயிரப் பாத்துக்க முடியாம, எல்லாமே தாறுமாறாக் கெடக்குது. அந்த நெலங்களல்லாத்தியும் தாங்களே திரும்ப எடுத்துக்கணும். நீங்க நெனக்கறது கெடைச்சலே எனக்குப்போதும்."

"பாலுக்கு ஐநூறு ரூவா கொடுத்து, பத்திரங்களயெல்லாம் திரும்ப வாங்கிக்க" குறுப்பு காரியஸ்தனிடம் உத்தரவிட்டார்.

"நாளக்கிக் காலைல பத்திரங்களோட இங்க வாங்க" ராமக்கிடா பாலிடம் அனுதாபத்துடன் சொன்னான்.

பால், குறுப்பைத் தலை வணங்கித் தொழுது ஒன்றும் சொல்லாமல் திரும்பிப் போனான்.

"ராமா, ரெண்டு வருஷத்துக்கு முன்னால, இவுனுக்கு ஏக்கருக்கு ஆறு ரூவா வீதம் 500 ஏக்கரு கொடுத்தப்ப, நீ சொன்னத இப்ப நெனச்சிப்பாத்தியா?." என்று குறுப்பு குலுங்கிச் சிரித்துவிட்டு காரியஸ்தனிடம் கேட்டார்.

ராமக்கிடா ஏதோ முணகியவாறு சிரித்துத் தலையாட்டினான்.

தலை முழுவதையும் கைத்துண்டால் மூடிக்கொண்டு மெலிந்த குள்ள மனிதன் ஒருவன், முற்றத்திலிருந்து குறுப்பின் முன்னால் நகர்ந்து வந்து நின்றான். குறுப்பு அவனை உற்றுப்பார்த்தார்.

சுத்தமில்லாத பரிதாபத்திறகுரிய கோலம். அவனுடைய பெரிய கண்களில் இளம் மஞ்சள் நிறத்தில் ஊளைக் கபத்தைப் போல் ஏதோ வழிந்து கிடந்தது. புனலூர் காகிதத்தின் நிறமுள்ள முகமும், வெளிறிய உதடுகளுமுள்ள அந்தச் சின்ன மனிதன் அடிக்கடி நெஞ்சைப் பிடித்து இருமிக் கொண்டிருந்தான். நெஞ்சிலிருந்து கையை எடுக்காமல் குனிந்து கொண்டு அவன் குறுப்பை வணங்கினான். இரண்டு மூன்று முறைகள் இருமிவிட்டு, மேல் மூச்சு கீழ்மூச்சுடன் சொன்னான்: "என் நெலத்த எஜமான்தான் திரும்ப எடுத்துகிட்டு எனக்கு ஏதாச்சும் கொடுக்கனும்."

அவன் நிலைமையை கண்டு பெரியவருக்கு இரக்கம் தோன்றிற்று.

"இவன் யாரு? இவன் நெலம் எங்கருக்கு?" என்று பெரியவர் காரியஸ்தனிடம் கேட்டார்.

ராமக்கிடா கொஞ்சநேரம் ஆலோசித்துப் பார்த்தான்.

"ஓகோ....புரியுது புரியுது - குளியன்மலை சக்கரப் பாறைக்குன்னுகளின் எல்லயில கெடக்கற சரிவுலதான் இவன் நெலம் இருக்குது. மனுஷன் ரொம்ப மிடுக்கா இருந்தான். திருவிதாங்கூர்லேந்து இருவத்தைஞ்சிப் பேருங்கள சேத்துக்கிட்டு, ஒரு சின்ன மொதலாளியாத்தான் இவன் இங்க வந்து சேந்தான். நல்ல வேட்டைக் காரனாவும் இருந்தான். போன வருஷம்கூட கல்லோர மலையிலேந்து ரெண்டு பெரிய நரிங்கள ஒரே நாள்ள சுட்டுக் கொன்ன ஆளுதான் இவன். வர்க்கின்னு பேரு - ஒன் சொந்த வூரு எங்க இருக்கு?"

"முண்டக்காயம்" வர்க்கி நெஞ்சைத்தடவிக்கொண்டே சொன்னான்.

"ஒனக்கு எல்லாஞ்சேத்து எவ்வளவு நஷ்டமாச்சு வர்க்கி?". என்று பெரியவர் விசாரித்தார்.

"நான் என்னாத்தச் சொல்லுவேன் எஜமான்....மூணு கொழந்தங்க. கட்டின பொண்டாட்டி, ஆறாயிரம் ரூவா -- எல்லாமே நஷ்டம்தான். இன்னும் இந்த நொறுங்கிப்போன ஒடம்பு மட்டும்தான் பாக்கி இருக்கு எஜமான்."

"நீ என்னா பயிரு வெச்சிருக்க?"

"முந்திரியும், பப்பாளியும், இருக்கு. ஒண்ணயும் அனுபவிக்கல."

வர்க்கிக்கு நடுங்கத் தொடங்கியது. அவனுடைய கபக்கண்களில் ஒரு சிவப்பு பரவியது. விரைந்து விரைந்து நடுங்கிக் கொண்டு அவன் தூணைப்பிடித்தவாறு வராண்டாவின் ஓரத்தில் உட்கார்ந்து விட்டான்.

"கொஞ்சம் சுடு தண்ணி கொடுக்கறீங்களா?" வர்க்கி நொந்து போன குரலில் கேட்டான். உட்கார்ந்து கொண்டிருக்க முடியாமல், அவன் அந்த வராண்டாவில் சாய்ந்து படுத்துக்கொண்டான்.

"டேய் கொஞ்சம் சுக்குத் தண்ணி கொண்டாடா" குறுப்பு வேலைக்காரனைக் கூப்பிட்டுச் சொன்னார்.

வேலைக்காரன் கண்ணன் நாயர், ஒரு பித்தளைக் கோப்பை நிறையச் சுக்குத் தண்ணீரைக் கொண்டு வந்து கொடுத்தான்.

வர்க்கி அந்தத் தண்ணீர் முழுவதையும் ஒரே மூச்சில் குடித்து விட்டு மீண்டும் வேண்டுமென்று சைகை காட்டி வேண்டினான். கண்ணன் நாயர் ஒரு பெரிய செம்புக் கூஜா நிறையக் கொதிக்கும் சுக்குத் தண்ணீரை, வர்க்கியின் முன்னால் கொண்டு வந்து வைத்தான். வர்க்கி தன் பெரிய கண்களை உருட்டிக்கொண்டு, ஆவலுடன் அந்தக் கொதிக்கும் தண்ணீர் முழுவதையும் குடித்துப் பாத்திரத்தைக் காலியாக்கினான்.

ராமக்கிடா, கண்ணன் நாயரை அழைத்து, தென்பக்க வராண்டாவில் ஒரு பாயை விரித்துப்போடச் சொன்னான்.

"அங்க எழுந்துபோய்ப் படுத்துக்க" ராமக்கிடா வர்க்கியை மெல்லப் பிடித்து எழுப்பி விட்டான். வர்க்கி, அவிழ்ந்து தொங்கும் தன் துண்டைப் பிடித்துக் கொண்டு, இருமியும் நடுங்கியும் வாயைக் கோணல் மாணலாக இளித்தவாறும் வராண்டாவிற்கு நகர்ந்து சென்று பாயில் விழுந்தான்.

பெரியவர் கஞ்சி குடிக்க உள்ளே சென்றார். ராமக்கிடா, ஏதோவொரு பழைய பத்திரத்தைப் பிரித்துக் கொண்டு சாய்வுப் படிமேல் ஒருக்களித்துப் படுத்தான்.

வர்க்கி, ஜுரத்தில் கொதித்துக் கொண்டிருந்தான். அந்த மலைச்சுரத்தின் போராட்டத்திலிருந்து விடுதலைபெற, அவனுடைய ஒவ்வொரு நரம்பும் தவித்துக் கொண்டிருந்தது. எலும்புகள் உருகி இரத்தத்துடன் சேர்ந்து உள்ளே கட்டிப்பட்டுக் கிடப்பது போலவும், இதயம், உடல் முழுவதும் உருண்டு குலுங்கி ஓடியாடுவது போலவும் அவனுக்குத் தோன்றிற்று.

ஒரு மணி நேரம் சென்றதும் வர்க்கியின் சுரம் தணிந்தது. அவன் மெதுவாக எழுந்து உட்கார்ந்து, மீண்டும் சிறிது சுடு தண்ணீர் குடித்தான்.

பெரியவர் கஞ்சி குடித்து முடித்துவிட்டு, ராமக்கிடாவுடன் என்னவோ கோர்ட் விஷயத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்.

வர்க்கி, பெரியவரின் அருகே இரைக்க நடந்து சென்றான்.

"என்னக் காப்பாத்துங்க எஜமான்....." வர்க்கி இருமலுடனும் அழுகையுடனும் இடறிய குரலில் சொன்னான்: "நான், இங்கக் கெடந்தா சாவத்தான் முடியும் எஜமான். அதுக்குள்ள எனக்கு ஏதாச்சும் கொடுத்து எங்க ஊருக்கு அனுப்பிடுங்க எஜமான்."

பெரியவர் ராமக்கிடாவுடன் ஆலோசித்துவிட்டு, வர்க்கிக்கு நூறு ரூபாய் கொடுக்கத் தீர்மானித்தார்.

"பத்திரங்கள்ளாம் எங்க?" ராமக்கிடா கேட்டான்.

"இதோ, கொண்டாந்திருக்கேன்" வர்க்கி, அழுக்குத் துணியில் கட்டி வைத்திருந்த சிறியதொரு காகிதக்கட்டை வராண்டாவில் வைத்தான்.

ராமக்கிடா வர்க்கியின் கையில் நூறு ரூபாய் நோட்டு ஒன்றைக் கொடுத்தான். அதன்பின், பத்திரங்களில் அவன் கையெழுத்து வாங்கிக்கொண்டான்.

வர்க்கி நோட்டை மடியில் சொருகிக்கொண்டு, நன்றி நிரம்பி வழியும் கண்களுடன் பெரியவரிடமும், காரியஸ்தனிடமும் விடைபெற்றுத் திரும்பி நடந்தான்.

அங்கே இருந்து குளியன் மலைக்கு மூன்றுமைல் நடக்க வேண்டும். வெயிலுக்கு உஷ்ணம் ஏறிக்கொண்டிருந்தது. வர்க்கி வேட்டியைத் தலையில் கட்டிக்கொண்டு ஒரு நிழலைப்போல் கிழக்கு நோக்கி நகர்ந்தான்.

வழியில் ஆங்காங்கே சில மலை பாகங்கள் மராமத்துச் செய்து சுத்தப்படுத்தி வேலியகட்டி வேறுபடுத்தப்பட்டிருந்தன. புதுசாகக் குடியேறியவர்களின் முஸ்தீபுகள் அவை. அவற்றின் அருகாமையிலேயே கருகிய செடிகளும் உடைந்த வேலிகளும், காணப்படும் பழைய விவசாய நிலங்களும் வெறுமனே கிடந்தன. அங்கே, அங்குமிங்குமாக மிஞ்சியிருந்த சில சிறு சிறு குடிசைகளும், குளம் கிணறுகளும் மண் மூடிக்கிடந்தன. மாத்தனின் காற்றும் நாற்றமும் அத் திசைகளில் எங்கும் இல்லை என்றே சொல்லலாம்.

மலைச் சுரத்தினால் மரணத்தைத் தழுவிய, சொல்லவொணா வறுமையினால், திரும்பவும் தங்கள் ஊர்களுக்கு இங்குள்ள எல்லாவற்றையும் விட்டெரிந்து விட்டு மறைந்து போன, மனிதர்களின் பிரயத்தன ரேகைகள்தான் அந்தப் பாழ்நிலங்களில் பதிந்து கிடக்கின்றன. அந்த மலை நிலத்தில் அவர்கள் வெள்ளி நாணயங்களையும் வியர்வையையும் சொரிந்து, இயற்கையுடன் போரிட்டு, அதிகாலை முதல் அந்தி மாலை வரை வேலை செய்து ஒவ்வொரு துளி வியர்வையும் ஒவ்வொரு வெள்ளி நாணயத்தை விளைவிக்கும் என்று எதிர்நோக்கிக் காத்திருந்தார்கள். ஆனால், அதை அனுபவிக்க அவர்களால் முடியவில்லை.

வர்க்கி கண்களைத் திறந்து அந்தப் பரிதாபக் காட்சிகளைப் பார்த்துப் பார்த்து, தன் விளை நிலத்தை அடைந்தான். தன் விளை நிலத்தின் அருகே நின்று கொண்டு அவன் சுற்றிலும் கண்களை ஓட்டினான்.

பன்றிகள் கூத்தாடிக் குத்திக் கிளறிய கிழங்குச் செடிகளின் அருகில் குலைதள்ளும் பக்குவத்திலுள்ள நேந்திர வாழைகள், காற்றில் நடனம் ஆடிக்கொண்டிருந்தன. முந்திரிகள் துளிர்விட்டுத் தழைத்து நின்றன. அந்தச் செடிகளின் ஒவ்வொரு கிளைகளிலும் அவனுடைய இரத்தம் ஓடியது. அவனுடைய புல்லுமாடம் தகர்ந்து தலை சாய்ந்து கிடந்தது. அதன் அருகே சதுரங்கக் கட்டம்போல் உள்ள பாத்திகளில் கேழ்வரகும், சேம்பும், சேனையும், வெளுத்து வதங்கிச் சாய்ந்து கிடந்தன. அதற்கப்பால், மலைச்சரிவின் மூலையில், அவனுடைய அருமைக் குழந்தைகளாக இருந்த அன்னாவும், மேரியும், பௌலோசும் கூச்சல் போட்டு விளையாடு வதாக அவனுக்குத் தோன்றிற்று. சுள்ளி விறகைப் பொறுக்கிக் கட்டிக்கொண்டு கர்ப்பிணியான சாராம்மையும் அங்கே சுற்றிச் சுற்றித் திரிவதாக அவனுக்குத் தோன்றிற்று.

வர்க்கியின் கண்களில் ஊறிய கண்ணீர், கண்களில் நிறைந்து வெளியே வடிந்தது.

வெயில் அந்தப் பண்ணையில் பொன்னைப் பூசிற்று. அந்த வாழை மரங்கள் அவனைக் கூவி அழைக்கின்றன. அந்தத் தனிமையில் பூமியில் இல்லாத சில தாள ஓசைகள் அவன் காதுகளில் கிச்சுக்கிச்சு மூட்டின.

அவன் புறப்பட்டுக் கொண்டிருந்தான். எங்கே? அவன் எங்கேயும் போக வேண்டியதில்லை. அவன் அந்தப் பிரேத பூமியை இமைகளை அசைக்காமல் பார்த்துக்கொண்டே நின்றான். அந்த

மலை நிலத்தின் கற்பனை வளையத்தில்தான் அவனுடைய வாழ்வு ஒட்டிக்கிடக்கின்றது. அவன் குடும்பம் அந்த மண்ணின் அடியில் புகுந்து விட்டது. அந்த இடத்தை விட்டு அவன் மட்டும் எங்கே போக முடியும்?

மறுநாள் காலையில் அங்கே இருந்த ஒரு முந்திரியின் கிளையில் வர்க்கியின் உடல் தொங்கிக்கொண்டிருந்தது. அது கொலை அல்ல - அந்த நூறு ரூபாய் நோட்டுக்கூட அவன் மடியிலேயே இருந்தது.

## 45

மாதவி காலை வேலைகளையெல்லாம் வேகமாகச் செய்துவிட்டு, வராண்டாவில் வந்து நின்று கொண்டாள்.

வீட்டில் அவள் இன்று தனியாகத்தான் இருந்தாள். மாமன் கிருஷ்ணன் நம்பியார் கிழக்கு மலைகளிலுள்ள மலை விவசாய நிலங்களைப் பார்க்கப் போயிருக்கின்றார். அங்கே விளைச்சல் அறுவடை செய்வதற்குத் தயாராக இருந்தது. அறுவடை முடிய நான்கைந்து நாட்களாகும். அவளுடைய பெரிய மாமி குஞ்ஞிக் குறும்பா, தன் தங்கையின் மகளைப் பார்ப்பதற்காக ஆறுமைல் தூரத்திலுள்ள ஒரு இடத்திற்கு விருந்துக்காகப் போயிருந்தாள். மாதவியின் வீட்டில் தினந்தோறும் வந்து வேலை செய்கின்ற பணியச்சி மஞ்சுளா அன்று சீக்கிரமாகவே அவளுடைய வீட்டிற்குப் போய் விட்டாள்.

மாதவி ஏதோ ஓர் அசாதாரணமான வருத்தத்துடன், கொஞ்ச நேரம் அந்த வராண்டாவில் அங்குமிங்கும் நடந்தாள். பிறகு, ஒரு முறை வெற்றிலை போட்டுக் கொண்டு, தலைமுடியை அவிழ்த்துச் சீவியவாறு வராண்டாவில் தூணில் சாய்ந்து, கிழக்கே பார்வை யைச் செலுத்தியபடி நின்றாள். கிழக்குக் குன்றுக்குச் செல்லக்கூடிய வாய்ப்பு அவளுக்குத் தடை செய்யப்பட்டிருந்தது. அந்த மழைக் கால இரவில் நடந்த நிகழ்ச்சிக்குப் பின், அவள் அந்தோணியின் பரம விரோதியாக ஆகியிருந்தாள். அந்தோணி சம்பாதித்து வைத் திருந்த புண்ணிய அபிலாஷைகளை, முத்தமிட்டுச் சாம்பலாக்கிய மாதவியின் உதடுகளிலுள்ள காட்டுத்தீ இன்னும் அணைந்து அடங்கவில்லை. அப்படிப்பட்ட நூற்றுக்கணக்கன இரவுகளுக்காக அவள் இதயம் நெகிழ்ந்து கொண்டிருந்தது. ஆனால், அந்தோணி மட்டும் அன்று முதலே கருகிப்போன கட்டையைப் போல், முற்றிலும் மனம் கெட்டவனாக அவளிடம் அணையிட்டிருந்தான்:

"இனிமே ஒன்னோட நெழலைக்கூட நான் பாக்கக்கூடாது"

தூணில் தலையைச் சாய்த்து, கலைந்து தொங்கிக்கொண்டிருந்த நீண்ட தலைமுடியில் கை விரல்களை நுழைத்து, அளைந்து நீவிக்கொண்டிருந்தாள். அவள் அப்போது அந்தோணியின் வலுவான உடலைப் பற்றியும், அந்தச் சொர்க்கபோக இரவைப் பற்றியும் சிந்தித்தாள். காமத்தைத் துறந்த அந்தச் சிறு பிரம்மச்சாரியை ஒரு காதல் நோயாளியாக்க அவள் பிரயோகித்த எல்லா உபாயங்களும் தோல்வியடைந்து விட்டன.

அவள் ஏமாற்றத்துடன், இரத்தம் போன்றுள்ள தாம்பூல எச்சிலை முற்றத்தில் விசுக்கென்று துப்பினாள்.

மாதவியின் தீ நாளத்தைப் போன்ற பார்வைகள், அந்தக் குன்றின் உச்சியிலிருந்து மெல்ல அடிவாரத்தில் உள்ள வயல் வெளியை ஆக்கிரமித்தன.

அந்த நெல் வயல் அறுவடை முடிந்து வெறுமனே கிடந்தது. அங்கேயிருந்த நஞ்சையில் மேய்ந்து கொண்டிருக்கும் பசுக்கள், உச்சி வெயிலின் உஷ்ணம் அதிகரித்தவுடன், அடுத்திருந்த வாய்க்காலின் பக்கத்தில் உள்ள நீர், மருத மரத்தின் நிழலுக்கு நகர்ந்து சென்று கண்களை மூடித் தமக்குத்தாமே அசை போட்டவாறு நின்று கொண்டிருந்தன. அவைகளில் ஒன்றின்மேல் ஒரு நீர்ப்பறவை கூட ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தது.

ஆகாயத்தில் வட்டமடித்துப் பறந்து கொண்டிருந்த ஒரு காட்டுக் கழுகும், சிறிது நேரம் சென்றதும் தாழ்வாகப் பறந்து வந்து அந்த நீர் மருதில் கிளையில் கழுத்தை நீட்டி உட்கார்ந்து விட்டது.

மதிய நேரத்தில் சோம்பேறித்தனம் எங்கும் வியாபித்திருந்தது. இரவாணத்தின் நிழல் ரம்பத்தில் வடிவில் நடு முற்றத்துக்கு நகரத் தொடங்கியது.

துள்ளித்தளும்பும் இளமையின் போதைப் பிரவாகமான தொடர் அலைகள், அவள் இதயத்தை நிர்பந்தப்படுத்திக் கொண்டிருந்தன. இனந்தெரியாத ஓர் அவஸ்தையின் குடைச்சல், அவளுடைய ஒவ்வொரு மயிர்காலிலும்.

அவள் பார்வை திடீரென்று வயலின் வட கரைக்குக் குதித்தது. உச்சி நிழல் போல் குள்ள உருவம் ஒன்று, வயல் வரப்பின் வழியாக நகர்ந்து வந்து கொண்டிருந்தது.

அவள் முகம் தெளிந்து புன்னகைத்தாள். கூனை நடுக்கியவாறு தடியைக் கீழே ஊன்றிப் பிடித்து வருகின்ற அந்தக் கரிய உருவம்

பிரயாசையுடன் தடுமாறியவாறு, படியேறி முற்றத்தை வந்து அடைந்தது. காய்ந்த கருவாடைப்போல் உள்ள ஒரு கிழவி. சிரமப்பட்டு, மூட்டு மறையும் அளவில் உள்ள ஒரு கருப்பு முண்டை இடுப்பில் சுற்றியிருந்தாள். சிலந்தி வலைகட்டிய காய்ந்த இலையைப்போல் தோன்றுகின்ற முகம் எப்போதும் நடுங்கிக் கொண்டிருந்தது. தலையில் வைக்கோல் போன்ற தலை முடி பரந்து கலைந்து கிடந்தது. காதுகளில் கிராம ஃபோன் ஸ்பிரிங் கைப்போல் உள்ள ஈயத் தோடுகளும், கழுத்தில் கருப்புச் சரடில் கோர்த்துக்கட்டிய உருத்திராட்சமும், மார்பில் விபூதிப்பைகள் போன்றுள்ள மார்பக்ங்களும் தொங்கி ஆடிக்கொண்டிருந்தன. வலது கக்கத்தில் புற்களால் பின்னிய ஒரு கூடையும் இருந்தது. அவள்தான் 'கரிம்பாத்தி கும்பா' என்பவள். கரிம்பாலர்களின் மந்திரவாதினி.

"நீ இப்பவாச்சும் வந்தியே!" என்று மாதவி தூணில் சாய்ந்து நின்று கொண்டு புன்னகை புரிந்து கிழவியை வரவேற்றாள்.

முக்கால் பங்கும் காது கேட்காத அந்தக் கிழவிக்கு மாதவி சொன்னது ஒன்றும் கேட்கவில்லை. அவள், அப்போதுதான் பிறந்து நாய்க்குட்டியின் கண்களைப் போல் உள்ள தன் இடுங்கிய விழிகளைத் திறந்து, மாதவியை ஒருமுறை பார்த்துவிட்டு, பஞ்சுபோல் உள்ள பல் ஈறுகளை வெளியே காட்டிக் கழுத்தைக் குறுக்கிக்கொண்டு கீ....கீ...கீ என்று கொக்கரித்துச் சிரித்தாள்.

"வா வடவண்ட அறையில போயி ஒக்காரலாம்." மாதவி குனிந்து கிழவியின் காதில் உரக்கச் சொன்னாள்.

மாதவி சொன்னது தனக்குக் கேட்டது என்னும் அர்த்தத்தில், கும்பா தலையை ஆட்டினாள். மாதவி அவளை வடக்குப் பக்க அறைக்கு அழைத்துக் கொண்டு போனாள்.

அறையின் வாசலைப் பத்திரமாக அடைத்த பின், மாதவி கட்டிலின் மேல் அமர்ந்தாள். கும்பா ஊன்றுகோலை முன்னால் வைத்தாள். பிறகு கக்கத்திலுள்ள கூடையை எடுத்து கீழே வைத்துவிட்டு, கால்களைத் தரையில் நீட்டியவாறு உட்கார்ந்தாள்.

"நீ வர, ஏன் இவ்வளவு நேரம் ஆயிட்டுது கும்பா?" மாதவி கட்டிலின் மேலிருந்து கீழே குனிந்து கும்பாவின் காதுக்கு அருகே உதடுகளை வைத்து, வார்த்தைகளை உரத்த குரலில் சொல்லியபடி பேச்சை அரம்பித்தாள்.

தெளிவில்லாத கிராமீய மொழியில், இடையிடையே வார்த்தைகளை நிறுத்தி நிறுத்தித் தடுமாறியவாறு, கும்பா பதில் கூறிக்கொண்டிருந்தாள்.

"எனக்கு வயசாச்சில்ல? ரொம்ப தூரம் நடக்க முடியல. தட்டுத் தடுமாறித்தான் எங்கியும் போவ வேண்டியிருக்கு."

"உனக்கு எத்தன வயசு கும்பா?" என்று மாதவி கேட்டாள்.

நிச்சயமில்லை என்பது போல், கும்பா கைகளை விரித்துக் காட்டினாள்.

"ஒன்ன நான் கூப்புட்டது எதுக்குன்னு புரிஞ்சிக்கிட்டயா கும்பா?"

"இல்ல, இருந்தாலும் இந்த அடிமை யூகிச்சிக்கிட்டா. இந்தக் கொழந்த தம்புராட்டிய எதுவோ புடிச்சிக்கிச்சுன்னு தெரியுது."

மாதவியின் இறுக்கமான மஞ்சள் ரவிக்கையின் கீழ், நிர்வாணமாகக் காணும் வயிற்றின் மேல், கர்ப்பமா என்னும் அர்த்தத்தில் விரலைச் சுட்டிக்காட்டி, தன்னுடைய நீலம் பாய்ந்த நாக்கை நீட்டி அசைத்துக் கும்பா கேட்டாள்:

"அங்க ஒண்ணும் கெட்டுப் போவலியே?"

"இல்ல, கும்பா, பத்திரமாத்தான் இருக்கு" மாதவி தன் அடி வயிற்றை மெதுவாகத் தடவியவாறு கூறினாள்.

"பின்னே என்ன கோளாறு? யாராச்சும் விரோதியா?"

"விரோதிய அழிக்கறத்துக்கு இல்ல. ஒருத்தர இணங்கச் செய்யணும். அதுக்குத்தான் ஒன்னோட ஒதவி வேணும் கும்பா-"

"ஆள இணங்கச் செய்ய என் தங்கத்துக்கு எதுக்கு மருந்தும் மந்திரமும்? அந்தக் கண்ணும் மொகமும் மட்டும் போதுமே. எந்த ராஜாவயும் அவைகளே இணங்க வச்சிடுமே"

"கண்ணையும் மொகத்தையும் மட்டுமில்லாம, அதுக்கு மேலயும் செஞ்சுப் பாத்தாச்சு, மயங்கல!" மாதவி துக்கத்துடன் சொன்னாள்.

"அப்போடா! அப்படிப்பட்ட ஆம்பளைங்களும் உண்டா? யாரந்தப் பையன்?" என்று கும்பா தன் தாடையை அசைத்துக் கேட்டாள்.

"மருந்து பலிக்க ஆளுடைய பேரு வெவரம் ஒண்ணும் தேவை இல்லியே - மத்திரம் செய்யும்போது தானே அதெல்லாம் வேணும்."

"மருந்தும் மந்திரமும் சேந்த ரெட்டைத் தாக்குதலுக்குப் பலன் நிச்சயமா கெடைக்கும்."

"இப்ப மருந்த மட்டும் உபயோகிச்சா போதும். மந்திரம் அப்படியே இருக்கட்டும்!"

"என் தங்கத்தின் இஷ்டம் போலவே இருக்கட்டும். சும்மாதான் கேட்டேன். எனக்குத் தெரிஞ்சா என் தங்கத்துக்கு ஒண்ணும் ஆபத்து உண்டாவாது."

"ஆமாம். உன் கிட்ட சொன்னா ஒண்ணும் தப்பில்ல கும்பா. ஆளச் சொல்றேன். அதோ. அந்தக் கெழக்குக் குன்னுல ஒரு சாமியாரு வசிக்கிறாரு."

"சாமியாரா? தாடியுள்ள சாமியாரா?".

"தாடி மொளைக்கக் கூட இல்ல. அவ்வளவு எளம் வயது".

"அவன் அங்க தவம் செய்யறானா?"

"இல்ல அவன நெனச்சு நான் நான் தவம் செய்யறேன். அவன் ஒரு வெவசாயி."

"வெவசாய சாமியாரா?" கும்பா ஆச்சரியத்துடன் கேட்டான்.

"ஆமாம். அவன் ஒரு தெக்கத்திய கிறிஸ்துவன்."

"ஐயோ. அண்ணாச்சிகளா?" கும்பா பயத்துடன் நாக்கை நீட்டிக் கடித்துக் கொண்டு கேட்டாள். "அப்படின்னா பயம்தான். இந்த அண்ணாச்சிங்க எதச் செய்யவும் தயங்காத கூட்டமாச்சே. தெய்வ எடங்களயும், நாகக் கல்லையும், சிவ லிங்கத்தையும், எல்லாம் கொத்திக்கொளறி அழிக்கிற ஜீவனுங்களாச்சே. ரெண்டு பேர நான் ஒரு நாள் மந்திரம் போட்டுக்கொன்னேன். ஒருத்தன பைத்தியம் பிடிக்கச் செஞ்சேன். என் தங்கமே, அப்படிப்பட்ட ஒருத்தங்கிட்ட உன் மனம் எளகினது, எனக்கு நல்லா தெரியல"

"கரும்பப் போல எளம் வயசுக்காரன் கும்பா, ஆனா. அவன் இதயத்துல மதம்கிற கோட்டை பலமாகிக்கிட்டு வருது. அதப் புகுந்து போவ வழி தெரியல. அவன், பொன்னுங்கள பாத்தா போதும், கண்கள மூடி ஜெபம் செய்ய ஆரம்பிச்சுடறான். என்றாலும் அவன நான் ஒரு தடவ கெடுத்துட்டேன்."

மாதவி அந்த நிகழ்ச்சியை கும்பாவுக்கு விவரித்தாள். அதைக் கேட்டதும் அந்தக் கிழவி தன் ஈறுகளை வெளிக்காட்டி, கண்களை இறுக்கி மூடிச் சிறிது நேரம் கொக்கரித்துச் சிரித்துவிட்டாள்.

"வேறு எந்தப் பொண்ணையும் விரும்பாத அந்த ஆம்பளத்தான் எனக்கு அடிமையாகக் கெடைக்கணும். அவனப் பிரார்த்திச்சிக் கிட்டு தான் என் இதயம் அழுது அலறிக்கிட்டு இருக்குது. என் ஆசையை நீ தான் கும்பா நிறைவேத்தித் தரணும்" என்று மாதவி கண்களைச் சிமிட்டிக்கொண்டு கூறினாள்.

கும்பா சிறிது நேரம் சிந்தனையில் மூழ்கி, தாடை எலும்பை மார்போடு சேர்த்து வாயைத் திறந்து அசைவில்லாமல் இருந்தாள். பிறகு, சாவதானமாகத் தன் கூடையில் கையைவிட்டு அதிலிருந்து சில சிறு பாட்டில்களையும், காய்ந்த சில இலைப் போட்டலங் களையும், மூலிகைக் கட்டுக்களையும் மற்றவைகளையும் வெளியே எடுத்துத் தனக்கு முன்னால் பரப்பி வைத்தாள்.

ஒரு சிறிய பாட்டிலை எடுத்து, கார்க் மூடியை இழுத்தெடுத்து பாட்டிலைப் பரிசோதித்தாள்.

"இது பன்னித் தந்தத்தால செஞ்ச தைலம். எட்டு மாசம் ஆனக் கர்பத்தக்கூட பழங்கஞ்சியப்போல வெளியே கொண்டார, இதுல ஒரு துளி போதும். என் தங்கத்துக்கு இப்ப இது ஒண்ணும் அவசியமில்ல. இந்தக் கும்பா எல்லாத்தியும் நெனச்சித்தான் கொண்டாந்திருக்கேன். என் தங்கத்துக்கு இதான் தேவப்படுது -- வசீகரண சூர்ணம்."

கும்பா ஒரு சிறிய பாட்டிலை உயர்த்திப் பிடித்துக் காட்டிக் கொண்டே "இதுல ஒரு பண எடைய பலகாரத்துல சேத்துக் கொடுத்தா, ஆம்பளக் கீரிகூட பொம்பளப் பாம்புக்கிட்ட உடலுறவு கொள்ள மயங்கிப் போறதப் பாக்கலாம்" என்று கூறினாள்.

மாதவி அந்த பாட்டிலைக் கை நீட்டி வாங்கினாள்.

"இன்னும் ஒரு பாட்டிலக் கொடு" மாதவிப் பாட்டிலை மடியில் வைத்துக்கொண்டு மீண்டும் கை நீட்டினாள்.

கும்பா தலையை ஆட்டி விளக்கினாள்.

"அது எவ்வளவோ போதும். கருநாக வள்ளிப்பொடி சேந்தது. ஒரு மாத்திர அதிகமாப்போனாலும் காமப் பைத்தியமாக்கிடும்."

"அத நான் சரியா செஞ்சிக்கறேன். ஒரு பாட்டிலு என்கிட்ட இருக்கட்டும்", என்று மாதவி பிடிவாதமாகக் கேட்டாள்.

கும்பா கடைசியில் தேடி, வெறொரு பாட்டிலைக் கையில் எடுத்து மாதவியிடம் கொடுத்தாள். பிறகு மீண்டும் கூடையில் கையைவிட்டு ஒரு சிறிய காய்ந்த இலைப் பொட்டலத்தை இழுத்து எடுத்துப் பரிசோதித்துவிட்டு மாதவியிடம் நீட்டினாள்.

"இதயும் கையில் வெச்சுக்க கண்ணு, கண்ணுக்கு மைதீட்டிக் கலாம். அஞ்சனக் கல்லு, சந்தனம், தாமரத்துளிரு, கோரோசன, நாவல் பூவு எல்லாம் சேத்து அரைச்சு செஞ்ச மையி. இதால கண்ணுக்கு மைதீட்டிக்கினு நீ நெனைக்கிற ஆம்பளைய ஒருமுறை பாத்தா போதும். அவன் ஒன் பின்னால வராம இருக்க முடியாது."

மாதவி அந்தப் பொட்டலத்தையும் மடியில் முடிந்து கொண்டாள்.

கும்பா பாட்டில்களையும், பொட்டலங்களையும் திரும்பக் கூடையிலேயே நுழைத்துவிட்டு, கூடையை மடக்கிக்கொண்டு புறப்படத் தயாரானாள்.

மாதவி எழுந்து தன் பெட்டியைத் திறந்து. ஒன்றாகச் சேர்த்து இணைக்கும் இடத்தில் கருப்புக் கரையுள்ள ஒரு கோடி முண்டையும். ஒரு ரூபாய் நாணயத்தையும் எடுத்துக் கும்பாவிடம் நீட்டினாள். கும்பா அந்தச் சன்மானத்தை வணங்கி ஏற்றுக் கொண்டாள். ரூபாயை மடியில் முடித்து. முண்டை மடிப்பை விரிக்காமல் முத்திடம் கொண்டுட சென்று ஒருமுறை முகர்ந்து பார்த்தாள். புது முண்டுதான்!

கூடையின் கட்டை அவிழ்த்து அதில் முண்டை நுழைத்து வைத்தாள். கூடையை மீண்டும் மடக்கிக்கட்டி. அவள் கையைத் தரையில் ஊன்றி எழுந்தாள்.

"என் தங்கமே நான் போய் வரட்டுமா? இந்தக் கரிம்பாத்திக் கும்பாவுக்கு இனிமே என் தங்கத்தோட மொகத்தப் பாக்க அதிர்ஷடம் இருக்குமோ, என்னமோ! வயசாசில்லே? வர்ற வருஷம் மலைப்பயிரு வைக்கக் குன்று மாறும்போது. இந்தக் கும்பாவும் இருப்பாளோன்னு தெரியல."

கிழவியின் உலர்ந்த கண்கள் நனைந்தன. சுருங்கிய முகம் அதிக விகாரமாகி, வேகமாக உதடுகள் நடுங்கவும் செய்தது.

"நீ வெசனப்பட வாணாம் கும்பா", என்று அமைதிப் படுத்திய மாதவி, "நீ இன்னும் இருபத்தஞ்சு வருஷம் இருப்ப கும்பா. என் வெஷயம் பலிச்சதும் ஒனக்கு விசேஷ வெகுமதி கொடுக்க ஆளனுப்பறேன். அதுக்காக நீ இங்க இன்னும் ஒரு தடவ வரணும். தெரிஞ்சதா கும்பா?" என்று மேலும் கூறினாள்.

கும்பா, கண்களைத் துடைத்துக்கொண்டே வராண்டாவிற்கு நகர்ந்தாள். மாதவி அவளுடைய கைகளை பிடித்துக்கொண்டு முற்றம் வரை கூடச் சென்றாள்.

அந்தக் கிழவி குனிந்து நடுங்கிக் கொண்டே போவதைப் பார்த்துக்கொண்டு மாதவி படியிலேயே நின்றாள்.

திடீரென்று, அவளுடைய கண்கள் கிழக்குக் குன்றுக்குத் தாவின. அந்தோணி குன்றிலிருந்து இறங்கி வந்து கொண்டிருந்தான்.

அவன் சட்டை அணிந்திருந்தான். அதனால், அவன் செரியான் வசிக்கும் இடத்திற்குப் புறப்பட்டுச் செல்கிறான் என்று அவளுக்குப் புரிந்தது.

அவன் குன்றிலிருந்து இறங்கி. கிழக்கு வயலைக் கடந்து அடுத்த மலைச் சரிவில் மறையும் வரையில், அவள் கண் சிமிட்டாமல் பார்த்துக்கொண்டே இருந்தாள். பிறகு அவள் திரும்பவும்

அறைக்கு வந்து கும்பா கொடுத்த மருந்துகளைக் கையில் எடுத்துப் பரிசோதனை செய்ய ஆரம்பித்தாள்.

மாதவிக்கு அந்த மருந்திலும், அதுக்கு உபதேசம் செய்த மந்திரவாதினியிடத்திலும் மிகவும் நம்பிக்கையுண்டு. மற்ற யாராலும் தெரிந்துகொள்ள முடியாத, எத்தனையோ தனி மூலிகைகளையும் மருந்துகளையும் கும்பாவுக்குத் தெரியும். கும்பாவின் தந்தையும், அந்தப் பிரதேசமெங்கும் புகழ் பெற்ற ஒரு மந்திரவாதியாகவும் வைத்தியருமாக இருந்தவன்தான்! அவன்தான் கும்பாவுக்கு இதையெல்லாம் உபதேசம் செய்து கொடுத்திருந்தான். அந்தக் கரிம்பாலக் குடும்பத்திற்கு இது பரம்பரையாகக் கிடைத்த ரகசிய சாஸ்திரம்.

கும்பா பகல் முழுவதும் பச்சை மூலிகைகளைத் தேடிக் காடு முழுவதும் அலைவதைக் காணலாம். அவள் கடும் விஷமுள்ளவளும் கூட. ராஜவெம்பாலையையும், சூளைப் பாம்பையும் கையினாலேயே பிடித்திருக்கின்றாள்.

பச்சை மருந்தை வாயில் போட்டு, விஷத்தைக் கக்க வைக்கவும் மந்திரம் ஓதி நாகங்களை முன்னால் வரவழைக்கவும் அவளுக்கு முடியுமாம்! என்றாலும், கும்பாவின் புகழ் அவைகளில் ஒன்றும் அதிகமில்லை. கள்ளத்தனமாகக் கர்ப்பம் தரிக்கும் கல்யாண மாகாத பெண்களுக்கு அதிலிருந்து விடுபட வேண்டுமென்றால், கும்பாவை ஒரு முறை பார்த்து விட்டாலே போதும். கும்பாவின் வைத்தியம் இவைகளிலெல்லாம் ஒருமுறைகூடத் தவறியதாக இதுவரை அப் பிரதேசத்தில் கேட்டதில்லை. கும்பாவின் கைப் பட்டாலே போதும். கர்ப்பம், ஒருமுறை வெற்றிலைப் போட்டுத் துப்புவதைப் போல் அவ்வளவு எளிதில் வெளிவந்து விடுமாம்.

இதற்கு முன்பு இருமுறை அவள் மாதவியின் வீட்டிற்கு வந்திருக்கிறாள்.

மாதவிக்கு அப்போது எட்டு வயது. அவளுக்கு மலைப்பேய் பிடித்திருப்பதாக ஜோசியன் ஜோதிடம் கணித்துக் கூறினான். அந்தப் பேயை விரட்டுவதற்காகக் கும்பாவைத்தான் கிருஷ்ணன் நம்பியார் அழைத்துக்கொண்டு வந்தார். கும்பா ஒரு தாயத்தை மந்திரித்துக் கட்டினாள். அன்றுதான் மாதவி கும்பாவை முதன் முதலாகப் பார்த்தாள். அன்றும் அவள் அப்படித்தான் ஒரு மர ஓந்தியினைப் போல் உள்ள ஒரு உருவமாக இருந்தாள்.

மறுபடி ஒருமுறை அவர்கள் வீட்டில் பசுவிற்குப் பிரசவவேதனை ஏற்பட்டது. கன்று முழுவதுமாக வெளியே வராமல், பிராண

வேதனையுடன் அலைமோதிக் கத்திக்கொண்டிருந்தது. காலை முதல் மாலைவரை பசு பிரசவிக்காமல் அப்படியே அலைமோதிக் கொண்டிருந்தது. பசு அந்த நிலையிலேயே இறந்துவிடும் என்று எல்லோரும் பயந்து கொண்டிருந்தார்கள்.

அப்போது யாரோ 'கரிம்பாத்திக் கும்பாவைக் கூப்பிட்டுப் பார்க்கலாம்' என்று சொன்னார்கள். தற்செயலாக கரிம்பாலர்களும் அன்றைக்குத்தான் இவர்கள் வீட்டுக்கு அருகிலுள்ள குன்றில் குடி பெயர்ந்து வந்திருந்தார்கள்.

கையில் என்னவோ பச்சிலையைச் சுருட்டிப் பிடித்துக் கொண்டே கும்பா படியேறி வந்தாள். அவள் சிறிது வெண்ணெய் தேவைப்படும் என்றாள். அது கிடைத்ததும் அவள் கையிலுள்ள பச்சிலையையும் வெண்ணெயையும் சேர்த்து அரைத்து, உள்ளங்கையில் புரட்டிக்கொண்டு பசுவின் அருகே வந்தாள்.

அவள், மருந்து தடவிய கையினால் பசுவின் பின்பாகத்தில் வாலுக்கு நேராகக் கீழே தடவினாள். ஒரு ஜால வித்தையைப் போல் பசுவின் கர்பப்பை உடைந்து பிறப்பு உறுப்பு மலரைப் போல் மலர்ந்து, கன்று வெளியே வந்து வீழ்ந்தது. உடனே, அவள் அந்த மருந்தை எதிர்ப்பக்கத்தில் தடவியதும் பசுவின் பிறப்புறுப்பு பாகம் சுருங்கிப் போய்விட்டது. அவள் அடுத்த கையினால் பசுவின் பிறப்புறுப்பை ஒரு முறை தடவியதும், பசுவின் வேதனையும் நின்று விட்டது.

அவைகளையெல்லாம் மாதவி தன் கண்களாலேயே கண்டாள். அது மட்டுமில்லாமல், கும்பா ஒரு சுத்தமில்லாத ஜன்மமுமாவாள். அவைகளையெல்லாம் செய்து முடித்த கும்பா, கையைக் கழுவாமலேயே முண்டில் துடைத்துவிட்டு வெற்றிலையைச் சுருட்டி வாயில் போட்டுக்கொண்டாள்.

மாதவி மருந்து பாட்டில்களைப் படுக்கையின் உள்ளே வைத்துவிட்டு, ஆடைகளை மாற்றிக்கொண்டு, குளிப்பதற்காகக் கிணற்றின் கரைக்குச் சென்றாள்.

அவள் குளித்து உடை மாற்றி, படுக்கையின் அடியிலிருந்து ஒரு மருந்து பாட்டிலை எடுத்துக்கொண்டு முற்றத்தில் இறங்கினாள். முற்றத்தில் இருந்த செண்பகக் கன்றிலிருந்து அவள் ஒரு பூவைப் பறித்து தலை முடியில் சூடியவாறு, நான்கு பக்கங்களிலும் ஒரு பார்வை பார்த்து ஆராய்ச்சி நடத்தினாள்.

அந்த வயலும் அதன் சுற்றுச் சூழலும், குன்றின் சரிவும் எல்லாம் சூனியமாகக் கிடந்தன.

அவள் வயல் வழியாகக் கிழக்கே நடந்தாள். மெல்லக் குறுங்காடுகளைக் கடந்து, தொண்டியன் மலையைச் சுற்றி ஏறி, அந்தோணியின் குடிசையை அடைந்தாள்.

அந்தோணியின் பெட்டைப் பூனை, அடுக்களையில் இடுப்பில் திண்ணைமேல் குறுகிக் குந்திக் கொண்டிருந்தது. குடிசையில் வேறு ஒரு ஜீவனையும் காணவில்லை.

அவள் அடுக்களையில் உள்ள பாத்திரங்களையெல்லாம் திறந்து பார்த்தாள். கலயத்தில் கஞ்சி வேக வைத்து மூடி வைக்கப்பட்டிருந்தது. அருகிலேயே ஒரு மண் சட்டியில் வேக வைத்த மரவள்ளிக்கிழங்கும் பத்திரமாக மூடி வைக்கப்பட்டிருந்தது.

மாதவி ஜாக்கிரதையாக மீண்டும் வெளியே பார்த்தாள். யாருமில்லை. ஒரு கருடனின் நிழல். முற்றத்தை சுற்றி நகர்ந்து கொண்டிருந்தது.

அவள் சட்டியை முன்னால் நகர்த்தி வைத்தாள். மடியில் முடிந்து வைத்திருந்த மருந்து பாட்டிலை எடுத்தாள். மூடியைத் திறந்து சட்டியிலுள்ள கிழங்கில் பாட்டிலிலுள்ள சூர்ணத்தைத் தூவினாள். பிறகு, கை விரலினால் வேக வைத்த கிழங்கை நன்றாக குத்திக் கிளறினாள். மீண்டும் அதை அங்கேயே பத்திரமாக அடைத்து வைத்து, வேகமாக வெளியே வந்தாள். திரும்பும் வழியில் அந்தக் குறுங்காடுகளிலிருந்து கொஞ்சம் சுள்ளி வறகுகளைப் பொறுக்கிக் கட்டிக் கையில் தூக்கிக்கொண்டாள்.

## 46

அந்தோணி, ஜானின் பங்களாவை அடைந்தபோது, செறு காட்டில் வர்க்கி மட்டுமே அங்கே இருந்தான். ஜான் சாரும், செரியானும், வர்க்கீஸும், ஒரு புது விருந்தாளியும் சேர்ந்து வெகுதூரத்தில் எங்கேயோ வேட்டைக்குப் போயிருப்பதாக வர்க்கி அந்தோணியிடம் கூறினான்.

"இன்னிக்குச் சித்தப்பா திரும்பிடுவாங்களா?" அந்தோணி ஏமாற்றத்துடன் கேட்டான்.

"தெரியாதே. அரபி மலைக்குப்போயிருக்கிறதால முக்கால்வாசி வரமாட்டாங்கன்னுதான் நெனைக்கிறேன்"

"நான் சித்தப்பாவை முக்கியமாப் பாக்கணுமே. சித்தப்பா மலையிலேந்து வந்து கொஞ்ச நாளாயிட்டுது."

"அப்படியா, அங்க என்ன விசேஷம்? வெவசாயமெல்லாம் நல்லபடியா நடக்குதில்ல?"

"வேலைக்காரங்க கெடைக்கறதுதான் ரொம்பச்சங்கடமா இருக்கு. கெழங்கு புடுங்கணும் முத்திட்டுது."

"நாளைக்குக் காலைக்குள்ள செரியான் வராம இருக்க மாட்டான். நீ இன்னிக்கே திரும்பிப் போவணுமா அந்தோணி?"

"போவணும்தான். அங்கக் காவலுக்குக் ஒராளுகூட இல்ல."

"அதைப்பத்திக் கஷ்டப்படவேணாம். நான் போய்க்கிறேன். நான் ஒரு தனி வேட்டைக்குப் போவணும். அந்தத் தொண்டியன் மலைக்குப் பக்கத்தில் மானுங்க எறங்கறதுண்டுன்னு கேள்விப் பட்டேன். அதுல ஒண்ணைச் சுடணும். ராத்திரியில் ஒன் குடிசையில படுத்துத் தூங்கலாமா அந்தோணி?"

அந்தோணி, சந்தேகத்துடன் வர்க்கியின் முகத்தை உற்று நோக்கினான்.

"நான் வேட்டைக்குப் போயிட்டா இந்தப் பங்களாவுல ராத்திரிக்கு யாரும் இல்ல. தொம்மன் டவுனுக்குப் போயிட்டான். நீ இங்கியே இன்னியா ராத்திய சொகமா கழிச்சுடு அந்தோணி. நான் வேட்டைய முடிச்சிக்கிட்டு ஒன் குடிசையில் காவக்காத்துக்கறேன். என்ன சொல்ற?"

அந்தோணி அதற்கு மறுப்பு சொல்லவில்லை.

"அங்க ஒன் குடிசையில் ஏதாவது சாப்பிட கெடைக்குமா அந்தோணி?" என்று கேட்டான் வர்க்கி.

"கெழங்கு வெவிச்சு, கஞ்சி காச்சி வெச்சிட்டுதான் இங்க நான் வந்தேன்."

"தாராளமாப் போதும்."

வர்க்கி எழுந்து உடை மாற்றினான். அரைக்கால் காக்கிச் சட்டையும், நீல நிற பனியனும், காலில் காண்வாஸ் ஷூவும் அணிந்து கொண்டான். துப்பாக்கியைத் துடைத்துப் பரி சோதனை செய்து, சுவரில் சாய்த்து வைத்தான். வெடிமருந்துப் பை யையும் உணவுப்பொருள் பையையும் தோளில் தூக்கிக்கொண்டு, வேட்டை டார்ச்சு லைட்டைக் கக்கத்தில் இறுக்கிக்கொண்டு, சுவற்றில் சாய்த்து வைக்கப்பட்டிருந்த துப்பாக்கியையும் எடுத்துக் கொண்டு வர்க்கி புறப்பட்டான்.

"நாளைக்குக் காலையில் நான் திரும்பி வந்ததும் நீ போனாப்போதும் அந்தோணி, மான் கறியைத் தின்னுட்டுப் போவலாம். அதுக்குள்ளே செரியானும் வந்திடுவான்."

"நான் சித்தப்பா வூட்டுக்குப் போறேனே?" என்று அந்தோணி கேட்டான்.

"வேணாம். தொணைக்கு ஆளு இல்லாம அங்க படுக்க வேணாம். அங்கக் காட்டு யானை நடமாட்டம் இருக்கு. அப்பறம் பேய் பிசாசுங்க ஒபத்திரவமும் கூட ஆரம்பிச்சியிருக்குன்னு செரியான் சொன்னான். செரியான் இப்ப அங்க போறதே இல்ல. இங்கியே தான் தூங்கறான். என் அறையில் நீ படுத்துக்க அந்தோணி. எனக்கு வெச்சிருக்குற சாப்பாட்டை நீ சாப்பிட்டு." என்று கூறி ஒரு அரைகுறையான பாட்டைப் பாடியவாறு வர்க்கி முற்றத்தில் இறங்கி நேராகத் தெற்கே நடந்தான்.

அந்தி நேரத்தில் வர்க்கி அந்தோணியின் குடிசையை அடைந்தான்.

தான் அன்று கண்ட இளம்பெண்ணுக்கும் அந்தோணிக்கும் இடையே தொடர்பு உண்டு என்றும், அவள் இரவில் அந்தோ ணியின் குடிசைக்கு வருகிறாளென்றும் வர்க்கி பலமாக நம்பியிருந் தான். அவன் அன்று அங்கே வத்தாளானால், சுலபமாகத் தன்னுடைய ஆசையை முடித்துக் கொள்ளலாமென்றும் அந்த முட்டாள் தீர்மானித்துக் கொண்டான். இரவு பத்து மணிவரை அந்தோணியின் குடிசையில் மறைந்திருக்கலாமென்றும், அதற்குள் அவள் வரவில்லையென்றால், அவளைத் தேடி அவள் வீட்டிற்கே தைரியமாக சென்று அவளைப் பார்த்து விஷயத்தை முடித்து கொள்ளலாமென்றும், அந்தக் காமக் கோமாளி திட்டம் போட்டான். 'பொன்னையும் பணத்தையும் கண்டால் மயங்காத பெண்ணில்லை' என்றொரு நம்பிக்கைதான் வர்க்கியின் காதல் களியாட்டங்களின் கோஷமாக இருந்தது. மாதவியை வசிகரிக்கப் புது சவரன் ஒன்று அவன் கையில் பத்திரமாக இருந்தது.

வர்க்கி, துப்பாக்கியையும் பைகளையும் கட்டிலுக்குக் கீழே மறைத்து வைத்தான். விளக்கைப் பற்றவைத்து குடிசையின் உள்ளே எல்லாவற்றையும் பரிசோதித்தான். பிறகு அடுக்களைக்குச் சென்றான். அந்தோணி கூறியபடி கலயம் நிறையக் கஞ்சியும், சட்டியில் மரவள்ளிக்கிழங்கும் இருந்தன. சாப்பிட்டுவிட்டு கட்டிலில் படுத்துப் போர்த்திக்கொண்டு தூங்குவது போல் இருக்கலாம் என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டு, அவன் கஞ்சிக் கலயத்தையும் கிழங்குச் சட்டியையும் முன்னால் நகர்த்தி வைத்து, இரவு சாப்பாட்டைச் சாப்பிட உட்கார்ந்தான்.

## 47

மிருதுவான பட்டுமெத்தைமேல் படுத்திருந்ததால் அந்தோணிக்கு தூக்கம் வரவில்லை. அவனுக்கு முரட்டுத் தனமாகக்

கயிற்றுக்கட்டிலில் படுத்துத்தான் பழக்கமுண்டு. நடு ராத்திரி வரையில் இடைஞ்சலுடன் அதன்மேல் உருண்டு கொண்டும், திரும்பித் திரும்பியும், எழுந்து உட்கார்ந்து சொறிந்துகொண்டும் பொழுது போக்கினான். பிறகு அவனுக்கு, அதிக சுகம் சௌகரிய மில்லாமல் தோன்றியது. அதனால், அவன் எழுந்து தரையில் ஒரு சமுக்காளத்தை விரித்து அதில் படுத்துக்கொண்டான்.

அந்தோணி வழக்கம்போல் அதிகாலை ஐந்து மணிக்கு எழுந்து, வெளிச்சம் வரும்வரை பிரார்த்தனையைச் சொல்லிக்கொண்டு நேரத்தைக் கழித்தான்.

மறுநாள் காலை பத்துமணியாகியும் வர்க்கி வந்து சேரவில்லை. அவன் மதியம்வரை காத்திருந்தான்.

யாரும் வந்து சேராமல் பங்களாவை விட்டுப்போகவும் அவனுக்கு மனம் வரவில்லை. எதுவானாலும் அன்று இரவும் அங்கேயே தங்குவதென்று இறுதியில் உறுதி செய்துகொண்டான். மாலையில் தொம்மன் வந்தான். வர்க்கி வரவில்லை.

அதற்கு மறுநாள் காலையில் அந்தோணி ஏமாற்றத்துடன் தன்னுடைய தொண்டியன் மலைக்குப் புறப்பட்டான். வர்க்கி திரும்பி வராததில் அவனுக்குப் பல பயங்கர எண்ணங்களும் உதித்தன. அந்தோணி இரண்டு நாள் தொடர்ந்தாற்போல் ஒரு முறை கூட அந்தக் குடிசையை விட்டு வெளியே சென்று தங்கிய தில்லை. வர்க்கி நிர்ப்பந்தப்படுத்தாமலிருந்ததால் அவன் அங்கே வந்த அன்றைக்கே தன் குடிசைக்குத் திரும்பிப் போய்விட்டி ருப்பான்.

ஏதோ ஆபத்து நேர்ந்துவிட்டது என்று அகாரணமாகவும் அசாதாரணமாகவும் ஒரு தோன்றல் -- ஓர் உள்ளுணர்வு - ஒரு குருட்டு நினைவு - அவனுள் அரித்துக்கொண்டிருந்தது. கர்த்தரையும் சிலுவையையும் தியானித்துக்கொண்டு, அந்தோணி வேகத்தை அதிகரித்துக் நடந்தான்.

அவன் குளியன் மலையின் அடிவாரத் திருப்பத்தை அடைந்தான். அந்த வழிக்கு அருகேயுள்ள ஒரு முந்திரிமரத்தின் கீழே ஒரு சிறு பெண் அழுதுகொண்டு நின்றிருந்தாள்.

அருகில் சென்று பார்த்தபோது அந்தப் பெண் யாரென்பது புரிந்தது. அந்தோணி ஆச்சரியத்துடனும் அனுதாபத்துடனும் தனக்குத்தானே, "ஐயோ, மாத்தண்ணன் பொண்ணாச்சே இது?" என்று கேட்டுக்கொண்டான்.

"கொழுந்த. நீ ஏன் இங்க நின்னுக்கிட்டு அழுவுற?" என்று அந்தோணி மேரிக்குட்டியின் தோளில் கருணையுடன் கையை வைத்துக்கேட்டான்.

"அம்மாவுக்கு ஒடம்பு நல்லா இல்ல. ரத்தத்துல விழுந்து கெடக்குறாங்க. கூப்புட்டாலும் பேசமாட்டேங்கறாங்க -- மேரிக்குட்டி குரல் தழுதழுத்தவாறு கண்களை துடைத்துக் கொண்டு கூறினாள்.

"ஐயோ கர்த்தரே! என்னாச்சு? கொழுந்த அங்க ஒன் அப்பா இல்லியா?"

"அப்பா எங்கியோ போயி மூணு நாளாயிட்டுது. வூட்டுல வேற யாருமில்ல. டாக்டரக் கூப்பிடறதுக்கு ஆளில்ல. அம்மாவும் கூப்பிட்டா பேசமாட்டேங்கறாங்க" என்று நினைத்து நினைத்து விம்மி விம்மி அழுதாள்.

"அழுாதே கொழுந்த. அம்மா களைப்பால பேச முடியாம கெடப்பாங்க. நீ வா. நாமப் போயிப் பாப்போம்."

அந்தோணியும் மேரிக்குட்டியும் சேர்ந்து குளியன் மலைக் குடிசைக்கு நடந்தார்கள். ஜானிக்குட்டி அழுதுகொண்டே வராண்டாவில் நின்றது.

குடிசையினுள்ளே கண்ட காட்சி அந்தோணியை மூர்ச்சைடைய வைக்கவில்லை, என்று வேண்டுமானால் சொல்லலாம். மரியம் கண்களை மூடி அசைவு இல்லாமல் மல்லாந்து கிடந்தாள். அவள் உடுத்தியிருந்த துணி முழுவதும் இரத்தத்தில் மூழ்கி ஒட்டிக் கொண்டிருந்தது. அவளை யாரோ வயிற்றில் குத்திக் கொலை செய்தது போல் இருந்தது.

அந்தோணிக்கு ஒன்றும் புரியவில்லை. அவன் மரியத்தின் மார்பில் கை வைத்துப் பார்த்தான். இதயத் துடிப்புக்கான யாதொரு அறிகுறியும் தெரியவில்லை.

"கொழுந்த. நீ இங்கியே இரு. நான் போயி டாக்டரைக் கூட்டிக்கிட்டு வறேன்." அந்தோணி மேரிக்குட்டியை மரியத்தின் அருகில் நிறுத்திவிட்டு வெளியே ஓடினான்.

அங்கே இருந்து மூன்று மைல் தூரத்தில் பாம்பாடி தாமஸ் என்னும் புது ஹோமியோபதி டாக்டர் தங்கியிருந்தார். அந்தோணி காட்டிலும் மலையிலும் ஏறி இறங்கி குறுக்கு வழியாக டாக்டரிடம் சென்று விவரங்களைச் சொன்னான். டாக்டர் உடனே தன்னுடைய 'கிட்' பேக்கையும் ஸ்டெதாஸ்கோப்பையும் தூக்கிக்கொண்டு அந்தோணியுடன் புறப்பட்டார்.

டாக்டர் மரியத்தைப் பரிசோதித்துவிட்டு, முகத்தை தாழ்த்திக் கொண்டு வெளியே சென்றார்.

"அந்தப் பொண்ணு செத்துக்கிடக்கறா" டாக்டர் சோப்பைக் கையில் பூசி, கைகழுவத் தண்ணீர் கேட்டுக்கொண்டு அந்தோணியிடம் சொன்னார்.

"ஐயோ, மரியம் அக்கா செத்துக் கெடக்கறாங்களா? நான் போலீசுக்குப் போயி சொல்லிட்டு வரட்டுமா?"

மரியத்தை யாரோ வயிற்றில் குத்திக் கொலை செய்து விட்டார்கள் என்று அந்தோணி நினைத்திருந்தான்.

"போலீசுக்கு ஏன் தெரியப்படுத்தணும்?" என்று டாக்டர் கேட்டார்.

"இது கொலைதானே?"

"அவுங்கள யாரும் தொடக்கூட இல்ல. பயங்கரமான கர்ப்பச் சிதைவாலதான் அவுங்க செத்திருக்காங்க. கர்ப்ப காலத்துல அளவுக்கதிகமா கொய்னா மாத்திரைச் சாப்பிட்டதால வந்த பலன் இது. அதோட இல்லாம பிறப்புறுப்புல ஏற்பட்ட காயத்தால செப்டிக்கும் ஆயிட்டுது."

அந்தோணிக்கு அவையெல்லாம் புதுச் செய்திகளாக இருந்தன. அவன் வாயைத் திறந்து கொண்டு கவனமாகக் கேட்டான்.

டாக்டரும் அந்தோணியும் சேர்ந்து மீண்டும் வெளியே நடந்தார்கள். டாக்டர் தன் வீட்டிற்கும், அந்தோணி மாதா கோயிலின் ஃபாதரைக்கண்டு இறந்து கிடக்கின்ற மரியாம்மையின் விஷயத்தில் செய்யவேண்டிய சடங்குகளைப்பற்றி ஆலோசிக்க, மாதா கோயிலுக்கும் சென்றார்கள்.

ஃபாதர் சள்ளிப்பிரம்பன், அந்தோணி கூறியதையெல்லாம் மிகக் கவனத்துடன் கேட்டவாறு கண்களை மூடி இருந்தான். பிறகு கண்களைத் திறந்து எதையோ ஆலோசித்து, சுட்டு விரலை உயர்த்திக் கூறினார்:

"இந்த மாத்தன் சிலுவமேல கல்லெறிஞ்ச மகாபாவியாச்சே!"

"என்னவோ; எனக்குத் தெரியாது. ஆனால், மரியம் அக்கா ஒரு ஒரு உத்தம பக்தையாக இருந்தாங்க" என்று அந்தோணி அனுதாபத்துடன் தெரிவித்தான்.

"எனக்குத் தெரியும்.....எனக்குத் தெரியும்" என்று ஃபாதர் சள்ளிப்பிரம்பன் தாடியைத் தடவியவாறு,"மரியத்தின் சவ அடக்கத்துக்கான எல்லாச் செலவுகளையும் இங்கிருந்தே செஞ்சுக்கலாம்" என்று கூறினார்.

அந்தோணி, ஃபாதரை நன்றியுடன் தாழ்ந்து வணங்கிவிட்டு, தான் சென்ற காரியம் வெற்றியடைந்த மகிழ்ச்சியுடன் திரும்பினான்.

தன் குடிசையைப் பற்றியும், வர்க்கியைக் காணவேண்டியதைப் பற்றியும் இருந்த சிந்தனைகள், அவனை மீண்டும் விசனம் கொள்ளச் செய்தன. அவன் தன் மலைக்குக் குறி வைத்து நடந்தான்.

வழியில் பாலின் காரியஸ்தன் பாப்பச்சன் அவனைத் தடுத்து நிறுத்தினான்.

"அந்தோணி, நீ எங்கிருந்து வர?"

அந்தோணி துக்கக்குரலில் மரியத்தின் மரணச் செய்தியை பாப்பச்சனுக்குத் தெரிவித்தான்.

"ஒன்ணோட சித்தப்பா விஷயம் தெரியுமில்ல?" என்று கேட்டான் பாப்பச்சன்.

"இல்லியே. சித்தப்பா ஜான் சாருகூட சேந்து வேட்டைக்குப் போயிருந்தாரு. இன்னும் திரும்பல."

"ஒன் சித்தப்பா போலீஸ் ஸ்டேஷன்ல இருக்காரு. கள்ளநோட்டு அடிச்சிக்கிட்டு இருந்தாராம். அதான் ஒன் சித்தப்பா வேலை. எல்லாத்தியும் போலீஸ் கண்டுபுடிச்சிட்டுது. இன்னிக்குக் காலைல செரியான போலீஸு கைவிலங்கு போட்டு கொண்டுகிட்டு போயிருக்காங்க."

அந்தோணி கண்களைச் சிமிட்டாமல் திக்பிரமையுடன் நின்றுவிட்டான்.

"மாத்தனையும் புடிச்சிட்டு போயிருக்காங்க. வர்க்கீஸை காட்டுல யாரோ சுட்டுக் கொன்னுட்டாங்களாம். மாத்தனும் செரியானும் சேர்ந்துதான் வர்க்கீஸக் கொன்னுட்டாங்கன்னும் கேள்விப்பட்டேன்."

பாப்பச்சன் சொன்னதில் சிலதெல்லாம் அந்தோணிக்குப் புரிந்தது. அவ்வளவு கடுமையான செய்திகளையும் ஒரே நேரத்தில் சேர்ந்து கிரகிக்கத்தக்க இதயவலிமை அவனிடம் இல்லாமலிருந்தது.

"ஐயோ, பாப்பச்சன்னே -- நான் இனிமே என்ன செய்றது?" என்று அந்தோணி குலுங்கி அழுதான்.

"நேரா போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயி, ஒன் சித்தப்பாவப் பாரு" என்று பாப்பச்சன் உபதேசித்தான்.

ஆறுமைல் தூரத்திலுள்ள போலீஸ் ஸ்டேஷனுக்கு அந்தோணி தன் உடையில் தீப்பிடித்துவிட்டதுபோல் ஓடினான்.

செரியான் லாக்கப்பில் இருக்கின்றான் என்றும், மாலை ஆறுமணி வரையில் யாரையும் காண அனுமதிக்கக்கூடாதென்றும் இன்ஸ்பெக்டர் ஆணை பிறப்பித்துள்ளார் என்றும் ஒரு கான்ஸ்டபில் அந்தோணியிடம் சொன்னான்.

அந்தோணி ஸ்டேஷன் வராண்டாவில் காத்திருந்தான்.

ஆறு மணிக்கு இன்ஸ்பெக்டர் வந்து சேர்ந்தார். ஒரு கான்ஸ்டபிள் செரியானை இன்ஸ்பெக்டர் அறைக்கு அழைத்துப் போவதை அந்தோணி பார்த்தான். சிறிது நேரங்கழித்து இன்ஸ்பெக்டர் வெளியே சென்றார்.

அந்தோணி பயபக்தியுடன் இன்ஸ்பெக்டரை வணங்கி, "என் சித்தப்பாதான் செரியான். அவர ஒரு மொறப் பாக்க எனக்கு அனுமதி கொடுக்கணும்" என்று கூறினான்.

ஐந்து நிமிட நேரச் சந்திப்புக்கு அனுமதி கிடைத்தது.

செரியான் மகனிடம் விசேஷமாக ஒன்றும் கூறவில்லை.

"நீ குடிசையிலேயே தங்கிக்க. இனிமே என் கேஸு விசாரணை முடியும் வரைக்கும் என்னப் பாக்க வராத. நான் கர்த்தரின் தண்டனைக்காகக் காத்திருக்கேன்."

அந்தோணி அழுதுகொண்டே திரும்பிச் சென்றான்.

ஸ்டேஷன் படியில் இறங்கும்போது, அந்தோணி ஜான் சாரைக் கண்டான். ஜான் மாத்தனை ஜாமீனில் விடுவிக்க வந்து கொண்டிருந்தான்.

"ஒன்னோட சித்தப்பா எங்க பேரையும் சேத்துக் கெடுத்துட்டான். அவன் ஒரு விஷப்பாம்பா இருந்தான்னு எங்களுக்கெல்லாம் தெரியல" என்று ஜான் அந்தோணியைப் பார்த்துக் கொடூரமாகக் கூறினான்.

அந்தோணி தன் கண்களைக் கைகளினால் மூடிக் குலுங்கி அழுதவாறு நின்றதல்லாமல் வெறொன்றும் கூறவில்லை.

அந்தோணி பிணத்தைப் போல் காட்டு வழியாக நகர்ந்தான். நல்ல இருள். குடிசையை அடையக் காட்டு வழியாக ஏழுமைல் தூரம் நடக்கவேண்டும்.

எதிர்காலம் காட்டுவழியைவிட பயங்கரமாகத் தோன்றியதினால், சுற்றுச் சுழ்நிலையைப்பற்றி ஒன்றும் பார்க்காமல், அவன்

தலையைத் தாழ்த்திக் கொண்டு நடந்தான். வழிக்கு அருகே ஒரு குடிசையிலிருந்து *சூட்டுப் பந்தம் கொளுத்திக் கையில் பிடித்துக்கொண்டு அக்கம்பக்கம் பார்க்காமல் அவன் குதித்துக் குதித்து நடந்தான்.

இரவு பத்து ஆனபோது, அந்தோணி குடிசைக்குச் சென்று சேர்ந்தான். ஆசுவாசத்துடன் ஒரு பெருமூச்சுவிட்டுக்கொண்டு, தன் கட்டிலுக்குப்போய் படுக்க யத்தனித்தபோது, கட்டிலில் ஒரு உருவம் கிடப்பதை அவன் பார்த்தான்.

அந்தோணி தன் கையில் இருந்த 'சூட்டை'ப் பற்ற வைத்துக் கட்டிலில் குனிந்து பார்த்தான்.

வர்க்கி இறந்து கிடக்கின்றான், அந்தப் பிணம் நாறத் தொடங்கியிருந்தது.

## 48

நேரம் நடுநிசி கழிந்து விட்டிருந்தது. ஜான் ஆழ்ந்த நித்திரையிலிருந்தான். வாயிலில் யாரோ தொடர்ந்து முட்டியால் கதவுத் தட்டுவதைக் கேட்டு எழுந்த ஜான், "யாரது" என்றான்.

களைப்பு மிகுதியினாலும், பிரமையினாலும் தெளிவில்லாத குழைந்த குரலில்,"நான் தான்......அந்தோணி......" என்ற பதில் வந்தது.

ஜான் விளக்கையேற்றி வாயிற் கதவைத் திறந்தான். அந்தோணி வாசற்படியின் மேல் விழுந்து விடுவதுபோல் தளர்ந்துபோய் நின்று கொண்டிருந்தான்.

"அந்தோணி, என்ன நடந்தது?" என்று ஜான் அந்தோணியைத் தாங்கிப் பிடித்துக்கொண்டான்.

"வர்க்கி சார் என் குடிசையில கட்டுலுமேல செத்துக் கெடக்குறாரு..."

பிறகு ஒன்றும் சொல்ல முடியாமல், உணர்விழந்த நிலையில் அவன் ஜான் மார்பின் மேல் சாய்ந்து விழுந்தான்.

ஜான், அந்தோணியைத் தாங்கித் தூக்கிக் கொண்டுபோய் கட்டிலில் கிடத்தினான். பிறகு, வேலைக்காரன் தொம்மனைத் தூக்கத்திலிருந்து எழுப்பி முதலுதவி செய்யச் சொன்னான்.

ஜான் விடியும்வரை தூங்காமலேயே நேரத்தைச் செலவிட்டான். விடிந்த உடனே அவன் போலீஸ் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டான்.

---

* சூட்டுப் பந்தம் - தென்னை ஓலைகளைச் சுருக்கி ஒரு முனையில் தீப்பற்றவைத்தால் நீண்ட நேரம் வெளிச்சம் கொடுக்கும்)

இன்ஸ்பெக்டரைப் பார்த்து, ஜான் அந்தச் செய்தியை தெரிவித்தான். உடனே, இன்ஸ்பெக்டர் இரண்டு கான்ஸ்டபிள்களை அழைத்துக்கொண்டு, ஜானையும் கூப்பிட்டுக்கொண்டு தொண்டியன் மலைக்கு நடந்தார்.

வர்க்கியின் பிணம் அழுகி நாறத் தொடங்கியிருந்தது. இன்ஸ்பெக்டர் குடிசையின் உள்ளே எல்லா இடங்களையும் நன்கு பரிசோதித்தார். வர்க்கியின் துப்பாக்கியும் பைகளும் மற்றவைகளும் கட்டிலின் அடியில் இருந்ததைக் கண்டு பிடித்தார். வர்க்கியின் தங்கக் கடிகாரம் அவன் கையில் கட்டியிருந்தபடியே இருந்தது. கால் சட்டையின் பையில் பார்சும் இருந்தது. பர்சைத் திறந்து பார்த்தபோது ஒரு சவரனும், நான்கு ஐந்து ரூபாய் நோட்டுகளும், ஏழேகால் அணாவும் கிடைத்தன. பர்ஸின் ஓர் அறையில் ஏதோ ஒரு கிறிஸ்துவ இளம் பெண்ணின் படமும் இருந்தது.

"இது கொலையாக இருக்க வழியில்ல" என்று கூறினார், இன்ஸ்பெக்டர்.

அடுக்களையின் ஒரு மூலையில் ஒரு பூனை இறந்து கிடப்பதாக ஒரு கான்ஸ்டபிள் வந்து தெரிவித்தான்.

இன்ஸ்பெக்டர் அங்கே சென்று பார்த்தார். பூனையின் சடலமும் அழுகி நாறிக்கொண்டிருந்தது. அதன் அருகே திறந்து கிடந்த ஒரு சட்டியில் கருப்பு நிறத்தில் பூஞ்சாணம் பிடித்துக்கிடக்கின்ற ஏதோ பதார்த்தத்தை இன்ஸ்பெக்டர் ஒரு குச்சியினால் கிளறிப் பார்த்தார்.

"வெவிச்ச மரவள்ளிக்கெழங்குன்னு தோணுது. வர்க்கியையும் பூனையையும் கொன்னது இந்தப் பதார்த்தமாத்தான், இருக்கணும். அதுல என்னவோ வெஷம் கலந்துருக்குன்னு தெரியுது" என்று தன் அபிப்ராயத்தைக் கூறினார் இன்ஸ்பெக்டர்.

அப்படி நடக்க வழி உண்டென்றும் ஜானும் சம்மதித்தான்.

"அப்படின்னா இனிமேலும் நேரம் வளத்த வேணாம். பொணத்த இன்னிக்கே எடுத்துக்கிட்டுப் போயி பொதைக் கறத்துக்கு ஏற்பாடு செய்யலாம்" என்று இன்ஸ்பெக்டர் ஜானிடம் கூறினார்.

அந்தோணி, ஜானின் பங்களாவில் எழுந்து உட்கார்ந்து ஜன்னல் வழியாக வெளியே பார்த்தான்.

அவன் மூளைக்கு இன்னும் நல்ல தெளிவு கிடைக்கவில்லை. திக்கெங்கும் புகை நிறைந்துள்ளதுபோல் தோன்றிற்று.

தெளிவில்லாத கனவுகளைப்போல் ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத சிந்தனைகள்.

பங்களாவின் அடிவாரத்தில் உள்ள ரோடு வழியாகச் சில மனிதர்கள் நகர்ந்து கொண்டிருந்தார்கள். முன்னால் கருத்த சவப் பெட்டியும் சென்றது. இடையிடையே சோக சங்கீர்த்தனைகளும் பொங்கி வந்தன.

மரியத்தின் மயான யாத்திரையாக இருக்கும்.

அன்று மாலை, வர்க்கியை உள்ளடக்கிய சவப்பெட்டியும் அந்த வழியாகவே கடந்து செல்வதையும், அந்தோணி அங்கே இருந்தபடியே பார்த்தான்.

மறுநாள் காலையில் அந்தோணி தன் குடிசைக்குச் சென்றான். அங்கே தனியாக வசிக்க அவனுக்குப் பயம் தோன்றாமலில்லை. ஆனால், வேறு வழியில்லையல்லவா?

மரியத்தை மாதா கோயிலில் அடக்கம் செய்த இரவிலேயே, மாத்தன் தன் குடிசையின் உள்ளே - எங்கும் கிளறிப்பார்த்தான். மரியம் பொன்னையும் பணத்தையும் எங்கேயாவது புதைத்து வைத்திருப்பாள் என்று மாத்தன் நம்பியிருந்தான். முட்டுக்கால் ஆழம் வரை பல மூலைகளிலும் தோண்டிப் பார்த்தும் மரியத்தின் புதையலைக் கண்டுபிடிக்க முடியவில்லை. அதனால் அவன் ஏமாற்றத்துடன் படுத்துத் தூங்கினான்.

மாத்தன் மறுநாள் காலையில் எழுந்து மெல்லக் கண்விழித்தான். கஞ்சிக் காய்ச்சி வைத்துவிட்டு அவனை எழுப்ப யாருமில்லை. மரியம் மாதோ கோயிலின் மண்ணுக்குக் கீழே கிடக்கின்றாள் என்று நினைத்த போது மாத்தனுக்கு அழுகை வந்து விட்டது.

அவன் மேரிக்குட்டியை அழைத்தான். மேரிக்குட்டி ஜானிக் குட்டியை மார்போடு அணைத்துக்கொண்டு, மாத்தன் அருகில் மற்றொரு பாயில் தூங்கிக்கொண்டிருந்தாள்.

ஜானிக்குட்டி எழுந்து கூப்பாடு போட ஆரம்பித்தது. மாத்தன் ஜானியைத் தூக்கி மார்போடு அணைத்துக்கொண்டான். மீண்டும் பேரிக்குட்டியை உருட்டிக் எழுப்பினான்.

அவள் எழுந்திருக்கவில்லை.

மாத்தனுக்குப் பயம் வந்துவிட்டது. அவன் அவளுடைய உடம்பைத் தொட்டுப் பார்த்தான். உடலில் நன்கு சூடேறி இருந்தது. அவள் மெல்ல மேல்மூச்சு கீழ்மூச்சு விட்டுக்கொண்டிருந்தாள்.

மாத்தன் அவளைப் பலமாகப் பிடித்துக் குலுக்கி உரத்த குரலில் மீண்டும் மீண்டும் கூப்பிட்டான்.

பதிலில்லை.

மாத்தன் அழும் குழ்ந்தையை மார்பில் அணைத்துக்கொண்டு சிறிதுநேரம் விழித்துக்கொண்டிருந்தான். பிறகு மெதுவாக எழுந்து குழந்தையை இடுப்பில் வைத்துக்கொண்டு வெளியே நடந்தான்.

அந்தோணி குடிசையின் உள்ளே எல்லா இடங்களையும் பெருக்கி வாரிக்கொண்டிருந்தான். அடுக்களையில், வாடிக்கருகிய ஒரு செண்பகப்பூ கிடப்பது அவன் கண்களில்பட்டது. அவன் குனிந்து அதைக் கையில் எடுத்துப் பரிசோதித்தான்.

அப் பிரதேசத்தில் மாதவியின் வீட்டில் மட்டுமே அதுபோன்ற பொன்னிற செண்பகப்பூ உள்ளது என்று அவன் நினைத்தான். மாதவி முன்பெல்லாம் அந்தக் குடிசைக்கு வரும்போது, வழக்கமாகத் தன் தலை முடியில் செண்பகப்பூ சூடியிருந்ததை அவன் நினைத்துப்பார்த்தான்.

அப்போ மாதவி இங்கே வந்திருக்கிறாள். அவள் எதுக்காக இங்கே வந்தாள்?

அந்தோணி தொடர்ந்து சிந்தித்தபோது, பல பயங்கர சந்தேகங்களும் அவன் இதயத்தைத் வளையமிட்டன. இறுதியில் அவன் ஏறக்குறைய, 'அவ என்னக் கொல்ல பலகாரத்துல வெஷம் கலந்து வெச்சிருக்கணும். துரதிருஷ்டமாக - இல்லைன்னா என்னோட அயுசு கெட்டியால -- சாதுவான வர்க்கியண்ணனுக்கு அது நேர்ந்து விட்டது. 'ஓ! கர்த்தரே, தாங்கள் பெண் வர்க்கத்த ஏன் படச்சீங்க?' என்று எண்ணினான்.

வெளியே பார்த்தபோது, குழந்தையை இடுப்பில் தூக்கிக் கொண்டு மாத்தன் தன் குடிசைக்கு வருவதைப் பார்த்த அந்தோணி, துடப்பத்தைக் கீழே வைத்துவிட்டு வராண்டாவிற்குச் சென்றான்.

"மாத்தண்ணே, என்னா விசேஷம்?" எனறு கேட்டான் அந்தோணி.

மாத்தன் பெருமூச்சுடன் கண்களை உருட்டி விழித்துக்கொண்டு சொன்னான்: "மேரிக்குட்டிய உலுப்பி உலுப்பி கூப்பிட்டாலும் பேசமாட்டேங்கறா."

"ஐயோ கர்த்தரே! கொழந்தைக்கு என்னாச்சு?"

"தெரியலியே. கூப்பிட்டா பேச மாட்டேங்கறா" மாத்தன் அதே தொனியிலேயே சொன்னான்.

"டாக்டர்கிட்ட காட்டிப் பாத்தியா"

"அவுங்க எங்க இருக்காங்க? எனக்கொண்ணும் தெரியாதே. அந்தோணி நீ கொஞ்சம் போயி வாயேன். நான் வூட்டுக்கு போறேன்."

அந்தோணி சம்மதித்தான். அவன் சட்டை போட்டுக்கொண்டு பாம்பாட்டி தாமஸின் வீட்டுக்குப் புறப்பட்டான்.

மத்தியமான போதுதான் அந்தோணி, டாக்டரை அழைத்துக்கொண்டு மாத்தனின் குடிசையை அடைந்தான்.

டாக்டர் மேரிக்குட்டியை பரிசோதித்தார். அப்போதும் அவள் உணர்வு இல்லாமல் தான் படுத்துக்கொண்டிருந்தாள்.

டாக்டர் நீண்ட நேரம் பரிசோதித்தார். பின்பு, நிராசையுடன் தலையை ஆட்டிக்கொண்டு, "ஸெரிப்ரல் மலேரியான்னு தோணுது. மூளைய பாதிச்சுட்டுது. அதனால், காப்பாத்தறது ரொம்பக் கஷ்டமான காரியம்தான், டவுனுல உள்ள ஆஸ்பத்திரிக்கு கொண்டு போனா, ஒரு வேளை காப்பாத்தறதுக்கு வழி இருக்கும்" என்று கூறினார்.

நகர ஆஸ்பத்திரி! 35 மைல் தூரம்!....

அந்தோணியும் மாத்தனும் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக்கொண்டு பேசாமல் நின்றார்கள்.

டாக்டர் ஓர் இன்ஜெக்ஷன் போட்டுப் பார்த்தார். அதனால், அணுவளவு கூட எவ்விதப் பலனும் தெரியவில்லை......

மேரிக்குட்டியை யாரும் நகர் ஆஸ்பத்திரிக்கு எடுத்துக் கொண்டு போகவில்லை. இரண்டாம் நாள் விடியும் போது, அவள் அங்கேயே மீளாத் துயிலில் அழ்ந்துவிட்டாள்.

மேரிக்குட்டியின் பிணத்துடன் மாதாகோயிலுக்கு அந்தோணியும் போயிருந்தான். ஆனிக்குட்டியின் அருகிலேயே மேரிக்குட்டியையும் அடக்கம் செய்தார்கள். அந்தக் காட்சியைப் பார்த்துக்கொண்டு நின்ற போது, அந்தோணியின் கண்கள் நனைந்து விட்டன.

மறுநாள் மாத்தன் ஜானியைத் தூக்கிக்கொண்டு மாதா கோயிலுக்குச் சென்று ஃபாதர் சள்ளிப்பரம்பனைப் பார்த்து, தன் சங்கடமாக நிலைமையை தெரிவித்தான்.

"இந்தக் கொழந்தையோட தாயும் தமக்கையும் செத்துட்டாங்க. நான் எங்கியாவது போயிடலாம்னு பாக்கறேன்" என்று மாத்தன கூறினான்.

குழந்தையை அந்த ஃபாதருக்காகக் காணிக்கை வைத்ததுபோல் அந்த வராண்டாவிலேயே படுக்க வைத்துவிட்டு, மாத்தன் திரும்பி நடந்து சென்றான்.

## 49

மாதம் ஒன்பது கழிந்தது.

செரியான் பேரில் உள்ள வழக்கில் தீர்ப்புச் சொல்லப்பட்டது.

வர்க்கீஸை வேண்டுமென்றே சுட்டுக்கொலை செய்ததற்கும், கள்ள நோட்டு அச்சடித்ததற்கும் இருபத்தி இரண்டு வருடக் கடுங்காவல் தண்டனை வழங்கப்பட்டது.

வழக்கில் மாத்தனும் ஒரு சாட்சியாக இருந்தான்.

செரியானுக்குக் கைவிலங்கு போட்டு வெளியே அழைத்து வந்தார்கள். அந்தோணி கண்ணீர் வடித்தவாறு சித்தப்பனின் முன்னால் சென்று நின்றான்.

"நம்ப ஊருக்குப் போயிடு" என்று செரியான் தன் இருள்சூழ்ந்த இருபத்தி இரண்டு வருடங்களை விழித்துப் பார்த்துக்கொண்டு அந்தோணியிடம் சொன்னான்.

அந்தோணியும் மாத்தனும் பஸ்ஸில் ஏறி அந்த மலைச்சரிவை அடைந்தார்கள். அவர்கள் அதன் பிறகு தொண்டியான் மலைக்கு நடந்து சென்றார்கள்.

"நான் நம்ப ஊருக்குத் திரும்பிப் போவப் போறேன். நீ என்னா செய்யப்போறே மாத்தன்னே?" என்று அந்தோணி கேட்டான்.

"என்னயும் கூட கூட்டிக்கிட்டுப் போயேன்" மாத்தன் முகத்தைச் சாய்த்து உதடுகளை மேல்புறம் தூக்கி, இரக்கத்துடன் வேண்டினான்.

அந்தோணி சிறிது நேரம் ஆலோசித்தான்.

"கொழந்தய ஒங்கூட எடுத்துக்கல?"

"அவனக் கன்னியா ஸ்திரீகள் வளக்கட்டும் - அவனுக்கு அவுங்க கிட்ட இருந்தாதான் சௌகரியமா இருக்கும்" என்றான் மாத்தான்.

குளியன் மலைக்குப்போகும் சிறுவழியின் அருகில் சென்றதும் அந்தோணி அங்கே நின்றான்.

"நான் என் வூட்டுக்குப் போவல. எனக்குப் பயமா இருக்கு. அன்னிக்கு ஒருநா ராத்திரி மரியத்தின் ஆவி என்னத் தூக்கத்துல புடிச்சி அமுக்கி ரொம்ப தொந்தரவு படுத்திட்டுது. அதுக்குப் பின்னால நான் அங்கத்தூங்கியதே இல்ல. நானும் ஒன் வூட்டுக்கு வர்றேன், அந்தோணி" என்று மாத்தன் கீழே பார்த்துக்கொண்டே சொன்னான்.

இருவரும் அந்தோணியின் குடிசையை அடைந்தார்கள்.

அந்தோணி கஞ்சி காய்ச்சினான். இருவரும் கஞ்சிக் குடித்தார்கள். மாத்தன் பாயை விரித்துத் தூங்கத் தொடங்கினான். அந்தோணி இருண்ட சிந்தனைகளில் மூழ்கி, எதிர்காலத்தைப் பற்றி ஒரு முடிவும் பிடிப்பும் கிடைக்காமல், வராண்டாவில் தனியாக உட்கார்ந்திருந்தான். அப்போது மூன்று பேர்கள் குடிசைக்கு நேராக வருவதைக்கண்டு, அவன் உற்றுப் பார்த்தான்.

அவர்கள் குடிசையின் முற்றத்தை அடைந்தார்கள். இரண்டு கிறிஸ்துவர்களும் அந்தப் பிரதேசத்திலுள்ள ஒரு பெரிய மனிதரும் இருந்தார்கள். கிறிஸ்துவர்களில் ஒருவனை அந்தோணிக்குப் பார்த்த பழக்கம் உண்டு. மற்ற இருவரும் முற்றிலும் அறிமுகம் இல்லாதவர்கள்.

அந்தோணி எழுந்து அவர்களை உபசரித்து உட்காரச் செய்தான்.

"ஒனக்கு நேர்ந்த துக்கத்தைப் பற்றி எங்களுக்குத் தெரிஞ்சது. செரியானுக்கு இருபத்திரண்டு வருஷக் கடுங்காவல் தண்டனைக் கெடைச்சதைக் கேட்டு நாங்க ரொம்பத் துக்கப்படறோம். ஒன்னப் பாத்து எங்க அனுதாபத்த சொல்லத்தான் நாங்க இங்க வந்திருக்கோம்" என்று காதில் சிவந்தக்கல் வைத்த கடுக்கன் அணிந்த அந்தப் பெரிய மனிதர், நட்பும் அனுதாபமும் தளும்புகிற குரலில் கூறினார்.

"ஒங்க அன்புக்கு ரொம்ப நன்றி." என்று அந்தோணி துக்கத்தை அடக்கிக்கொண்டு சொன்னான்: ஒங்கள யாரையும் எனக்குப் புரியலியே" என்று மேலும் கூறினான்.

"என் பேரு குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியார். இவுரு மிஸ்டர் தறமுட்டில் சாக்கோ - நாங்க ரெண்டுபேரும் கூட்டு வெவசாயம் செஞ்சி வரோம். அவரும் ஒங்க ஊர்க்காரர்தான். இப்ப மைசூர்ல ஒரு ஓட்டல் நடத்தி வறாரு. அவரு பேரு வரீதுகுஞ்ஞு."

வரீதுகுஞ்ஞுவும் குடிபெயர்ந்து வந்தவர்களின் கூட வந்தவர்தான். ஆனால் இங்குள்ள நிலைமையைப் பார்த்ததும், இங்கிருந்து மைசூருக்கு ஓடிப்போய்விட்டான்.

"நீ மைசூருக்குப் போயி எவ்வளவு நாளாவுது வரீது?" என்று சாக்கோ கேட்டான்.

"ரெண்டு வருஷம் முடிஞ்சிட்டுது" என்று கூறிய வரீதுக்குஞ்ஞு, "எனக்கு வழிச்செலவு கொடுத்து இங்கக் கூட்டியாந்தது பொட்டக்காயம் வர்க்கீஸண்ணன்தான் அவரும் அவுரு குடும்பமும்

மலைச்சொரம் கண்டு செத்துட்டாங்கன்னு கேள்விப்பட்டேன். நாங்க இங்க வந்த உடனே இங்குள்ள மலைசொரம் எனக்குத்தான் மொதல்ல வந்தது. திருவிதாங்கூரு போலீஸ்காரங்க அடி இதவிட பரவாயில்லன்னு எனக்குப் புரிஞ்சுது. ஆனா, ஊருக்குத் திரும்பிப்போகவும் தோணல. நான் மைசூருக்கு போயிட்டேன். அங்க ஒரு தொரைக்கு வேலைக்காரனாச் சேந்தேன். தொரைக்கு என்னை ரொம்பப் புடிச்சிட்டுது. தொரை, தன் சொத்தையெல்லாம் வித்துட்டு யுத்தத்துக்கு போவ முடிவு செஞ்ச போது, எனக்கு வெகுமானமா 500 ரூபா கொடுத்தாரு. நான் மைசூரிலேயே ஒரு சின்ன ஓட்டலத் தொறந்தேன். இப்ப ஓட்டல்ல தெனந்தோறும் பத்து ரூவாக்குக் கொறையாம லாபம் கெடைக்குது. பழைய சிநேகிதங்களைப் பார்க்க இங்க வந்தேன். அன்னிக்கு எங்க கூட்டத்திலே வந்த ஒருத்தர்கூட இப்பக் காண முடியல. சாக்கோச்சன் டீக்கடை தொடங்கி, மறுபடி ஒரு அடிதடி வழக்குல ஆப்புட்டு அஞ்சு வருஷம் ஜெயில் தண்டனை அனுபவிக்கறார்ன்னு கேள்விப்பட்டேன். அப்பதான் எதேச்சையா சாக்கோ சாரைப் பாத்தேன்." என்று தன் வரலாற்றைக் கூறினான்.

வரீது குஞ்ஞு. குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியாரின் எதிரே திரும்பி நின்று, "சாக்கோசாரை எனக்கு ஊர்ல.இருக்கும்போதே தெரியும். சாக்கோ சாரு ரெண்டாவதுல எனக்கு வாத்தியாரா இருந்தாரு" என்று தொடர்ந்து கூறினான்.

உறக்கத்தின் மும்முரத்தில் இருந்த மாத்தனைக் கூர்ந்து பார்த்துவிட்டு,"அது யாரு" என்று வரீது குஞ்ஞு கேட்டான்.

"மாத்தண்ணன். அவுரு பொண்டாட்டியும் கொழந்தைங்களும் செத்துப் போய்ட்டாங்க. இவனும் கதியில்லாமப் போயிட்டான்". என்று அந்தோணி கூறினான்.

"ஓஹோ—நம்ம மாத்தண்ணனா? எங்கக் கூட்டத்துல வந்தவருதான்" தன் கூட்டாளிகளில் ஒருவனைக் கண்டுபிடித்து விட்ட மகிழ்ச்சியுடன் வரீது குஞ்ஞு மாத்தனையே கூர்ந்து பார்த்தான்.

"அவரும் ஒன்கூடத்தான் இருக்காரா அந்தோணி"

"இல்ல மாத்தண்ணனுக்குச் சொந்த நெலமும் குடிசையும் இருக்கு. மனைவியும் மக்களும் செத்துட்டாங்க. சின்னக் கொழந்தய அநாத விடுதியில வுட்டாச்சி. இப்ப என் கூட ஊருக்கு வரத் தீர்மானிச்சி இங்க வந்திருக்காரு"

"அப்ப நீ ஊருக்குத் திருப்பிப் போவத் தீர்மானிச்சிட்டியா அந்தோணி?" என்று குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியார் கேட்டார்.

"அப்புறம் என்ன செய்யறது?"

"இந்த நெலங்கள என்ன செய்யப்போறீங்க?" என்று சாக்கோ கேட்டான்.

"அதையெல்லாம் ஜான் சார் ஏத்துக்கிட்டாரு. சித்தப்பா, ஜான் சாருக்கு ஆயிரம் ரூவா கொடுக்கணுமாம். அதில்லாம சித்தப் பாவின் வழக்குக்கும் ஜான் சார் கொஞ்ச பணம் செலவு செஞ் சாருன்னும் சொன்னாரு. என் பயணச் செலவுக்கும் மத்ததுக்குமா இருபத்தி அஞ்சி ரூவா எங்கிட்ட கொடுத்திருக்காரு."

"மாத்தண்ணன் நெலங்க எண்ணாச்சி?" -- குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியார் கேட்டார்.

இன்னும் ஒண்ணும் செய்யல. என்ன செய்யணும்னு எங்களுக்குத் தெரியல"

"அத எங்களக்குக் கொடுக்க முடியுமா? என்ன மதிப்போ அந்த வெலய நாங்க தர்றோம். இது ஒங்களுக்குதவி செய்யணும் கிரத்துக்காகத் தான் சொல்றோம்."

"நான் மாத்தண்ணன் கிட்ட கேக்கறேன்" என்று கூறிக் கொண்டே அந்தோணி மாத்தன் அருகில் சென்று அவனை உருட்டி எழுப்பினான்.

மாத்தனை எழுப்புஸது என்பது மிகவும் கஷ்டமான வேலை தான். ஒரு வழியாக அவனை எழுப்பிவிட்டார்கள் என்றே சொல்லாம்.

மாத்தன் எல்லோருடைய முகத்தையும் விழித்துப் பார்த்தான்.

"ஓங்க நெலங்கள விக்க சம்மதமான்னு இவுங்க கேக்கறாங்க மாத்தண்ணே" என்று அந்தோணி உரத்த குரலில் சொன்னான்.

மாத்தன் அப்படியே முழித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். தனக்கு. விற்பதற்காக நிலங்கள் உண்டென்ற செய்தி அவனுக்குத் தெரியுமோ என்னமோ! அவைகளெல்லாம் இப்போதும் மரியத் தினுடையதுதான் என்பது அவனுடைய எண்ணமும் நம்பிக்கையு மாகும்.

"என்ன சொல்றீங்க?" அந்தோணி மீண்டும் கேட்டான்.

"எனக்கு என்னா செய்யறதுன்னு தெரியலியே" மாத்தன் உறுதியுடன் சொன்னான்.

"விக்கறதுதான் நல்லது" என்று அந்தோணி உபதேசித்தான்.

"அந்தோணி ஒன் இஷ்டம்போல செய்யி," என்று மாத்தன் கரடியைப் போல கோட்டுவாய் விட்டுக்கொண்டு சொன்னான்.

"சரி, என்ன வெலக்கி பாக்கறீங்க?" என்று அந்தோணி நம்பியாரிடம் கேட்டான்.

நாங்க குளியன் மலைக்குப் போயிப் பார்த்துட்டுதான் வர்றோம். 300 ரூபா தர்றோம். நெலங்கள எங்களுக்கு எழுதிக்கொடுங்க."

"எங்களுக்கு நல்லது கெட்டது சொல்ல யாருமில்ல," என்று உதவியற்ற தொனியில் கூறிய அந்தோணி, "நீங்க என்ன சொல்றீங்களோ அத நாங்க ஒத்துக்கறோம்" என்று கூறி முடித்தான்.

சாக்கோவும் நம்பியாரும் அன்னியோன்னியம் எதையோ தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள்.

"சரி," குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியார் உரத்தக் குரலில் சொன்னார்.

"நாளைக்கே அதயெல்லாம் எழுதி ரெஜிஸ்டர் செஞ்சுக்கலாம். நாங்க நானூறு ரூவா தர தீர்மானிச்சிருக்கோம். இது வியாபாரமல்ல. ஒரு ஒதவிதான்."

"அது எனக்குப் புரியுது. நான் ஒலகம் தெரியாத ஒரு அப்பாவிப் பையன். இவுரு ஒரு கோமாளி. எங்க பாதுகாப்பாளரைப்போல நீங்க ரெண்டுபேரும் எல்லாத்தியும் செஞ்சி கொடுத்தா போதும்," என்று அந்தோணி நன்றியுடன் வணங்கிக்கொண்டே சொன்னான்.

"நீ ஊருக்குப் போவணும்னு கட்டாயமா அந்தோணி? எங்க வெவசாயத்துல நீயும் இங்கியே இருந்துடேன்." என்று நம்பியார் கேட்டார்.

"இல்ல" அந்தோணி தலையை ஆட்டியவாறு, "நான் இந்த ஊர வெறுக்கறேன். இங்க நான் அன்பு செலுத்தறத்துக்கு எந்தப் பொருளும் இல்ல. ஒரு கெட்டப் பேரு எடுத்தவரின் பாரம்பரியத்த சொல்லிக்கிட்டு இங்க தங்க நான் இஷ்டப்படல. ஒங்க அன்புக்கும் எரக்கத்துக்கும் ரொம்ப நன்றி. கர்த்தர் ஒங்கள அனுக்கிரகிக் கட்டும்" என்று கூறினான்.

அவர்கள் மூவரும் மறுநாள் வருவதாகக் கூறி விடைபெற்றுச் சென்றார்கள்.

அந்தோணி அந்த வராண்டாவிலேயே உட்கார்ந்திருந்தான்.

மாலை மங்கியது. இருள் படர்ந்தது. நிலவு உதித்தது.

சந்திரக்கிரணங்களில் மூழ்கி நிற்கும் அமைதியான வனக்காட்சிகளில் லயிக்காமல் அந்தோணியின் இதயம் இருண்டு மூடிக் கிடந்தது.

## 50

மூன்றாம் நாள். நேரம் வெளுத்தது.

அந்தோணி தன் சாமான்களையெல்லாம் கட்டி வைத்து - குஞ்ஞிக்கிருஷ்ணன் நம்பியார் அனுப்பித்தருவதாக ஏற்றுக் கொண்ட மாட்டு வண்டியை எதிர்பார்த்து உட்கார்ந்திருந்தான். மாத்தன் சாமான்களைக் கட்டி வைக்க குளியன் மலைக்குப் போயிருந்தான்.

வண்டி, தொண்டியன் மலையில் கீழேயுள்ள சந்து வழியில் வந்து நின்றது. அந்தோணியும், வண்டிக்காரனும் சேர்ந்து குடிசையிலிருந்த சாமான்களையெல்லாம் கொண்டு வரத் தொடங்கினார்கள்.

எல்லாம் முடிந்துவிட்டது. அந்தோணி வண்டியில் ஏறி உட்கார்ந்து கொண்டான்.

அவன் தொண்டியன் மலையிடம் இறுதியாக விடைபெற்றுக் கொண்டான். அந்த மாட்டு வண்டி மலைச்சரிவுகளின் அடிவாரத்திலுள்ள பாறைகள் நிறைந்த கரடுமுரடான பாதையில் ஆடி அசைந்துகொண்டு நகரத் தொடங்கியது. அந்தோணியின் நிலங்கள் கண்பார்வையிலிருந்து மங்கி கடைசியில் ஒரு புல் பாயைப் போல் தூரத்தில் தோன்றியது. ஒரு அடிமையைப்போல் அங்கே அவன் காலி செய்துவிட்டு வந்த குடிசையும் தெரிந்தது.

அவன் அந்த மலை நிலங்கள் எதிரே திரும்பி உட்கார்ந்து, கற்பனையில் மூழ்கினான்.

தன்னுடைய செடிகள் வாடி வதங்கி மண்ணாகிப்போகும். அந்தக் குடிசையும் நிலத்தில் இடிந்து விழுந்து மறைந்துபோகும். அவைகளையெல்லாம் நினைத்தபோது அவனுக்குச் சங்கடம் தோன்றவில்லை. 'எல்லாம் நாசமாவட்டும். இந்த எடத்தைப் பத்திய நினைவுகள்கூட மனசிலேயிருந்து நாசமாவட்டும்' என்று அவன் மனதிற்குள் கூறிக்கொண்டான். என்றாலும், அந்த இடங்களைத்தான் நிரந்தரமாக விட்டு விட்டுப் போகிறோம் என்றும், தன் வாழ்க்கைத் தேர்வுகளுக்கு ஒரு சிறு பாடசாலையாக இருந்து வந்த அந்த வன பாகங்களைத் தான் இனி ஒரு போதும்

காணமுடியது என்றும் நினைத்தபோது, அவனுடைய இதய நாளத்தில் ஒரு வலி எழுந்தது. சம்பத்தில் நடந்து நிகழ்ச்சிகளின் நினைவுகளை அழித்துவிட்டு, அவன் அடிக்கடி பெருமூச்சுக்கள் விட்டுக்கொண்டிருந்தான். மூன்று வருட்ங்களுக்குள் ஒன்றையும் தேடுவதற்கு முடியவில்லை. பாதிரியாவதற்கான சூழ்நிலையும் தோல்வியடைந்துவிட்டது. அதற்குத் தடை கொண்டு வந்த அந்த இரவைப் பற்றிச் சிந்திக்க அவன் பயந்தாலும், அந்த உடலுறவுக் காட்சியின் நிழல்கள் ஆக்டோபஸ்ஸின் கைகளைப்போல் அவனுடைய சிந்தனைகளை நெருக்கின. அந்த நிழல் கூட்டத்தி லிருந்து தப்பித்துக் கொள்வதற்காக அவன் சுற்றிலுமுள்ள மலைச் சரிவுகளில் கண்களைப் படரவிட்டான்.

காலிக் குடிசைகளும், கருகிய பயிர் நிலங்களும் சிதறிக்கிடக்கும் குன்றின் பாகங்களில் அங்கங்கே காணப்பட்டன. நான் உதறி விட்டுச்செல்லும் தொண்டியன் மலையைப் போல் அநாதையாகக் கிடக்கும் நிலங்கள் அவை. அங்கே வியர்வை சிந்தி வேலை செய்து கொண்டிருந்தவர்களெல்லாம், எங்கே போனார்கள்? இறந்து போய் மண்ணுக்குக் கீழே கிடக்கலாம். அல்லது திரும்பவும் தங்கள் ஊருக்கே சென்றிருக்கலாம். அங்கிருந்த சிறு சிறு குடியிருப்புகள், விவசாய இடங்கள், விளைச்சல்கள், வேலிகள் ஆகிய எல்லாவற் றையும் குரூரமான, கண்ணுக்குப் புலப்படாத ஒரு சுரம் கசக்கிக் கலைந்து விட்டிருந்தது. இவை இயற்கையின் சீட்டாட்டம். மலை சுரம் என்று துருப்புச் சீட்டைக் கையில் மறைத்து வைத்துக் கொண்டு வெற்றி முழக்கம் முழங்குகிறது அந்த இயற்கை. காட்டில் அடர்த்தி என்னும் முகமூடி அணிந்து, மண் அட்டைகள், கருஞ் சேரட்டைகள் ஆகியவைகளின் கால் சலங்கைகளைக் குலுக்கிக் கொண்டு நடனம் ஆடுகின்ற ஏகாந்த சுதந்திரவாதியான அந்தப் பழைய வனப்பிரதேசத்தின் கட்டளைக்கே அந்த மலைநிலங்கள் மீண்டும் மெல்ல மெல்ல வெயில் பதுங்கிச் சேர்ந்து கொண்டிருந்தன....

அதோ மரங்கள் வெட்டும் சப்தம் கேட்கின்றது. புதியதாக வந்த கூட்டத்தார்கள் அடுத்த குன்றில் மேடையில் கட்டைகளைக் கொத்திப் பறிக்கிறார்கள். நோய்களின் கொடுமைகளும், மிருகங்களின் அட்டூழியங்களும் உண்டாக்கிய கொடூரமான நினைவுச் சின்னங்களுக்கு அருகிலேயே அவர்கள் மற்ற மலைகளை நிர்வாணமாக்கி மயங்குகிறார்கள். மரணத்தின் மணம் பரவும் அந்த மண்ணிலேயே புது மனிதர்கள், தங்கள்

உற்பத்திக்காகப் படுக்கையைத் தயார் செய்கிறார்கள். இவை இயற்கையின் குரூரமான விநோதங்களாகும்.

மாட்டு வண்டி குளியன் மலையைச் சுற்றிக்கொண்டு, கீழேயுள்ள பொதுப்பாதையை அடைந்தது.

மாத்தன் தன் குடிசையையும், சுற்றுப் புறத்தையும் எல்லாம் மீண்டும் கொத்தித் தோண்டிப் பார்த்துவிட்டான். ஆனால், மரியத்தின் புதையல் ஓர் இடத்தில் கூடக் கிடைக்கவில்லை. கடைசியில் அவன் ஏமாற்றத்துடன் மரியத்தையும், தன்னை வஞ்சித்த தெய்வத்தையும் சபித்துக்கொண்டு, மண் வெட்டியையும் குந்தாலியையும் காட்டில் தூக்கி எறிந்து விட்டு, பெட்டியையும் சாமான்களையும் கட்டித் தயார் செய்து அந்தோணியின் வருகையை எதிர்நோக்கிக் காத்திருந்தான்.

பத்து மணிக்கு, அந்தோணி வண்டியுடன் வந்து சேர்ந்தான்.

அந்தோணியும் வண்டிக்காரனும் மாத்தனும் சேர்ந்து சாமான்களை எல்லாம் வண்டியில் ஏற்றினார்கள். மாத்தன் வண்டியில் ஏறி வைக்கோல் கட்டின் மேல் சாய்ந்து படுத்திக் கொண்டான். வண்டி நகர்ந்ததும் அந்தோணியும் தாவி ஏறினான்.

காடுகள் முடியத் தொடங்கின. மாட்டு வண்டி பெரிய சமவெளிப்பாதைக்குள் திரும்பியது.

பின்னுக்குச் சென்ற மலைப் பிரதேசங்களை அந்தோணி கடைசியாக ஒருமுறை பார்த்தான்.

நிலாவைப் போல் வெளுத்த வெய்யில் மலைகளும், குன்றுகளும், பள்ளத்தாக்குகளும் அங்கங்கே தெளிந்தும் மங்கியும் கிடக்கின்றன. தங்கள் கவர்ச்சியால் மயக்கும் சுற்றுச் சூழல்கள் தூரத்தில், கிழக்குத் திசையில் தெளிவான ஆகாயத்தின் நிலைக்கண்ணாடியில் பிரதிபலிக்கும் இயற்கையினுடைய நிலக்கூரையைப் போல் பெரிய மலைத் தொடர்கள் தெளிந்து தெரிந்தன. அசாதாரணமான அந்த மலைப்பிரதேசத்தில் ஒழுங்கில் கண்கள் மயங்கி விடுகின்றன. கனவின் வர்ணக் கலவைகள் பதிந்த ஓவியங்கள்.

அந்தோணி திடீரென்று அந்த மயக்கத்திலிருந்து விழித்துக் கொண்டான். மாத்தன் வைக்கோல் கட்டில் சாய்ந்து சுகமாகக் குறட்டை விட்டுத் தூங்கிக்கொண்டிருந்தான். நிலங்களை விற்றதில் கிடைத்த 400 ரூபாயை மடியில் முடிந்து வைத்திருந்தான்.

அந்தோணி, முகத்தைச் சுளித்துக் கண்களைச் சிமிட்டிக் காரணமற்ற வெறுப்புடன் கூறினான்:

"கஞ்சாவின் வஞ்சனையில் முளைத்து வரும் காட்சிகள்! இந்த அழகுகள் அத்தனையும் அழிக்கும் குணம் உள்ளவைகளாகும். தனிப்பட்ட அழகாகத் தோன்றும் இந்த விசாலமான காடுகளின் விஷக்காற்றச் சுவாசித்து அங்குல அங்குலமாக இறந்து மனித சகோதரர்களே, நீங்களும் இந்த இயற்கையின் ஓர் அங்கமாகி விட்டீர்கள். அன்பால் அணைப்பவர்களை விஷமேற்றிக் கொல்லும் இந்த விஷக்கன்னி, இனிமேலும் ஆயிரக்கணக்கான மனிதர்களை வசீகரிப்பாள்; அவர்களுடைய ஜீவ இரத்தத்தை வறள வைப்பாள். கடைசியில் அவர்களை அப்படியே தனக்குள் உறிஞ்சிக் கொள்வாள்"

அந்தோணி இறுதியாக மாதவியை நினைத்துப் பார்த்தான்:

"ஆமாம்........காமப் பிசாசே, இந்த மலைப் பிரதேசத்தின் உடன் பிறப்பான நீயும் மற்றொரு விஷக்கன்னிதான்.

அந்த விஷக்கன்னிகளிடமிருந்து தன்னைக் காப்பாற்றியது. கர்த்தரான யேசுதான் என்ற உணர்வுடன், அவன் முழு பக்தியுடன், பைபிளை விரித்துப் படிக்கத் தொடங்கினான்.

* * *

Printed at The Central Electric Press A 12/1 Naraina Indl. Area, Phase-I, New Delhi-110028